# குமுத வாசகம்

முதல் படிவம்

(பொதுப் பகுதி)




ஆசிரியர்
வித்துவான், பாலூர். கண்ணப்ப முதலியார்
தமிழ் விரிவுரையாளர்
நியூகாலேஜ், இராயப்பேட்டை, சென்னை

வெளியிட்டவர்
டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ்
சென்னை

 1954

# முன்னுரை

———

இந்நூல், சென்னை அரசியலார் புதிதாக வெளியிட்டுள்ள 1951-ம் வருட பாடதிட்டத்தின்படி எழுதப்பட்டுள்ளது. இது எல்லா மாணவர் களும் படித்தற்குரிய பொதுப் பகுதியை மட்டும் தன்னகத்தே கொண்டு திகழ்கிறது.

இலக்கணப் பாடத்தைத் தனித்துப் பயில்கையினும், உரைநடைப் பாடத்தோடு தொடர்ந்து பயிலின், அப்பாடத்தில் ஓர் உணர்ச்சியும் ஊக்கமும், தோன்றும் எனக்கருதி, ஒவ்வோர் உரைநடைப் பகுதியின் கீழும் இலக்கணப் பாடம் எழுதப்பட்டு இருப்பது, மாணவர்கள் தம் தமிழ அறிவைச் செம்மையாகப் பெறப் பெருந்துணையாகும் என்பதில் ஐயமில்லை.

அறிவு வளர்ச்சிக்குரிய பலதிறப் பாடங்களும், ஒவ்வொரு பாடத் தின் முடிவிலும் வினக்களும், பயிற்சியும், வேண்டிய அளவுக்கு அருஞ் சொற்பொருளும் இந்நூல் தன்கண் கொண்டிருத்தலால், "பொன்மலர் நாற்றம் உற்றூற்போல்" மாணவர் ஆயாசம் இன்றிப் பாடங்களை நன்கு உணர்ந்து, தம் மனத்தில் பதியவைத்துக் கொள்வர் என்பதை அறுதி யிட்டு உறுதியாகக் கூறலாம்.

இந்நூலில் காணும் பாடல்கள் சிலவற்றை இதில் இணைத்துக் கொள்ளத் தம் இசைவைத் தெரிவித்த அவற்றின் உரிமையாளர்கட்கு என் நன்றியுள்ள வணக்கம் உரித்தாகுக.

இந்நூலைத் தமிழ் உலகம் ஏற்று, என்னை ஆதரித்து, ஊக்கம் அளிக்க வேண்டுகிறேன்.

ஆக்கியோன்.

# உள்ளுறை

## பொதுப் பகுதி

### உரைநடை



### செய்யுள்




# 1. உலகம் போற்றும் உத்தமர்

1. "யார் ஒருவர், உள்ளத்தில் வஞ்சகம் இன்றியும் கள்ளம் இன்றியும் வாழ்வு நடத்துகிறார்களோ, அவர் களே உலக மக்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் இடப் பெறுவர்" என்பது தெய்வப்புலவர் திருவள்ளுவரின் கருத்து இக் கருத்துக்கும் இவ்வுண்மைக்கும் எடுத்துக்காட்டாய் அமைந்தவர் நம் உலகப் பெரியாராகிய மகாத்மா காந்தியே ஆவார்.

2. காந்தியாருடைய முழுப்பெயர் மோகனதாஸ் கரம்சந் காந்தி என்பது. இவர் வடநாட்டில் போர்பந்த என்னும் இடத்தில் 1869-ஆம் ஆண்டு அக்டோபர் மாதப் 2-ஆம் தேதி கரம்சந்திர காந்தி என்னும் உத்தமருக்கும் புத்தளிபா என்னும் உத்தமியாருக்கும் திருக்குமாரராகப் பிறந்தார். இவர் இளமை முதற்கொண்டே நன்னடக்கை உண்மை, பொறுமை முதலிய நற்குணங்களைக் கொண் விளங்கினர். இவர் மெட்ரிக்குலேஷன் படிப்பைப் படித் முடித்தவுடன், மேனாடு சென்று வழக்கறிஞர் துறையில் படித்துத் தேற விரும்பினர். இவர் மேனாடு சென்று படித்த குரிய வசதி இவருக்கு இருந்தது. இவரது தந்தையார் பெர் திவான் பதவியில் இருந்தவர். ஆனல், தம் மகன் மேற்கு நா செல்வதுபற்றித் தாயார் புத்தளிபா அம்மையாருக்கு

டித்தமில்லை. அவ்வம்மையார் தம் மகனை மேனாடு செல்ல
வாட்டாமல் தடைசெய்ய எண்ணியதற்கு இரு காரணங்கள்
ண்டு. ஒன்று தம் அருமை மகனைப் பலநாள் பிரிந்திருக்க
வண்டுமே என்பது ; மற்றொன்று மேனாட்டுக்குச் செல்பவர்
ய ஒழுக்கமாகிய குடியில் பழகிவிடுவரே என்பது. ஆனால்,
ம் மகனுடைய வேட்கையையும் நிறைவேற்ற வேண்டு
மன்னும் எண்ணமும் அம்மையாரைத் தூண்டி நின்றது.
ஆகவே, தம் மகன் மூன்று வாக்குறுதிகளைக் கொடுத்து
ட்டு, அவற்றின்படி நடந்துகொள்வதானால், மேனாடு செல்ல
ாம் என்று தம் இசைவைத் தெரிவித்தார். அம் மூன்று
ாக்குறுதிகள் : 1. மதுவினைப் பருகுவதில்லை, 2. புலால்
சிப்பதில்லை, 3. ஐரோப்பிய மாதருடன் நெருங்கிப் பழகுவ
ல்லை என்பன. அவ்வாறே வாக்குறுதிகளைத்தந்து காந்தியார்
மனாடு சென்றார்.

3. காந்தியார் தம் தாயாருக்குக் கொடுத்துவந்த
ாக்குறுதிகளை மகா மந்திரங்களாகக் கொண்டு அவற்றைப்
பாற்றிவந்தார். மேனாட்டில் குடித்தல், புலால் புசித்தல்,
ாதருடன் கூடிப்பழகுதல் பெரு நாகரிகமாகக்
ருதப்பட்டன. இம்மூன்றிலும் ஈடுபடாமல் காந்திப்
பரியார் இருந்துவந்ததைக் கண்டு, இவருடன் இருந்தவர்
வரை எள்ளி நகையாடினர். இது குறித்துக் காந்திமகான்
றிதும் அவமானம் கொண்டிலர். "தாயிற் சிறந்ததொரு
காயிலும் இல்லை" என்பது இவருடைய உறுதியான
காள்கையாகும். இவ்வாறு தம் பெற்றோர் சொல்லுக்கு
டங்கி ஒடுங்கி நடப்பவர்கள் அன்றோ, தம் பிற்கால வாழ்
ல் சிறந்து வாழக்கூடியவர்கள்!

4. காந்தியடிகள் மேனாட்டில் வழக்கறிஞர் பட்டத்தைப்
பெற்றுக்கொண்டார். இப்பட்டம் பெற்றுப் பம்பாயில் சில

காலம் வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டார்; பின்ன இவர் தென்னாப்பிரிக்கா செல்ல நேர்ந்தது. அங்கு இவ பட்ட அல்லல் அனந்தம். தாம் படும் அல்லலுடன் அங்கு வாழும் இந்தியர் படும் துன்பங்கள் இவர் உள்ளத்தை உருக்கின. ஆப்பிரிக்க அரசாங்கத்தினர், இந்தியர்களை கேவலமாக எண்ணுவதையும் அவர்களுக்குத் தொல்லை தருவதையும் இயல்பாகக் கொண்டு இருந்தனர். இந் எண்ணத்தை மாற்றி அங்கு வாழும் இந்தியர்களுக்கு நன்மை செய்யக் காந்தியார் உள்ளங் கொண்டார். இதன்பொருட்டு இவர் தம் குடும்பத்துடன் தென்னாப்பிரிக்காவில் சிலகால தங்க உறுதிகொண்டார்.

5. இந்தியர்கள் அனைவரும், தங்களுக்கு ஒரு ரட்சக கடவுளால் அனுப்பப்பட்டார் என்று எண்ணிக் காந் யடிகளுடன் சேர்ந்து அன்பு காட்டினர். இதனால் அங்கு சிறிது புரட்சி ஏற்பட்டது. அதனை அடக்கும் பொருட்டு ஆப்பிரிக்க அரசாங்கம் சிலரைக் கொன்று வீழ்த்தியது சிலரைச் சிறைக் கூட்டத்திற்கும் செலுத்தியது. அக்கால களில் காந்தியார் பொறுமையுடனும், சத்தியத்துடனும் நடந் வந்தார். இந்நிலையில் ஆப்பிரிக்க நாட்டிற்கு ஒரு சோதனை காலம் நேர்ந்தது. அதாவது, போயர் போரும், ஜூலு ஜாதிய கலகமும் ஏற்பட்டன. அப்பொழுது காந்தியார் ஆப்பிரிக் அரசாங்கத்தாருக்கு உதவி புரிந்து அவர்கள் வெற்றி கா உடன் இருந்து உழைத்தார். அது முதல் அவ்வரசாங்க இவரிடம் அன்பு காட்டத் தொடங்கியது. அதன் விளைவா ஆப்பிரிக்காவில் இந்தியர் பட்டுவந்த துன்பங்கள் குறைய தொடங்கின. இதுதான் தக்க தருணம் என்று காந்திப் பெ யார் ஆப்பிரிக்க அரசாங்கத்தாரிடமிருந்து இந்தியர் நல களைக் குறித்து ஓர் உடன்படிக்கையும் எழுதி வாங்கிக்கொ டார்.

6. காந்திப் பெரியார் கலகம், சண்டை என்பன வற்றை அறவே வெறுப்பவர். இந்துக்களுக்கும் முஸ்லீம் களுக்கும் சிற்சில வேளைகளில் கலகம் நேரிட்ட காலங்களில், அது நிகழாதிருக்க இவர் பட்டபாடு அளவிட்டுச் சொல்லி முடியாது. அதற்காகப் பட்டினியும் இருந்திருக்கிறார். தொழிலாளர்களிடத்தில் இவருக்கு இரக்கம் மிகுதியும் உண்டு. அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும் அரும் பாடுபட்டு இருக்கிறார். தந்நலங் கருதாத் தகைமையாளர் என்றால், இவரைத்தவிர வேறு யாரையும் அறுதியிட்டு உறுதி யாகச் சொல்ல முடியாது. எளிய வாழ்வு நடத்தவே பெரிதும் விரும்பியவர். ஏழைகள் படும் பாட்டைக் கண்டு அவர்கள் போலவே தாமும் வாழ எண்ணியவர். இரயிலில் மூன்றாம் வகுப்பிலேயே பயணப்படுவது இவர் இயல்பு. இடுப்பிலும் தோளிலும் சிறு துண்டையே உடையாகக்கொண்டு வாழ்க் கையை நடத்தினர். இவரிடம் சத்தியம், எளிய உணவு கொள்ளல், எளிய உடை உடுத்தல், பொறுமை, தெய்வ பக்தி முதலிய குணங்கள் குடிகொண்டிருந்தன. இவர் பகை வர்க்கும் நன்மை செய்யும் இயல்புடையவர்.

7. இவர் நம் நாடு அடிமைத் தளையில் இருந்து நீங்கி உரிமை பெறுதற்கு அரும்பாடு பட்டவர். இதன் பொருட்டுப் பலமுறை சிறை சென்றார்; உண்ணா விரதம் இருந்தார்; இவ்வாறு இப் பெரியார் தியாக உணர்ச்சியுடன் நடந்துகொண் டதனால் அன்றோ, நாம் இப்பொழுது உரிமைபெற்று இன் புடன் வாழ்கின்றோம்!

8. நல்லவருக்கும் ஒரு பொல்லாதவன் இருப்பது இயற்கைபோலும்! இவ்வுத்தமரை ஒரு வெறியன் தன் கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்று விட்டான். அந்தோ! நம் உலகப் பெரியார் பூத உடல் அழிந்தது. ஆனால், இவர் புகழ்

உடல் என்றும் அழியவில்லை. நாம் உண்மையில் காந்திப் பெரியாருக்கு நம் நன்றியைக் காட்ட வேண்டுமானால், இவர் குணங்களை மேற்கொண்டு நடக்கவேண்டும். இவர் அறவுரை களைப் பின் பற்றி ஒழுக வேண்டும்.

### அருஞ் சொற்கள் :

உள்ளம்-மனம். எடுத்துக்காட்டு-உதாரணம். மது-கள், சாராயம். புலால்-மாமிசம். அல்லல்-துன்பம். அனந்தம்-பல. இயல்பு-குணம். அறவுரை-நீதிமொழி.

### கேள்விகள் :

1. யார் உலக மக்கள் உள்ளத்தில் வாழக் கூடியவர் ?
2. காந்திப் பெரியார் எங்கு எப்போது பிறந்தார் ?
3. இவர் தாய் சொல்லைத் தட்டாதவர் என்பது எவ்வாறு தெரி கிறது ?
4. இவர் ஆப்பிரிக்காவில் ஏன் சிலகாலம் வாழ எண்ணினர் ?
5. ஆப்பிரிக்காவில் இருந்த இந்தியரின் கஷ்டம் எவ்வாறு நீங்கியது ?
6. காந்தியார் எவ்வெப்பொழுது உண்ணாவிரதம் இருந்தார் ?
7. இவர் எளிய உடை, எளிய வாழ்வு மேற்கொள்ளக் காரணங் கள் யாவை ?
8. இவர் வரலாற்றை அறிந்த நாம் மேற்கொள்ள வேண்டிய கடமை யாது ?

### பயிற்சி :

1. காந்திப் பெரியார் போலச் சுதந்திரம் பெறப் பாடுபட்டவர் சிலரைக் குறிப்பிடு.
2. இவர் நடத்திய சத்தியாக்கிரகப் போர்களுள் இரண்டினை குறிப்பிடு.

3. 'காந்திப் பெரியார்' என்னும் பொருள் பற்றிச் சங்கத்தில் பேசுதற்கு நீ குறித்துக் கொள்ளவேண்டிய குறிப்புக்களை மட்டும் எழுதிக்காட்டு.
4. காந்திப் பெரியாரின் உழைப்பால் நாம் அடைந்துள்ள நன்மைகளைக் குறிப்பிடு.

### இலக்கணம்

#### சொற்கள் :

தமிழ் இலக்கணத்தில் சொற்கள் நான்கு. அவை **பெயர்ச் சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்** என்பன. இன்றைய வகுப்பில் பெயர்ச் சொற்கள், வினைச் சொற்களை மட்டும் கற்றுக் கொள்ளுங்கள்.

ஒரு பொருளின் பெயரைக் குறிப்பது பெயர்ச் சொல்லாம்.

**(உ-ம்.)** முருகன், பலகை, மரம், சீதை.

#### பயிற்சி :

1. இப்பாடத்தில் இரண்டாவது பாராவில் வந்துள்ள பெயர்ச் சொற்களை எடுத்துக்காட்டு.
2. நீங்களாக பத்துப் பெயர்ச் சொற்களை எழுதிக் காட்டுக.
3. ஆப்பிரிக்கா, அன்பு, இரயில், சிறை, உண்மை—இந்தப் பெயர்ச் சொற்களை அமைத்துத் தனித்தனி வாக்கியம் எழுதுக.

## 2. உழவு

1. நாம் உயிர் வாழ்வதற்கு மிகவும் முக்கியமான பொருள்கள் மூன்று. அவை உணவு, நீர், காற்று என்பன. அவற்றுள் உணவை உழவு மூலமாகத்தான் பெறவேண்டும். அவ்வுழவை எப்படிச் செய்ய வேண்டும் என்பதை நாம் ஒவ்வொருவரும் உணரவேண்டும். உழவுத்தொழிலை நாம் இழிவாகக் கருதக்கூடாது. 'உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பு

இல்லை,' 'உழந்தும் உழவே தலை,' 'உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார்' என்று இத்தொழில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இனி இத் தொழிலை எப்படி நடத்தி, உணவைப் பெருக்குவது என்பதை உணர்வோமாக.

2. உழவுத் தொழிலினை வேளாண்மை, பூவைசியம், கிருஷி, விவசாயம் என்றும் கூறுவர். உலகில் பொருளை ஈட்டுவதற்குப் பல தொழில்கள் இருப்பினும், அவை உழவுத் தொழிலைப்போல அத்துணைச் சிறந்த தொழில்கள் என்று கருதுவதற்கு இல்லை. அதனால்தான் 'சீரைத் தேடின் ஏரைத் தேடு' என்ற பழமொழி வழங்கி வருகிறது. ஏனைய தொழில்களில், பிறருக்குக் கை கட்டிப் பதில் உரைக்க வேண்டும். உழவுத் தொழிலோ எனில், பிறரை வணங்கி அவர்களுக்கு அடிமையாகிப் பிறர் உதவியைத் தேடாமல் தாம் தாமே செய்யக்கூடிய தொழிலாகும். இதனால்தான் 'தொழுதூண் சுவையினும் உழுதூண் இனிது' என்றும் 'மேழிச் செல்வம் கோழை படாது' என்றும் நம் முன்னோர் கூறியிருக்கின்றனர். இவ்வளவு சிறந்த தொழில் நம் நாட்டில் தொன்று தொட்டு நடந்து வந்திருந்தும், இதன் பெருமையை அறியாமல், பிற தொழிலில் ஈடுபட்டு மாத ஊதியத்தை நாடுகின்றனர் பலர். அப்படி நாடியதால்தான், நம் நாட்டில் உணவுப்பஞ்சம் இப்பொழுது தாண்டவமாடுகிறது.

3. பயிர்த்தொழில் நடத்துபவர் நிலத்தின் தன்மை வித்தின் இயல்பு, நிலத்திற்கு உரம் ஊட்டுதல், பயிரை வளர்த்தல், பாதுகாத்தல் ஆகியவற்றை நன்கு அறிந்தவர்களாக இருக்கவேண்டும். இவற்றோடு உழவுக் கருவிகள் கால்நடைகள் முதலியன தகுந்தவைகளாக இருக்கப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

4. நிலங்களை இரு பிரிவாகப் பிரிக்கலாம். அவை நன்செய் நிலம், புன்செய் நிலம் என்பன. இவ்வாறு பிரிக்கப்படுவதற்கு நீர்வசதி ஒரு காரணமாகும். நன்செய் நிலம் அமைந்த இடம் ஏரி, குளம், ஆறு, ஓடை முதலிய நீர் நிலைகளைத் தம் அருகே பெற்ற நிலமாக இருக்கும். நன்செய் நிலத்தில்தான் நெல், வாழை, கரும்பு, வெற்றிலை முதலியன பயிரிடப்பட்டு நன்கு செழித்து வளரும். புன்செய் நிலத்திற்கு நீர் வசதி குறைந்து இருக்கும். மழை பெய்தால் தான் அது நீரைப் பெறும். ஆகவே, இதனை வானம் பார்த்த நிலம் என்றும் கூறுவர். இதற்குக் கிணற்று நீரை ஏற்றத்தின் மூலம் பாய்ச்ச வேண்டும். இத்தகைய நிலங்கள் பெரிதும் மேட்டு நிலத்தைச் சார்ந்தவையாகும். இப் புன்செய் நிலத்தில் கேழ்வரகு, சோளம், கம்பு, எள், துவரை, கடலை, மொச்சை, பருத்தி, வேர்க்கடலை, கொள்ளு முதலியன பயிரிடப்படும். தேயிலை, கொக்கோ, ஏலம் முதலியனவும் இப் புன்செய் நிலப் பயிர்களே ; ஆனால், அவை அடைமண் நிறைந்த மலைப் பிரதேசத்தில் நன்கு பயிராகக் கூடியவை. மணற்பூமிகளில் சணல், சவுக்கு முதலியவற்றிற்கு அதிக வளர்ச்சியுண்டு.



5. நிலங்கள் நல்ல உயர்ந்த வரப்புக்களைக்கொண்டு இருக்கவேண்டும். வரப்பு உயர்ந்தால் நீர் உயரும் ; நீர்

உயர்ந்தால் நெல் உயரும் ; நெல் உயர்ந்தால் குடி உயரும். குடி உயர்ந்தால் கோன் உயர்வான் உயர்ந்த வரப்புக்களைப் பெற்ற நிலங்களை நன்கு உழவேண்டும். மேல் போக்காக மண்ணைக் கிளறிவிடுவதில் மட்டும் பயனில்லை. ' அகல உழுவதைவிட ஆழ உழு ' என்பது நம் முன்னோர் கூறியுள்ள வாக்கு. உழுத நிலத்திற்கு நல்ல உரம் ஊட்ட வேண்டும். உரம் என்பது எருவாகும்.

6. பெருங்குழிகளில் குப்பைக் கூளங்களைச் சேர்த்து மக்கவைத்தும், நிலங்களில் ஆடு, மாடு, கோழி, வாத்து



முதலியவற்றினை மடக்கி வைத்து, அவற்றின் சாணம் பிழுக்கைகளை விழச் செய்தும் எருவினைச் சேர்க்க வேண்டும். கொள்ளுக்காய், வேளை முதலிய தாவரங்களை வளர்த்து மடக்கி உழுதும், வேம்புப் பிண்ணுக்கு, கடலைப் பிண்ணுக்கு, ஆமணக்கு பிண்ணுக்குகளை இட்டும், நிலங்களைச் சுற்றி மரங்களை வளர்த்து அவற்றின் தழைகளை வெட்டிப் போட்டும் நிலங்களை உரப்படுத்தலாம். ஆறு, ஏரி, குளம்,

குட்டைகளின் வண்டல்களும் நிலத்திற்கு நல்ல எருவாகும். இக்கால இரசாயன முறைப்படி கிடைக்கும் எருக்களாகிய எலும்புத்தூள், உப்புச் சத்து, முதலியவற்றை வாங்கியும் நிலத்திற்கு உரம் ஊட்டவேண்டும்.

7. நிலத்திற்கு எரு இன்றியமையாததுபோல, உழுதல் மிகமிக இன்றியமையாதது. உழுகின்ற போதும் சில முறைகளைக் கைக்கொள்ளவேண்டும். நிலங்களை ஆழமாகவும் நெருக்கமாகவும் உழவேண்டும். உழுதபின் அப்புழுதியைக் காய விடவேண்டும். புழுதியாக்கியவுடன் மழை பெய்ததும்



தானிய விதைகளை விதைக்கவேண்டும். துவரை, பயறு, சோளம் முதலிய தானியங்களை ஆடி மாதத்தில் விதைக்க வேண்டும். 'ஆடிப்பட்டம் தேடி விதை' என்பது நம் நாட்டுப் பழமொழி. நெல், வேர்க்கடலைக்கு ஆனிப்பட்டமும், கம்பு, கடலை, மொச்சை முதலியவற்றிற்கு ஆவணியும், பருத்திக்கு ஐப்பசியும் விதைத்தற்குரிய மாதங்களாகும். இப்படி அறிந்து விதைக்க வேண்டும் என்பதற்காகவே 'பருவத்தே பயிர்

செய்' என்னும் பழமொழியும் தோன்றியுள்ளது. விதைகள் நன்கு முற்றி நோய் இல்லாதனவாய், காய்ந்தனவாய் இருக்க வேண்டும். விதைத்த பின்பும் உழவேண்டும். உழுதால் தான் விதைகள் புழுதியில் மறைந்து முளைக்கத் தொடங்கும்.

8. நெல்லை விதைக்கையில் சில முறைகளைக் கையாள வேண்டும். நிலங்களை உழுது புழுதியாக்கி அவற்றில் நெல்





விதைகளை விதைத்துத் தண்ணீர் பாய்ச்சிப் பயிராக்குவது ஒருமுறை. மற்றொரு முறை, நிலங்களில் தண்ணீரைப் பாய்ச்சி, உழுது, பரம்படித்துச் சேருக்கி அவற்றில் விதைகளை விதைத்துப் பயிராக்குவது. சேற்றில் வித்துக்களை விதைத்து நாற்றுகளை உண்டாக்கி, அவற்றைப் பருவம் அறிந்து பறித்துச் சேற்றில் நட்டுப் பயிராக்குவது மற்றொரு வகையாம். நாற்றுக்களைப் பிடுங்கி அரையடி தூரத்தில் வேர் சேற்றில் பதியும்படி நடவேண்டும். நீர் சுண்டியவுடன் மீண்டும் நீரைப் பாய்ச்சவேண்டும். இப்படிச் செய்து வளரச் செய்த நெற்பயிருடன் புல், கோரைப் பூண்டும் வளர்ந்துவிடும். அவற்றைப் பிடுங்கி எறிந்துவிடவேண்டும். இதுவே களை எடுத்தல் எனப்படும்.

9. நிலத்தை உழுதால் மட்டும் போதாது; நீர் பாய்ச்சி விதைத்தால் மட்டும் போதாது. அடிக்கடி அதனைப் போய்ப் பார்த்துக் கவனித்துக்கொண்டே வரவேண்டும். இல்லையானால் ஆடு மாடுகளால் பயிர் நாசமாகிவிடும். பறவைகள் கொத்திவிடாதபடி கவனித்துக் கொள்ளவேண்டும். திருடர்கள் திருடாமல் இருக்கக் கவனித்து வரவேண்டும். இப்படிச்





சேதம் நேராதபடி கவனிக்க வேண்டும் என்பதற்காகவே "உடையவன் கண்ணேடாப் பயிர் அழியும்" என்னும் முதுமொழியும் தோன்றியுள்ளது. பிறகு அறுவடை செய்து களத்தில் இட்டு நெல் வேறு, வைக்கோல் வேருகச் செய்து மூட்டைகளாகக்கட்டி வண்டிகளில் ஏற்றிக்கொண்டு வீட்டில் சேர்க்க வேண்டும். வைக்கோலை மாட்டுக்கு உணவாகும் பொருட்டுப் போராக அமைக்கவேண்டும். பகடு நடந்த உணவை நாமே உண்ணுமல் தென்புலத்தார், தெய்வம், விருந்து, அரசு, ஒக்கல் முதலியவர்க்கு ஈந்து நாமும் உண்டு வாழவேண்டும்.

### அருஞ்சொற்கள் :

ஈட்ட-சம்பாதிக்க, ஏர்-கலப்பை, மேழி-கலப்பை, முன்னோர்-முற்காலத்துப் பெரியவர்கள், உரம் - பலம், கால்நடை - ஆடு மாடுகள், பகடு-எருது.

### கேள்விகள் :

1. உழவுத் தொழிலுக்குரிய வேறு பெயர்கள் எவை ?
2. உழவுத் தொழிலுக்கும் வேறு தொழிலுக்கும் உள்ள வேறுபாடு யாது ?
3. எருவினைச் சேகரிக்கும் முறை யாது ?
4. நல்ல விளைவினைப் பெற வழி யாது ?
5. எவ்வெப் பயிர்களை எவ்வெக் காலங்களில் பயிரிட வேண்டும்?

### பயிற்சி :

1. உழவுத் தொழிலைக் குறித்து வழங்கும் பழமொழிகளைத் தனித் தனியே எடுத்து எழுது.
2. உழவுத் தொழிலில் வழங்கப்படும் சில சொற்றொடர்களை எடுத்துக்காட்டு.
3. பயிர்த்தொழில் செய்யும் முறைகளை வரிசைப்படுத்தி எழுது.
4. 'பகடு நடந்த கூழ் பல்லாரோடு உண்க' இதன் பொருளை நன்கு விளக்கு.
5. 'வரப்பு உயர்க' என்று கூறியவர் பெயரைக் குறிப்பிடு.

## இலக்கணம்

### வினைச்சொல் :

பெயர்ச் சொல்லின் செயலை - அதாவது தொழிலைக் காட்டுவது **வினைச் சொல்லாம்.**

(உ-ம்) கணபதி வந்தான். **வந்தான்** என்னும் சொல் கணபதியின் செயலைக் காட்டுகிறது அல்லவா? ஆகையால், வந்தான் என்பது வினைச் சொல்லாம்.

**பயிற்சி :**

1. இப்பாடத்தில் முதல் இரண்டு பாராவில் வந்துள்ள வினைச் சொற்களை எடுத்து எழுது.
2. இருபிரிவாகப் பிரிக்கலாம், காரணம் ஆகும், நிலமாக இருக்கும், செழித்து வளரும், நீரைப் பெறும், என்றும் கூறுவர் --- இவற்றுள் வினைச்சொற்களாக வந்துள்ள சொற்களை எடுத்துக் காட்டுக.
3. நீங்களாகப் பத்து வினைச் சொற்களை எழுதிக் காட்டுக.

# 3. செவிட்டு மருகன்

1. **திருவிடைமருதூர்** என்பது ஒரு புண்ணிய ஸ்தலம். அந்த ஊரில் ஒரு பெரிய செல்வந்தர் இருந்தார். அவர் பெயர் **மருதவாணப் பிள்ளை** என்பது. அவருக்கு ஒரே பெண் பிறந்தது. அப்பெண்ணின் தாயார் பெண்ணைப் பெற்ற சில நாட்களுக்கெல்லாம் இறந்து போனாள். அப் பெண்ணின் பெயர் **சரோஜா** என்பது. மருதவாணப் பிள்ளை தம் பெண்ணின் மீது வைத்த அன்பின் காரணத்தால் மறுமணம் புரிந்து கொள்ளாமல், தம் திருமகளைக் கண்ணும் கருத்துமாய் வளர்த்து வந்தார். பெண்ணுக்கும் மணப்பருவம் வந்துற்றது. விரைவில் கலியாணம் செய்துவிடவேண்டும் என்பது அவரது எண்ணம். அதனால் அவர் தக்க வரனைத் தேட ஆரம்பித்தார்.

2. மருதவாணப் பிள்ளையின் வம்சத்தில் தம் திருமகளுக்கு ஏற்ற வரன் இலன். அவரிடம் இருக்கும் பணத்தின் பொருட்டு அவர் பெண்ணை மணமுடிக்க வந்தவர் பலர். என்றாலும், அவருக்குத் தமக்குப் பிடித்த வரனுக்கே கொடுக்க வேண்டும் என்பது பேர் அவா. அவருக்கு மாப்பிள்ளை

பெரும் பணக்காரனுக இருக்கவேண்டும் என்பது ஆசை யன்று. தமக்கு ஒரே பெண்ணுதலால் தம் சொத்தைத் தம் திருமகளுக்கே கொடுத்துவிடப் போகிருர். எனவே, பொருளின் மீது ஆசை கொண்டு தன் தனயையை மண முடிக்க எண்ணவில்லே. பிள்ளேயவர்கள் தம் நண்பர்களிடம் தம் திருமகளின் திருமணம் குறித்துச் சொல்லி வைத்தார். அவர்களும் முயன்று வந்தார்கள்.

3. மருதவாணப் பிள்ளேக்குச் சென்னேமா நகரில் ஒரு நண்பர் உண்டு. அவருக்கு ஒரு மகனும் இருந்தான். அவன் பெயர் **ஆறுமுகம்** என்பது. அவன் நல்ல பிள்ளேயாண்டான். பெற்ருேருக்குக் கீழ்ப்படிந்து நடப்பவன் ; பத்தாவது வகுப்பு



வரை படித்துத் தேர்ந்தவன். ஆனுல், பெரும் பணக்கார வீட்டு மகன் அல்லன். இவனேப்பற்றி மருதவாணப் பிள்ளே யிடம் நண்பர் அறிவித்தனர். மருதவாணப் பிள்ளேயும் சென் னேக்கு வந்து மாப்பிள்ளேயைப் பார்த்தனர். மாப்பிள்ளே யைப் பற்றிக் குற்றம் ஒன்றும் சொல்வதற்கு இல்லே. ஆறு முகம் நங்கைக்கேற்ற நாயகனுகவே காணப்பட்டான். படிப் பும் போதுமானதாக இருந்ததையும் உணர்ந்தார் மருத

9. ஆறுமுகம் நேரே மாமனுர் படுத்திருந்த படுக்கை அறையை அடைந்தான்; ஒரு நாற்காலியில் அமர்ந்தான். மதவாணப்பிள்ளை மருமகன் வந்திருப்பது கண்டு ஆனந் தம் கொண்டார். மருமகன் ஆறுமுகம் மெல்ல வாயைத் திறந்து, "மாமா உடம்பு எப்படி இருக்கிறது?" என்று கேட்டான். இவன் எண்ணி வந்தபடி 'உடம்பு சிறிது சுமார்



தான்' என்று சொல்லாமல், உடம்பு "வீடு போ, போ, காடு, வா, வா, என்கிறது. அதுதான் என் உடம்பு நிலை" என்ருர். ஆறுமுகம் காதில் அவை விழுந்தில. அவன் "அப்படியா மாமா! சந்தோஷம்" என்ருன். மருதவாணப் பிள்ளைக்கு இந்தப் பதிலைக் கேட்கவே ஆத்திரம் வந்தது. என்ன செய் வார்? ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார்.

10 அடுத்தபடியாக ஆறுமுகம் மாமாவைப் பார்த்து, "மாமா ஆகாரம் என்ன சாப்பிடுகின்றீர்கள்?" என்று வின வினன். அவர் எரிச்சலுடன் 'மண்தான் எனக்கு ஆகாரம்' என்ருர். இந்த விடை ஆறுமுகத்திற்கு எப்படிக் கேட்டு

இருக்கும் ? அவன்தான் செவிடனுயிற்றே. அவன் உடனே, முன் தான் தீர்மானித்து வந்தபடி "அப்படியா மாமா! அது நல்ல உணவுதான். அதனையே சாப்பிட்டு வாருங்கள். உடம்பு சரியாகிவிடும் " என்று கூறினான். எப்படி இருக்கும் மருதவாணப் பிள்ளைக்கு! இப்படியும் தமக்கு ஒரு மாப்பிள்ளை வாய்க்கவேண்டுமா ? என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்.

11. கடைசியாக ஒரு கேள்வி கேட்க வேண்டும் அல்லவா? ஆறுமுகம் தன் அருமை மாமாவைப் பார்த்து, "மாமா உமக்கு யார் மருத்துவம் பார்ப்பவர் ?" என்று வினவினான். அவருக்கு இருந்த கோபத்தால், "இயமன்தான் பார்க்கிறான்" என்று கூறினர். உடனே, "ஆறுமுகம், மாமா! அவர் மிகவும் கெட்டிக்காரர். அவரே உம்மைப் பார்த்து வரட்டும் ; அவரை விடாதீர் " என்று பதில் உரைத்தான்.

12. இந்த விதமாக ஆறுமுகம் பதில் கூறுவான் என்று மருதவாணர் எதிர்பார்க்கவில்லை. வேறு என்ன செய்வார் ? தம் விதியை நொந்து கொண்டார். ஆறுமுகமும் இதற்கு மேல் ஒன்றும் கேட்கக் கூடாது என எழுந்து போய்விட்டான். மகள் சரோஜா தன் கணவன் செவிட்டுத்தனத்திற்காக, இரக்கமும், தந்தையார் நோய்க்காகத் துன்பமும் கொண்டு, தன் தகப்பனுருக்கு வேண்டிய உதவியைச் செய்து வந்தாள். கணவனையும் வரவேற்றுப் பணிவிடை புரிந்து வந்தாள். கல்லானாலும் கணவன் ; புல்லானாலும் புருஷன்தானே!

### அருஞ் சொற்கள்

திரு-அழகிய. வரன்-மணமகன். மாப்பிள்ளை, அவா-ஆசை, காது மத்திபம்-செவிடு. இல்லறம்-குடும்பம். அலுவல்-வேலை. பிணி-நோய். மருத்துவர்-வைத்தியர். விடை-பதில். காடு-சுடுகாடு.

### கேள்விகள் :

1. திருவிடைமருதூர் மருதவாணப்பிள்ளை சென்னையில் வாழ்ந்த மகனுக்குத் தம் திருமகளைத் திருமணம் செய்துவைக்கக் காரணம் யாது ?
2. ஆறுமுகம் நோய்வாய்ப்பட்ட மாமனாரைப் பார்க்க எந்தத் தீர்மானத்துடன் சென்றான் ?
3. மருதவாணப் பிள்ளை ஏன் தம் விதியை நொந்து கொண்டார் ?

### பயிற்சி :

மருமகனுக்கும் மாமனுருக்கும் நடந்த சம்பாஷணையைச் சம்பாஷணை வடிவில் எழுது.

## இலக்கணம்

### திணையும் பாலும்:

### திணை

திணை இரண்டு : அவை **உயர்திணை, அஃறிணை** என்பன. தேவரையும் மக்களையும் உணர்த்தும் சொற்கள் உயர்திணைச் சொற்களாம்.

**இந்திரன்**
**சாத்தன்** | உயர் திணை.

மக்கட்பெயர், தேவர் பெயர்கள் நீங்கலாக ஏனைய பெயர்கள் யாவும் அஃறிணைப் பெயர்களாம்.

**மரம்**
**புலி**
**காக்கை**
**நாற்காலி** | அஃறிணைப் பெயர்கள்.

### பால்

பால் ஐந்து. அவை **ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால்,** என்பன.

**இராமன்** — ஆண்பால்
**சீதை** — பெண்பால்
**மக்கள்** — பலர்பால்
**நாற்காலி** — ஒன்றன் பால்
**நாற்காலிகள்** — பலவின் பால்

**பயிற்சி :**

1. இப் பாடத்தின் முதல் பாராவில் உள்ள பெயர்ச் சொற்க‍ளை எடுத்து எழுது.
2. மருதவாணப் பிள்ளை, பணம், மாப்பிள்ளை, சொத்தை, நண்பர்கள், சென்னைமாநகர்-இவற்றுள் உயர்திணைப்பெயர், அஃறிணைப் பெயர் இன்னவென எடுத்துக் காட்டு.
3. இப்பாடத்தின் ஏழாவது பாராவில் வந்துள்ள பெயர்ச் சொற்களை எடுத்துக் காட்டி, அவை இன்னபால் எனவும் குறிப்பிடு
4. நீங்களாக உயர்திணைப் பெயர்கள் ஐந்தினையும், அஃறிணைப் பெயர்கள் ஐந்தினையும் எழுதிக் காட்டு.
5. ஒவ்வொரு பாலுக்கும் தனித்தனி இரண்டிரண்டு உதாரணங்கள் கூறுக.

# 4. இராணி துர்க்காவதி

1. "நாட்டைப் பரிபாலனம் செய்யும் பொறுப்பும் கடமையும் ஆண்மக்களுக்குத்தான் உண்டு ; பெண் மக்களுக்கு இல்லை" என்று கூறமுடியாது. ஆண்களைப்போலவே பெண்களும் அரசு செலுத்தியதாக நம் பழங்கால நூல்களில் இருந்து அறியலாம். அல்லி ராணியார் அரசு செய்திருக்கின்றனர். இராணி மங்கம்மாள் அரசு நடத்தி இருக்கின்றனர். இவர்களைப்போலவே, இராணி துர்க்காவதி என்னும் பெயரி அம்மையாரும் செங்கோல் புரிந்து இருக்கின்றனர். அந் அம்மையாருடைய அரசைப்பற்றி நாம் அறிந்து கொள்வ அவசியம் அல்லவா ?

2. இந்தியா, வட இந்தியா, தென்னிந்தியா என்று இ பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வட இந்தியாவில் பல சி சிறு நாடுகள் உண்டு. அவற்றுள் குரு மண்டலம் என்ப ஒன்று. அது சிறுநாடு. குரு மண்டலம் ஒரு சிறு நாடா

இருந்தாலும், வட இந்தியாவில் சிறந்து விளங்கிய ஒரு பெரு நாடாகவே அது திகழ்ந்தது. அந்நாட்டு மன்னராகத் **திலீப சிம்மன்** என்பவர் அரசு புரிந்து வந்தார். அவருக்கு வாழ்க்கைத் துணைவியராக அமைந்தவரே துர்க்காவதி அம்மையார்.

3. அரசர் திலீப சிம்மனும், அரசியார் துர்க்காவதியம்மை யாரும் நல்லரசு செய்துவந்த காரணத்தாலும், அவர்கள் செய்த புண்ணியத்தின் பயனுலும், அவ்விருவருக்கும் ஓர் ஆண்மகன் பிறந்தான். அவன் பெயர் **வீர நாராயணன்** என் பது. அந்தோ! மகன் பிறந்த சில நாளில் தந்தையார் திலீப சிம் மன் மண்ணுலகுவிட்டு விண்ணுலகடைந்தார். மன்னர் இறந்த போது மகன் சின்னஞ் சிறுவனுக இருந்தான். தந்தைக்குப் பிறகு தனயன் அரசுக்கட்டில் ஏறவேண்டும் என்னும் முறை மைப்படி, வீர நாராயணன் அரியாதனம் அமர இயலவில்லை. ஆகவே, அரச பாரத்தை இராணி துர்க்காவதி அம்மையார் ஏற்க நேர்ந்தது.

4. துர்க்காவதியம்மையார் பட்டத்திற்கு வந்து செங் கோலைக் கைக்கொண்ட நாள் முதலாக குடிமக்களுக்கு எந்தக் குறையும் நேராவண்ணம் கவனித்து வந்தார். குடி மக் களைக் குழந்தைகளாக எண்ணித் தாம் தாய்போல் இருந்து அவர்கட்கு வேண்டிய தேவைகளை முடித்து வைத்தார். நாட் டிக்கு நீர்வளம் முக்கியமான தல்லவா ? அதன்பொருட்டு ஏரி குளங்களை வெட்டுவித்தார். ஓர் ஊரில் இருந்து மற்றோர் ஊருக்குப் போகின்றவர்கள் இடையில் தங்கிச் சென்று தம் களைப்பை நீக்கிக் கொள்ளச் சத்திரங்களைக் கட்டிவைத்தார். அச் சத்திரங்களில் உணவு கொடுத்து உதவ, அரிசியும் அளித்து வந்தார். தம் நாட்டில் அறியாமைப்பேய் இருத்தல் கூடாது என்பதற்காகப் பாடசாலைகளை வைத்து அறிவை

வளர்த்து வந்தார். இப்படியன்றே மக்களுக்குத் தேவை யானவற்றை அறிந்து அவற்றிற்கு ஏற்ற ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்! இவ்வளவு வசதிகளைத் தந்த இராணி யாரைக் குடிமக்கள் தம்தம் குலதெய்வம் என்று பாராட்டு வார்கள் அல்லவா? ஆகவே, இந்த இராணியார் எல்லோ ராலும் நன்கு பாராட்டப்பட்டு அரசு செலுத்தி வந்தனர். இவ் வம்மையார் குருமண்டலத்தை அரசு புரிகையில், டில்லி மா நகரில் செங்கோல் செலுத்திய மன்னர் **அக்பர்** ஆவார். அவ ரும் துர்க்காவதியம்மையார் திறத்தைக் கேள்விப்பட்டு மிக வும் வியந்து கொண்டாடினர்.

5. **அலிப்கான்** என்பவன் அக்பர் சக்கரவர்த்தியின் படைத் தலைவன்; அவன் சிறிது பொருமைக்காரன். துர்க்கா வதி யம்மையார் இவ்வளவு சீரும் சிறப்புடனும் அரசு புரி வதை விரும்பவில்லை. அதனல், குருமண்டலத்தைத் தாக்கித் தன் மன்னருடைய நாட்டில் இணைத்து அதனைப் பெருக்க எண்ணினன். ஆனல், அக்பர் தம் சேனைத் தலைவன் எண் ணத்திற்கு இடம் கொடுக்கவில்லை. என்றுலும், அலிப்கான் அக்பருக்குத் தெரியாமல் படைகளைத் திரட்டிச் சென்று குரு மண்டலத்தைத் தாக்கினன்.

6. குருமண்டலத்து மக்கள் இராணி துர்க்காவதியம் மையாரைத் தம் தெய்வமாக எண்ணி வந்தார்களாதலால், தம் நாட்டைக் காக்க அவ்வூர் மக்கள் ஊக்கமும் உற்சாகமும் கொண்டு அலிப்கான் படையை எதிர்த்தனர். எதிர்த்து அவ னுடைய படைவலியையும், மனவலியையும் பின்னடையச் செய்தனர். அலிப்கானுக்குத் தோல்வி மிகவும் வருத்தந் தந் தது. அக்பர் மகாராஜா வேண்டா என்று தடுத்தும், போருக் குப் புறப்பட்டு வந்தது தவறு என்பதை உணர்ந்தான். என் ருலும், முன் வைத்த காலைப் பின்வைக்கக்கூடாது என்னும்

வைராக்கியத்தால் மீண்டும் பல வீரரைக்கொண்டு குரு மண்டலத்தைத் தாக்கினன். ஐயோ! அலிப்கான் எண்ணம் அப்பொழுதும் பலிக்கவில்லை. அந்த முறையும் அவனுக்கு அபஜயமே கிடைத்தது. அலிப்கானுக்குத் துக்கம் பொறுக்க முடியவில்லை. அவனுக்கு இரு முறை தோல்வியடைந்தது அவமானமாகக் காணப்பட்டது. முன்பின் யோசியாமல் போரில் ஈடுபட்டது தவறு என்று சிந்திக்கத் தொடங்கினன். அவனே பின்பு 'துணிந்த பின் எண்ணுவம் என்பது இழுக்கு' என்று அறிந்து, மூன்ருவது முறையும் போருக்கு ஆயத்தப் பட்டான். முதல் இரண்டு முறை நடந்த போர்களில் துர்க்கா வதி அம்மையார் தாமே போர்க்களம் புகுந்து போரிடவில்லை. அவ்வம்மையாரது படைவீரர்களே போர் புரிந்து எதிரிகளின் படைகளை முறியடித்தனர். ஆனல், மூன்ருவது முறை தாம் போருக்குப் போகாமல் படைவீரரை ஏவிச் சும்மா இருத்தல் முறைமையன்று என்று எண்ணித் தாமே போர்க்கோலம் பூண்டு யுத்தகளத்தை அடைந்தனர்.

7. அலிப்கான் இந்த முறை எப்படியும் வெற்றி காண வேண்டும் என்று தீர்மானித்தான். அதற்கு என்னவழி என்று சிந்தித்தான். உடனே அரசர்கட்குரிய உபாயமாகிய சாம, தான, பேத, தண்டம் என்பனவற்றுள், தான உபாயத்தைக் கைக்கொள்ள எண்ணிப் பணத்தைச் செலவழித்தான். பணம் என்ருல் பிணமும் வாய் திறக்கும் அல்லவா ? பணத் தாசை பிடித்துத் துர்க்காவதியம்மையாரின் வீரர் பலர், அலிப் கான் படையில் சேர்ந்து கொண்டனர். அவர்களை என் னென்று சொல்வது? அரச துரோகிகள், நாட்டைக் காட்டிக் கொடுக்கும் கயவர்கள் என்றுதானே சொல்லமுடியும். இத ஞல், துர்க்காவதி யம்மையாரின் படை குறைந்து போயிற்று. என்ருலும், அரசியார் மனம் தளரவில்லை; வீராவேசத்துடன்

போர்புரிந்தார் ; போர்க்களத்தில் பெண் சிங்கம்போல் விளங்கினுர். தாயார் போரில் ஈடுபட்டிருந்தால் தனயன் சும்மா இருக்க இயலுமோ ? ஆகவே, அரசியாரின் மகனுன வீர நாராயணனும் போரில் ஈடுபட்டனன். ஐயகோ! அவனை எதிரிகள் அம்பு எய்து கொன்றனர். அப்பொழுது அவனுக்கு வயது பதினுன்கு. அதுகண்டும் இராணி துர்க்காவதியம்மையார் மனம் முறியவில்லை. படுகளத்தில் ஒப்பாரி ஏது?



இராணியார் முன்னிலும் பன்மடங்கு வீராவேசத்துடன் போர் புரிந்தனர். இந்தச்சமயம் எதிரி ஒருவன் ஓர் அம்பைக் குறி வைத்து எய்ய, அது அரசியாரின் கண் ஒன்றைத் தாக்கியது. ஐயோ! ஒரு கண்ணை இழந்தார் அரசியார். இந்த நிலையிலும் போரை மும்முரமாக நடத்தினுர் துர்க்காவதி அம்மையார்.

8. இராணி துர்க்காவதியம்மையார் யானை மீது இருந்து சமர் புரிந்தனர். அந்த யானையையும் தாக்க எதிரிகள் நான்கு பக்கமும் சூழ்ந்துகொண்டு சரம் தொடுத்தனர். யானையும் ஏவினுக்கு இலக்காயது. இதைக்கண்ட வேழப்பாகன் தன்

இராணியாரைக் காக்க வேண்டிக் கரியைப் போர்க்களத்தி லிருந்து கடத்திச் செல்ல முயன்றான். அதற்குச் சிறிதும் இராணியார் இடம் கொடுத்திலர். "எதிர்த்துப் போரிட்டு வெற்றி காணும்வரை போர்புரிவேன். இன்றேல், ஆவி துறந்து வீர சுவர்க்கம் புகுவேன்" என்று திட்டமாகக் கூறி னார். மாவுத்தன் அதற்குமேல் ஒன்றும் செய்வதற்கு இன்றிக் களிற்றினைக் கடத்திச் செல்லாது இருந்தான்.

9. இராணி துர்க்காவதி அம்மையார் ஊக்கமாகவே அமர் புரிந்தார். சிறு படையுடைய இவர், பெரும் படை யுடைய வீரரை எப்படி எதிர்க்கமுடியும்? கடைசியில் ஒரு வீரன் ஓர் அம்பைக் குறி பார்த்து எய்து துர்க்காவதியாரின் உயிரை வௌவினான். இராணியாரும் பூத உடல் விடுத்துப் புகழ் உடல் பெற்றார். அலிப்கானும் துர்க்காவதியாரின் மனோதிடத்தை வியந்து பாராட்டினான். அக்பர் மன்னர் துர்க்காவதியம்மையாரின் மரணத்தைக் குறித்து வருந்தினார். துர்க்காவதியார் உயிரை விட்டது தம் மானத்தைக் காக்கவே அன்றோ? அதனையே நாம் பாராட்டவேண்டும்.

**அருஞ்சொற்கள் :**

பரிபாலனம்-பாதுகாத்தல், திகழ்ந்தது-விளங்கியது, வாழ்க்கைத் துணைவி-மனைவி, அரசுக்கட்டில்-சிம்மாசனம், படைத்தலைவன்-சேனாதிபதி, ஊக்கம்-முயற்சி, அபஜயம்-தோல்வி, அமர்-போர், சண்டை, இழுக்கு-தவறு, சாமம்-சமாதான முறை, பேதம்-மிரட்டும் முறை, தானம்-பொருள் கொடுத்துதவும் முறை, தண்டம்-தண்டிக்கும் முறை, படுகளம்-போர் செய்யும் இடம், ஒப்பாரி-அழுகை, சரம்-அம்பு, இலக்கு-குறி, வேழப்பாகன், மாவுத்தன்-யானைப் பாகன், களிறு-யானை.

**கேள்விகள் :**

1. துர்க்காவதியம்மையார் எப்படிப் பட்டத்துக்கு வர நேர்ந்தது?
2. இவ்வம்மையார் எந்நாட்டு அரசியார்?

3. இவர் குடிகட்குச் செயத வசதிகள் யாவை ?
4. இவர் ஏன் போர்க்கு எழ நேர்ந்தது ?
5. இவா் வீரமுடையவர் என்பது எப்படித் தெரிகிறது ?
6. இவர் எங்ஙனம் கொல்லப்பட்டார் ?

**பயிற்சி :**

1. தமிழ் அரசியர் மூவர் பெயர்களைக் குறிப்பிடு.
2. நால்வகை அரச உபாயங்களையும் எழுது.
3. அம்புக்குரிய சொற்களை எடுத்துக் காட்டு.
4. அலிப்கானைக் குறித்துச் சில வாக்கியங்களை எழுது.
5. பூத உடல், புகழ் உடல் இன்னவென்பதை விளக்கு.

## இலக்கணம்

## எண்ணும் இடமும் :

### எண்

ஒரு பொருளைக் குறிக்கும் பெயர் **ஒருமைப் பெயர்.** ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் குறிக்கும் பெயர் **பன்மைப் பெயர்**களாம்.
(உ-ம்) கண்ணாடி-ஒருமை.
கண்ணாடிகள்-பன்மை.

### இடம்

நான், நாம் என்பன **தன்மை இடப் பெயர்கள்.** நீ, நீங்கள் என்பன **முன்னிலை இடப் பெயர்**கள். அவன், அவள் போன்றவை **படர்க்கைப் பெயர்**கள். தன்மைப் பெயர் முன்னிலைப் பெயர்கள்போக, ஏனைய பெயர்கள் எல்லாம் படர்க்கைப் பெயர்களாம். ஆகவே இடம், தன்மை முன்னிலை, படர்க்கை என மூன்றாகும்.

**பயிற்சி :**

1. ஆண்மக்கள், நூல்களில், நாடுகள், அது, உலகு, குடிமக்கள், குழந்தைகள், உணவு, பாடசாலைகள், வசதிகள், படைவீரர்,

அம்பு—இவற்றுள் ஒருமை எண்ணைக் குறிக்கும் சொற்களை யும், பன்மை எண்ணைக் குறிக்கும் சொற்களையும் எடுத்துக் காட்டு.

2. இப்பாடத்தின் எட்டாம் பாராவில் உள்ள படர்க்கைப் பெயர் களை எடுத்து எழுது.

3. நீங்கள், யாங்கள், நாம், நீர், நுமது—இவை இன்ன இடத் துக்குரிய சொற்களெனக் கூறு.

# 5. காகிதம் செய்யும் முறை

1. அருமை மாணவர்களே! நீங்கள் இப்பொழுது படிப்பதற்கும், எழுதுவதற்கும் பயன்படுத்தும் காகிதம் எப் படிச் செய்யப்படுகிறது என்பது உங்களுக்குத் தெரியுமா? தெரியாவிட்டால் நான் சொல்லுகிறேன் கேளுங்கள்.

2. முதல் முதல் எழுதுவதற்குக் காகிதம் பயன்பட வில்லை. ஏனெனில், பழங்காலத்தில் காகிதம் என்னும் பொருளே கிடையாது. எழுதவேண்டியவற்றைச் செங்கல் மீதும், பதம் செய்த தோல்களின் மேலும், செம்புத் தகடு களின்மீதும், இலைகளின்மீதும் எழுதி வந்தனர். செப்பு ஏடு களில் எழுதி வந்ததால்தான் 'செப்புப் பட்டயங்கள்' என்றும், கல்லில் எழுதிவந்ததால்தான் 'கல் வெட்டுகள்' 'சிலையில் எழுத்து' என்பனபோன்ற தொடர்களும் வழங்கலாயின. இவைகளே அன்றிப் பனையோலைகளும் எழுதுவதற்குப் பயன் பட்டன. அவை சுவடிகள் எனப் பெயர் பெற்றன. இப்படி இப்பொருள்களின்மீது எழுதுவது சிரமமாக இருந் தது. ஆகவே, இச்சிரமம் தீர ஒரு வழி பின்னால் கண்டு பிடிக்கப்பட்டது.

3. காகிதம் செய்யும் தொழிலில் முதலில் இறங்கிய வர்கள் எகிப்து தேசத்தவர்களும், சீன தேசத்தவர்களும்

ஆவார். அதன்பின் நம் இந்தியாவில் மொகல் மன்னர்கள் அரசுபுரிந்த காலத்தில் இத்தொழிலை மேற்கொள்ளத் தொடங் கினர். ஆனால், தொடக்கத்தில் இது பெருவாரியான இலாபம் கொடுக்காமையால் இதனைக் கைவிட்டனர். பின்னர் இதன் பயனை அறிந்து மீண்டும் செய்யத் தொடங்கினர். இது இப் பொழுது குடிசைத் தொழிலாகவும் இயந்திரத் தொழிலாகவும் இருந்து வருகிறது. இனிக் காகிதம் செய்யும் முறையைக் கவனிப்போமாக.



4. காகிதம் செய்வதற்கு மூலப்பொருளாகப் பயன் படக் கூடியவை, தள்ளப்பட்ட பருத்தி, கரும்புச் சக்கை, மூங்கில், புல், நாணல், வைக்கோல், வாழைப்பட்டை, புளிச் சைச் செடி, மரக்கூழ் முதலியன. இவை யாவும் நம் இந்தி யாவில் ஏராளமாகக் கிடைக்கக் கூடியவைகளே. இப்

பொருள்களை நன்கு அரைத்துக் கூழாக்க வேண்டும். அரைத்துக் கூழாக்குவது கடினம் என்று, இதற்காகவே அமைந்த தாங்கி என்னும் பெயர் அமைந்த இயந்திரத்தைப் பயன்படுத்துவர். பின் அக் கூழைச் சுத்தம் செய்து வெண்ணிறமாக்கவேண்டும். அதன் பின் தெளிந்த நீரில் அக் கூழை மற்றொரு தொட்டியில் கலக்க வேண்டும்.

5. சன்னமான கோரைப் புற்களைப் பாய்போல முடைந்து கொள்ளவேண்டும். இப்பாயைச் சதுரமான மரப் பலகையில் வைத்து, இப்பாய் விலகாதிருக்கச் சட்டம் அடிக்க வேண்டும். இதன் பின் இப்பாய்ச் சட்டத்தைக் கூழ்த் தொட்டியில் தோய்த்து உடனே எடுத்துவிட வேண்டும். எடுத்தவுடன் அதில் தோய்ந்துள்ள நீர் வற்றும்படி அந்தத் தொட்டியின் மேல், இடையே குச்சி வைத்து அமர்த்தி வைக்க வேண்டும். அப்படி வைத்தால் நீரெல்லாம் வற்றிவிடும். அதன் பின் அந்தப் பலகையின் மீது மெல்லிய துணியை விரிக்க வேண்டும். ஒரு மேசையின்மேல் நல்ல துணியை விரித்து, அதன் மேல் கூழ் படிந்துள்ள கோரைப் பாயைக் கவிழ்க்க வேண்டும். மெல்ல கூழ்ப்படலம் மேசையின் மேல் விழும் படி பாய்ப் பலகையை எடுத்துவிட வேண்டும். இந்தக் கூழ்ப்படலமே ஒரு காகித ஏடாகும். இப்படியே நூற்றுக் கணக்கான ஏடுகளை மேசையின் மேல் அடுக்கி அதன் பின் ஒரு துணியைப் போர்த்த வேண்டும். இத்துடன் காகிதம் முழுவுருப் பெற்றுவிடாது. இவ்வாறு நூறு, இரு நூறு காகிதங்களாக அடுக்கி அதன் மேல் வழவழப்பாயும் கனமும் உள்ள மரச்சட்டத்தை வைக்கவேண்டும். இப்படி வைப் பதன் நோக்கம், அந்தக் கூழ்ப்படலத்தில் சிறிது நீர் இருந் தாலும், மேலே வைக்கப்படுகின்ற கனப்பொருளால் அந் நீர் கசிந்து வெளிவருவதற்கேயாகும். அதன் பின்னும் ஈரக்

காகிதங்களைத் தனித்தனி எடுத்துச் சுவர்களின் மீதும், பிரப்பந் தடுக்குகளின் மீதும் விரித்து உலர்த்த வேண்டும். அடியில் விரித்திருந்த துணி விரிப்புக்களை வேறு படுத்த வேண்டும்.

6. இப்படிச் செய்யப்படும் காகிதமும் உடனே எழுதுவதற்குப் பயன்படாது. இக் காகித ஏடுகள் உலர்ந்தால் சொர சொரப்பாகவே இருக்கும். அவற்றை விழ வழப்பாக்க வேண்டும் அல்லவா? எழுதினல் மையும் ஊருமலிருக்கவும் மிருதுவாக இருக்கவும், சமமாக இருக்கவும் சில செயல்களைச் செய்ய வேண்டும். காகித ஏட்டை வழவழப்பான பலகையில் பரப்பவேண்டும். வழ வழப்பும், சமமும் உள்ள உருளையைக் கொண்டு உருட்ட வேண்டும். இப்படியெல்லாம் செய்த பிறகே காகிதம் எழுதப் பயன்படும் அதன் பின் நமக்குத் தேவையான அளவுப்படி வெட்டிக் கொள்ள வேண்டும்.

7. இந்த விதமாகக் காகிதங்களைக் கிராமங்களில் ஓய்ந்த நேரங்களில் குடியானவர்கள், செய்து வரலாம் அல்லவா? குடியானவர்கட்கு வருடம் முழுமையும் வேலை கிடையாது. ஆறுமாதமே வேலையாகும். மீதியுள்ள நாட்களில் இந்த வேலை செய்ய ஈடுபடலாம். குடியானவர்கள் பொழுதும் போகும்; வருவாயும் ஏற்படும். அவர்கள் வருவாய் இல்லை என்று துன்புறவும் நேராது.

8. எழுதிப் பயன்படுத்தப்பட்ட காகிதங்களையும் தள்ளுபடியான காகிதங்களையும் கொண்டு காகிதம் செய்யலாம். இக் காகிதங்களைத் தண்ணீரில் நனைத்து ஊறவைக்க வேண்டும். இந்நீரில் சோடா உப்பும், சுண்ணும்பும் கலக்க வேண்டும். இவை நன்கு ஊறி ஒன்றோடொன்று கலந்த பிறகு வேறு தொட்டியில் ஊற்றிக் காலால் மிதிக்க வேண்டும் பிறகு நன்கு கூழ்போலச் செய்ய வேண்டும். கூழான பிறகு

முன் கூறிய முறைப்படி காகிதங்களைச் செய்யும் முறையைக் கையாளவேண்டும்.

9. இந்தத் தொழிலைக் குடியானவர்கள் தாம் செய்ய வேண்டும் என்பது இல்லை. வேலையில்லாமல் இருப்பவர் பலரும், இதனைக் கைக்கொண்டு நல்ல ஊதியம் பெறலாம். நமக்குக் காகிதம் அதிகமாகத் தேவை. இம் முறைகளில் காகிதங்களைச் செய்து தேவையைப் பூர்த்தி செய்யவேண்டும். இத்தொழிலால் வேலையில்லாக் குறை குறையும். இந்தியாவில் பொருளாதார நிலையும் ஓங்கி வளரும். இதற்கு மக்கள் மன உறுதியும், கூட்டுறவுச் சங்கங்கள், ஜில்லா போர்ட்டுகள், அரசாங்கத்தார் உதவி முதலியனவும் பெரிதும் தேவையாகும்.

10. காகிதம் எழுதுவதற்கு மட்டும் பயன்படுவதில்லை. கடித்த காகிதங்களாகிய அட்டைகளால் படகு, வண்டிச் சக்கரம், நீர்க்குழாய் முதலியன செய்யப்படுகின்றன. ஜப்பானியர் காகிதங்களால் வீடுகட்டிக் கொள்கின்றனர் என்றல் அதன் பயனைக் குறித்து வேறு என்ன கூறுவது ?

**அருஞ் சொற்கள் :**

சிலையில் - கல்லில், சிரமம் - கஷ்டம், சன்னம் - மென்மையான, நாணல்-ஒருவகைப்புல், ஊதியம்-வருவாய்.

**கேள்விகள் :**

1. பழங்காலத்தில் எவ்வெவற்றை எழுதுவதற்குப் பயன் படுத்தினர் ?
2. காகிதம் செய்யப் பயன்படும் பொருள்கள் எவை ?
3. காகிதம் செய்யப்படும் முறை யாது ?
4. முதல் முதல் காகிதம் செய்யத் தொடங்கியவர்கள் யாவர் ?

5. எதனுல் காகிதம் செய்யும் தொழில் குடியானவர்கட்கு ஏற்றது?
6. காகிதம் எவ்வெவ்வாறு பயன் படுகிறது?

**பயிற்சி :**

1. கல்வெட்டு, செப்புப் பட்டயம், தாங்கி, இவற்றைப் பற்றிச் சிறு குறிப்பு எழுது.
2. காகிதத்தைச் சுத்தப்படுத்தும் முறைகளைக் குறிப்பிடு.
3. காகிதத்தால் செய்யப்படும் பொருள்களை எழுது.
4. காகிதம் பயன்படும் முறைகளைக் குறிப்பிடு.
5. குடிசைத் தொழில் ஒன்றைக் குறிப்பிட்டு, அதனை நடத்திக் காட்டும் முறையையும் விளக்கி எழுது.

## இலக்கணம்

### வேற்றுமை:

**வேலன் கண்டான்** என்னும் தொடருக்கும், **வேலனைக் கண்டான்** என்னும் தொடருக்கும் வேறு பாடு உண்டா? கவனியுங்கள்: வேறுபாடு இருக்கிறது. 'வேலன் கண்டான்' என்னும்போது கண்டவன் வேலன் என்பதும் 'வேலனைக் கண்டான்' என்னும்போது வேலன் மற்றொருவனுல் காணப்பட்டான் என்பதும் தெரிகிறதல்லவா? எது இந்த வேறுபாட்டைக் காட்டுகிறது? வேலன் என்னும் சொல்லில் உள்ள **ஐ** என்னும் எழுத்தல்லவா? இவ்வாறு பொருளை வேறுபடுத்திக் காட்டும் உருபை **வேற்றுமை உருபு** என்பர்.

இவ்வேற்றுமை எட்டு. அவை முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்றும் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறும்வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, எட்டாம் வேற்றுமை எனப்படும்.

முதல் வேற்றுமைக்கு உருபு இல்லை: இதனை எழுவாய் வேற்றுமை என்றும் கூறுவர்.

(உ-ம்) முருகன் வந்தான்.

இரண்டாம் வேற்றுமை உருபு **ஐ**.

(உ-ம்) முருகனைக் கண்டான்.

மூன்றும் வேற்றுமை உருபுகள் **ஆல், ஓடு. உடன்.**

(உ-ம்) முருகனால் செய்யப்பட்டது.

முருகனோடு வா.

முருகனுடன் வருக.

நான்காம் வேற்றுமை உருபு **கு**.

(உ-ம்) முருகனுக்குக் கொடு.

ஐந்தாம் வேற்றுமை உருபு **இல், இன்**.

(உ-ம்)மழையில் நீரைச் சிந்தினான்.

சென்னையின் தெற்குச் சிதரம்பரம்.

ஆறும் வேற்றுமை உருபு **அது, உடைய.**

(உ-ம்) எனது கை.

என்னுடைய கைகள்.

ஏழாம் வேற்றுமை உருபு, **இல், கண்** முதலியன.

(உ-ம்) வீட்டில் இரு.

வீட்டின் கண் இரு.

எட்டாம் வேற்றுமைக்கு உருபு இல்லை. இது கூப்பிடுவதற்குப் பயன் படும். அதனால், இதை **விளி வேற்றுமை** என்றும் கூறுவர்.

(உ-ம்) கந்தா ! வா.

**பயிற்சி :**

1. மாணவர்களே ! நீங்கள் நான், தோல்களின்மேல், இலைகளில், கல்லில், தொழிலை, இதனது பயன், முறையை, இவற்றிற்கு, நீரினால், குடியானவர்கட்கு, காலால், எனது --- இச்சொற்கள் எந்தெந்த வேற்றுமைகளை ஏற்று வந்துள்ளன ?

2. இப்பாடத்தின் ஐந்தாவது பாராவில் எந்தெந்தச் சொற்கள் வேற்றுமை உருபை ஏற்றுள்ளன ? பொறுக்கி எடு. பின் அந்த வேற்றுமையின் பெயர்களையும் குறிப்பிடு.

3. ஆல், இன், அது - இந்த உருபுகளை அமைத்து உதாரணம் எழுது.

# 6. தந்தைக்கும் தனயனுக்கும் நடந்த சம்பாஷணை



**மகன்:—** என் அருமைத்தந்தையீர் ! எனக்குப் பணம் தேவை யாக இருக்கிறது. நான் புதுச் சட்டைகளை வாங்கப் போகிறேன். மேலும் சில புத்தகங்களை வாங்கவேண் டும். அன்பு கூர்ந்து அளியுங்கள்.

**தந்தையார் :—** அருமை மகனே ! நான்கு மாதங்களுக்கு முன்புதான் உன்னுடைய பிறந்த நாள் கொண்டாட்டத் தின்போது, புதிய உடைகளை வாங்கிக்கொடுத்தேனே ! மறுபடியும் ஏன் உனக்குச் சட்டைகள் தேவை ? அவை என்னவாயின ?

மகன் :— அப்பா! நீங்கள் வாங்கித் தந்தது உண்மைதான். ஆனால், அவை கிழிந்துபோயின. தையற்காரனிடம் கொடுத்துக் கிழிசல்களைத் தைத்து உபயோகித்து வருகிறேன். அவை பலமுறை தைக்கப் படுகின்றமையால், அவ்வளவு பயனுடையனவாக இப்பொழுது காணப்படவில்லை. மேலும், புது ஆடைகள் வந்து கடைகளில் நிறைந்து இருப்பனவாகச் சொல்லுகிறார்கள். எங்கள் பள்ளிக்கூடத்திலும் சில பிள்ளைகள் புது ஆடைகளுடன் வருகின்றனர். ஆகவே, நானும் புது ஆடைகள் வாங்கப் பிரியப்படுகிறேன்.

தந்தை :— ஓ அப்படியா? சரி, நீ விரும்பியபடி நாளை நானே உன்னுடன் வந்து புது ஆடைகளை வாங்கித் தருகிறேன். சில புத்தகங்கள் வாங்கப் பணம் வேண்டும் என்றனையே. நீ மேல் வகுப்புக்குப் போனபோதே உனக்குத் தேவையான எல்லாப் புத்தகங்களையும், நோட்டுப் புத்தகங்களையும் வாங்கிக்கொடுத்து விட்டேனே! மறுபடியும் புத்தகம் வாங்கப் பணம் வேண்டுமென்கிறாயே? அது எதற்கு?

மகன் :— பிதாவே! நீர் கூறுவது உண்மைதான். இல்லை என்று சொல்லவில்லை. தமிழ்ப்புத்தகம் காணாமல் போய்விட்டது. இங்கிலீஷ் புத்தகம் கிழிந்துவிட்டது. கணக்குப் புத்தகத்தை ஒரு பையன் வாங்கிக்கொண்டு போனான். அவன் திருப்பிக் கொடுக்கவில்லை. அவனும் பள்ளிக்கூடம் வருவதில்லை. மற்றைப் புத்தகங்களும் கிழிந்து இருக்கின்றன. இந்தக் காரணங்களால்தான் உம்மைப் பணம் கேட்டேன்.

தந்தை :— ஓ! நீ பணத்தின் அருமையைச் சிறிதும் உணராதவனாய்க் காணப்படுகிறாய். புத்தகங்களை ஏன் கிழிக்-

கின்ருய்? உன்னையறியாமல் எப்படிப் புத்தகம் கள
வாடப்படும்? உனக்குத் தேவையான புத்தகத்தை
ஏன் பிறர்க்குக் கொடுக்கின்ருய்? கிழிந்த புத்தகங்
களைக்கொண்டு நீ ஏன் படிக்கக்கூடாது. புதுப்புத்த
கங்களே வாங்கவேண்டுமோ?

**மகன்:—** தந்தையீர்! நான் கிழிந்த புத்தகங்களை வைத்துக்
கொண்டிருந்தால், பள்ளிக்கூடப் பிள்ளைகள் என்னை
ஏளனம் செய்யமாட்டார்களோ? நான் நம் குடும்ப
கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டாவோ?

**தந்தை:—** நீ உயர்நிலைப் பள்ளியில் இருக்கும்போதே இவ்
வாறு பணத்தைச் செலவு செய்ய எண்ணுவாயாளுல்
கல்லூரிக்குப் போனுல் எவ்வளவு செலவு செய்வா
யோ! நான் உனக்குத் தேவையானவற்றை வாங்கிச்
கொடுத்துக்கொண்டே இருக்கிறேன். தினமும் இரண்
டணு வேறு கைச் செலவிற்குத் தந்து வருகிறேன்
இதனை உன் நண்பர்களோடு சேர்ந்துகொண்டு வீண்
செலவு செய்து விடுகிருய். போதாக்குறைக்கு உன்
தாயாரிடத்திலிருந்தும் பணம் வாங்கிக்கொள்கிருய்
இவைகளையும் கடந்து சிறு சில்லரைக் கடனும் வைத்
திருப்பதாகப் பள்ளிக்கூடப் பிள்ளைகள் வந்து கூறு
கின்றனர். இவ்வளவுக்கும் காரணம் உன்னுடைய
வரம்பு கடந்த செலவு அல்லவா? இப்படிச் செலவு
செய்துகொண்டு வந்தால், 'குந்தித் தின்ருல் குன்று
மாளும்' என்பதுபோல, எவ்வளவு பணம் இருந்தாலு
செலவு ஆகிவிடும் அல்லவா? ஆகவே, அருமை
மகனே! சிக்கனமாக வாழ இளமையிலிருந்தே நீ பழகி
கொள்ள வேண்டும்.

மகன் :— அப்பா! நான் சிக்கனமாக வாழ என்ன செய்ய வேண்டும்? அதைச் சொல்லுங்கள்; அப்படியே செய்கின்றேன்.

தந்தை :— அன்புள்ள மகனே! நீயே என் அருமை மகன். நான் சொன்னதை உணர்ந்து கொண்டனையே! நான் சொல்கிறபடி செய். உன் பள்ளிக்கூடத்தில் சேவிங்ஸ் பாங்க் முறை இருக்கும். அதில் நீ சிறு சிறு பணத்தைப் போட்டு வை. இந்தப் பழக்கம் உன் செலவு செய்யும் இயல்பைக் குறைக்கும். சிக்கனத்தைக் கைக்கொள்ளச் செய்யும். இந்தச் சிறு தொகை ஒன்று சேர்ந்து பெருந்தொகையாகி, நீ உன் பள்ளிக்கூட ஆசிரியருடனும், பிள்ளைகளுடனும் எங்கேனும் உல்லாசப்பயணம் போனால், அப்பொழுது செலவு செய்யப் பயன்படும். தெரிகிறதா?

மகன் :— அப்பா! நீங்கள் சொல்வது எனக்கு இப்பொழுது நன்றாக மனத்தில் பதிந்துவிட்டது. நான் சிக்கனமாக வாழ முற்படுகிறேன். மிகுந்ததைச் சேர்த்து வைக்கிறேன்.

**அருஞ் சொற்கள் :**

கல்லூரி-மேல்படிப்புக்குரிய பட்டம் பெறுதற்குப் பயிலும் கல்விச் சாலை, வரம்பு-எல்லை.

**கேள்விகள் :**

1. சிறுவனுக்கு ஏன் பணம் தேவையாக இருந்தது?
2. அவன் புத்தகங்கள் என்னவாயின?
3. அவன் வரம்பு கடந்து செலவு செய்கிறான் என்பது எப்படித் தெரிகிறது?
4. சிக்கனமாக இருந்தால் ஏற்படும் நன்மைகள் யாவை?

**பயிற்சி:**

1. தந்தையார் மகனுக்கு அறிவுறுத்தியதைச் சுருக்கி எழுது.
2. பொருளைச் சேர்த்துவைக்கும் முறையைக் குறிப்பிடு.
3. கல்லூரி, உயர் நிலைப்பள்ளி, ஆரம்பப் பாடசாலை, நடுநிலைப் பள்ளி, இவற்றைப்பற்றிச் சிறு குறிப்புகள் தருக.
4. சிக்கனம் என்னும் தலைப்பு கொடுத்து ஒரு கட்டுரை எழுது.

## இலக்கணம்

## தன்மைப் பெயர், முன்னிலைப் பெயர்கள்:

## உருபு ஏற்கையில் மாறும் முறை.

**நான் + ஐ, நீ + ஆல்** எப்படிச் சேரும்? நான் + ஐ என்பது **என்னை** எனவும், நீ + ஆல் என்பது **உன்னால்** எனவும் சேரும். இதனால் என்ன உணர்கிறீர்கள். தன்மைப் பெயர், முன்னிலைப் பெயர்கள் வேற்றுமை உருபை ஏற்கையில் திரிந்துபோகும் என்பதை உணர்கிறீர்கள் அல்லவா?

**பயிற்சி:**

1. எனக்கு, உன்னுடைய, உனக்கு, உன்னுடன்-இந்தச் சொற்களின் மூல வடிவம் எது? ஏன் இவ்வாறு உரு மாறின?
2. நான், நீங்கள், எங்கள், நீ,---இவற்றுடன் ஐ, ஆல், கு, அது என்னும் உருபுகளைத் தனித்தனிச் சேர்த்தால் எப்படி உருவங்கள் மாறுபடும்?
3. இந்தப் பாடத்தில் காணப்படும் தன்மைப் பெயர், முன்னிலைப் பெயர்களை எடுத்துக் காட்டுக.

# 7. எனது உல்லாசப் பிரயாணம்

கெல்லட் உயர்நிலைப் பள்ளிக்கூடம்,
திருவல்லிக்கேணி
சென்னை 25—8—'52.

என் அருமை இராமச்சந்திரா,

1. நீ எழுதிய கடிதம் கிடைத்தது. கடிதம் கண்டு மகிழ்ந்தேன். இங்கு யாவரும் நலம். உன் நலத்தையும் உன் பேற்ருேர் நலத்தையும் அடிக்கடி எழுதுக. நான் விசேஷமாக இக்கடிதத்தில் எழுதுவதற்கு ஒன்றும் இல்லாமையால், என் ஆசிரியர் என்னையும் என்போன்ற மாணவர்களையும் உல்லாசப் பிரயாணமாகத் திருக்கழுக்குன்றம் அழைத்துச் சென்றது குறித்து எழுதி யிருக்கிறேன். இதைப் படித்த பிறகு உனக்கும் திருக்கழுக்குன்றம் போகவேண்டுமென்ற அவா எழும், என்று நம்புகிறேன்.

2. சென்ற வாரம் அதாவது 15, 16, 17, 18, 19-ஆம் தேதிகளில் எங்கள் பள்ளிக்கூடம் சுதந்திரதினக் கொண்டாட்டத்தின் பொருட்டும், ஆவணி அவிட்டம், காயத்திரி ஜபத்தின் பொருட்டும் விடுமுறைக்காக மூடப்பட்டது. அந்த ஐந்து நாட்களில் 17, 18, 19-ஆம் தேதிகளில் திருக்கழுக்குன்றம் சென்று வருவதாக முன்பே தீர்மானித்திருந்தோம். அந்தத் தீர்மானப்படி வெள்ளிக்கிழமை காலை 7-மணிக்குச் சென்னைக் கோட்டை இரயில் நிலயத்திற்கு அருகில் இருக்கும் வெளியூர் செல்லும் பஸ் நிலையத்திற்கு வந்தோம். திருக்கழுக்குன்றத்திற்குச் செல்லும் நேர் பஸ்ஸில் ஏறிக்கொண்டோம். இரண்டு மணி நேரத்திற்கெல்லாம் திருக்கழுக்குன்றத்தை அடைந்தோம். ஒரு சத்திரத்

தை அடைந்து அங்கு நாங்கள் கொண்டு சென்ற படுக்கை, பெட்டி முதலியவற்றை வைத்துவிட்டுக் குளிக்கப் புறப்பட்டோம்.

3. குளிப்பதற்கு அவ்வூரில் நல்ல வசதி இருக்கிறது. **சங்கு தீர்த்தம்** என்னும் பெயருடன் ஒரு குளம் இருக்கிறது. அதில் உள்ள நீர் நன்கு தெளிந்து பாசையின்றி இருக்கிறது. படித்துறைகளும் நன்கு கட்டப்பட்டிருக்கின்றன. அக் குளத்தில் நீராடினோம். சிறிது நீச்சும் அடித்தோம். பிறகு மலைக்குப் புறப்பட்டோம். மலைமீது வேதகிரீஸ்வரர் கோயில்



இருக்கிறது. மலை ஏறுவது சிறிது கடினமாகத்தான் இருக்கிறது. என்றாலும் ஏறுதற்குப் படி வசதிகள் இருக்கின்றன. சுவாமி தரிசனம் செய்துகொண்டோம். இதற்குள் மணி 10-30-ஆயிற்று.

4. மலையில் ஒரு பாறையின்மேல் இரு கழுகுகள் வந்து உணவு கொள்கின்றன. அப்பறவைகளுள் ஒன்று ஆண்-

மற்ருென்று பெண். அவை தினமும் தவருமல் பகல் 11-மணிக்குள் வந்து உணவு எடுக்கின்றன. அதனுல்தான் அம் மலை கழுகுகுன்றம் என்று பெயர் பெற்றது. கழுகுகுன்றம் நாளடைவில் மருவிக் கழுக்குன்றம் ஆயிற்று. கழுகுக்கு உணவு அளிப்பவர் பண்டார இனத்தைச் சார்ந்தவர். ஒரு பெரிய தவலையில் சர்க்கரைப் பொங்கலைக் கொண்டுவந்து கழுகு சாப்பிடும் அளவுக்குக் கொடுத்துவிட்டு மிகுதியை விற்றுவிடுகின்றனர். அதனைத் தெய்வப் பிரசாதமாக எண்ணிப் பலர் வாங்கிப் புசிக்கின்றனர். பண்டாரம் முதலில் ஒரு கிண்ணத்தில் நெய்யை யூற்றிக் கழுகுகளுக்கு வைக்கிருர். பிறகு பொங்கலைத் தருகிருர்.

5. திருக்கழுக்குன்றம் சிறந்த சிவத்தலமாகும். இதனைத் திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்க வாசகர் தம் தேவாரப் பதிகத்திலும், திருவாசகத்திலும் முறையே பாடியிருக்கின்றனர். அப்பாடல்களுள் சில எனக்குத் தெரியும். ஆதலால், நானும் சில பாடல்களைப் பாடிக் கடவுளை வழிபட்டேன். மேலே குறிப்பிட்ட பெரியவர்களால் பாடப்பட்டமையால் இம்மலை கி. பி. ஆரும் நூற்ருண்டு முதல் சிறப்புற்று விளங்குகிறது என்பது தெரிகிறதல்லவா? மலைமேல் இருந்து பார்த்தால் மகாபலிபுரத்துக் கலங்கரை விளக்கமும் காட்சி அளிக்கும். அங்கிருந்து ஒன்பது கல் தொலைவில்தான் மகாபலிபுரம் இருக்கிறது. ஆனுல், நாங்கள் அங்கு சொல்லவில்லை. கீழே இறங்கினேம். இறங்கும் போது மலைமீது குடைந்து எடுக்கப்பட்ட சிறு கோயிலையும் கண்டோம். அங்கு சில சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றையும் கண்டோம். மணி 12 ஆயிற்று. பகல் உணவு கொண்டோம். சிறிது இளைப்புத்தீர உறங்கினேம். உண்ட

இளைப்புத் தொண்டருக்கும் உண்டு அல்லவா? மீண்டும் மாலை நாலு மணிக்கு எழுந்து, கீழேயுள்ள இடங்களைச் சுற்றிப் பார்க்க எண்ணம் கொண்டோம்.

6. கீழேயும் பெரிய கோயில் இருக்கிறது. நான்கு புறமும் பெரிய கோபுரங்கள் இருக்கின்றன. உள்ளேயும் ஒரு குளம் இருக்கிறது. இதனை **நந்தி தீர்த்தம்** என்று கூறுகின்றனர். அதற்கு அடையாளமாக அங்குக் கல் வடிவில் ஒரு நந்தியையும் அமைத்திருக்கின்றனர். கீழ்க்கோயில் மிகப் பெரியது. சுற்றி வருகையில் ஒரு பெரிய மண்டபத்தைப் பார்க்கலாம். அது ஆமை மண்டபம் எனப்படும். அங்கு அலங்காரம், சொற்பொழிவு முதலியவை நடைபெறும். கீழேயுள்ள லிங்கத்திற்கு அவ்வளவு சிறப்பு நடப்பதில்லை. எல்லாம் மேலேயுள்ள சிவலிங்கத்திற்கே நடக்கிறது. ஆனால், கீழேயுள்ள அம்மன் சன்னிதிக்குப் பெருமையுண்டு. அம்மனுக்குத் திரிபுர சுந்தரி என்பது பெயர். அந்த அம்மனுக்கு அபிடேக அலங்கார விசேடம் உண்டு. அம்மன் கோயில் நல்ல முறையில் பலவித சிற்பங்களுடன் கட்டப்பட்டுள்ளது. சுவாமி கோயிலும் பல கற் சிற்பங்களையுடையது.

7. பிறகு மலையைச் சுற்றிவரப் புறப்பட்டோம். மலையைச் சுற்றிவருவதற்கு நல்ல ஒழுங்கான பாதை அமைந்திருக்கிறது. அதன் தூரம் $2\frac{3}{4}$ கல்லேயாகும். மலையின் அடிவாரத்தில் இருந்து ஒரு கல் தொலைவு சென்றால் ஓர் இடம் காணப்படும். அந்த இடத்தைச் சஞ்சீவி காற்று வீசும் இடம் என்கின்றனர். அதனால் மலை சுற்றுபவர் சிறிது நேரம் அங்குத் தங்கிச் செல்வர். உட்காருவதற்கு அங்குக் கருங்கல் மேடைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. குடிநீருக்குக் கிணற்று வசதியும் அங்கு உள்ளது. அங்கு செம்மண் நிறைந்திருக்கிறது. அதனை மலை மருந்து என்று கூறிப் பெரு

நோயாளரும், மற்றையோரும் அதனை நீரில் கரைத்து உடம்பில் பூசிக்கொள்கின்றனர். அதனால் நோய் நீங்குவதாக நம்புகின்றனர். நம்பிக்கை நோய் தீர்த்தலும் உண்டு அல்லவா ? பிறகு அதையும் கடந்து வந்தால், சிறு கோயில் ஒன்றைக் காணலாம். அதனைத் திருமலை சொக்கம்மாள் கோயில் என்கின்றனர். அதன் பக்கத்தில் எதிரொலி கேட்கப்படும். ஆகவே, சிலர் அங்கு நின்று ஓசை எழுப்பி எதிரொலி கேட்டு மகிழ்வர். அதனையும் கடந்து வந்தால் நால்வர் கோயில் காணப்படும். அதனையும் கண்டு கும்பிடு போட்டுவிட்டு வந்தால் அடிவாரத்தை யடையலாம். அன்று எங்கள் பொழுது இவ்வாறு கழிந்தது. இரவு உணவுகொண்டு உறங்கினோம்.

8. மறுநாள் காலை எங்கு போவது என்பது தெரியவில்லை. சத்திரக்காரன் திடுமென, 'ருத்திராங்கோயில் பார்த்தீர்களோ ?' என்றான். 'அது எங்கிருக்கிறது ?' என்று ஆவலுடன் கேட்டோம். அவன் 'சங்கு தீர்த்தத்திற்குத் தென்கிழக்கு மூலையில் ஒரு பர்லாங் தூரத்தில் இருக்கிறது' என்றான். நாங்கள் சிற்றுண்டி அருந்திவிட்டு அங்கு சென்றோம். கோயிலைக் கண்டோம். கோயில் மிகவும் பழமையானதாகக் காணப்பட்டது. ஆனால், கவனிப்பார் இன்றிப் பாழ்பட்டுக் கிடக்கிறது. அது கண்டு வருந்தினோம். பிறகு திரும்பி வந்த நாங்கள், கண்டவற்றை எல்லாம் ஒரு குறிப்பு எடுத்துக் கொண்டோம். இங்கு தங்கினால் நோய் தீரும் என்றும், குளத்தில் குளித்தாலும் நோய் நீங்கும் என்றும் கூறினர். அவற்றையும் குறித்துக் கொண்டோம். மலையில் பல மூலிகைகள் நிறைந்து இருப்பதால், அம் மூலிகையில் பட்டுக் காற்று வீசப்படுவதாலும், மழை நீரும் அம் மூலிகைகளில் படிந்து குளத்திற்கு வருவதாலும் நோய் தீர்தற்கு வசதியுண்டு என்று நாங்களும் நம்பினோம்.

9. ஊரும் வளமாகத்தான் இருக்கிறது. நிலவளம் நீர் வளம் நிறைந்திருக்கின்றன. ஆற்றுவளம் இல்லையானாலும் குளம், குட்டை, ஏரி, கிணறுகள் நிரம்பி இருக்கின்றன. சத்திரங்கள் ஏராளமாக இருக்கின்றன. கிராம தேவதை கோயிலும் அங்கு இருக்கிறது.

10. பிறகு நாங்கள் பஸ் ஏறி இரவு ஏழு மணிக்கெல் லாம் சென்னைக்கு வந்து சேர்ந்து அவர் அவர் வீடு நலனுறச் சென்று அடைந்தோம். எங்கள் உல்லாசப் பயணம் இன்ப மாகவே இருந்தது. நீயும் சென்று திருக்கழுக்குன்றம் காண் பது இன்பம் பயப்பதாகும். வணக்கம்.

இங்ஙனம்
உன் அருமை நண்பன்
ராமமூர்த்தி.

திரு. வி. இராமச்சந்திரன்
4, தெற்கு மாசி வீதி,
மதுரை.

**அருஞ் சொற்கள் :**

அவா-ஆசை, மருவி-மாறி, பதிகம் - பத்து அல்லது பதினொரு பாடல்கள் கொண்ட தொகுதி, வழிபட்டேன்-வணங்கினேன், கலங் கரை விளக்கம்-(லைட் அவுஸ்) தீபஸ்தம்பம், நந்தி-மாடு, இது சிவ பெருமான் வாகனம், பெருநோய்-குஷ்ட நோய்.

**கேள்விகள் :**

1. திருக்கழுக்குன்றத்தில் காணவேண்டிய காட்சிகள் எவை ?
2. சங்கு தீர்த்தம், நந்திதீர்த்தம் எங்கு இருக்கின்றன ?
3. இத்தலம் யார் யாரால் பாடப்பட்டது ?

4. மலை மருந்து என்பது எது ? அதனைப் பற்றிய சிறப்பு யாது ?
5. எதனால் திருக்கழுக்குன்றம் சுகவாசத் தலமாக விளங்குகிறது?

**பயிற்சி :**

1. திருக்கழுக்குன்றத்தைச் சென்னையிலிருந்து அடைதற்குரிய இரு வசதிகளைக் குறிப்பிடு.
2. திருவாசகம், சஞ்சீவி மலை, ஆமை மண்டபம், மகாபலிபுரம், ருத்திராங் கோயில் இவற்றைப் பற்றிச் சிறு குறிப்பு வரை.
3. அங்கு காணப்படும் இரு பெரு அம்மன் கோயிலைப் பற்றிச் சிறு குறிப்புத் தருக.

## இலக்கணம்

## வினைச்சொல் :

பெயர்ச்சொல்லின் தொழிலைக் காட்டுவது **வினைச்சொல்**. வேலன் **நடந்தான்** என்னும் உதாரணத்தில் வேலன் என்னும் பெயர்ச்சொல்லின் தொழிலாகிய நடத்தலை நடந்தான் என்னும் சொல் குறிக்கிற தல்லவா ? ஆகவே, பெயர்ச் சொல்லின் தொழிலைக் காட்டுவது வினைச் சொல்லாம்.

### காலம்

**செய்தான், செய்கின்றான், செய்வான்,** இந்த மூன்று வினை முற்றுக்களும் ஒரே காலத்தைக் குறிக்கவில்லை. செய்தான் என்னும் சொல் முன்பு நடந்த காலத்தைக் காட்டுகிறது. இது **இறந்த காலம்** எனப்படும்.

செய்கிறான் என்பது இப்பொழுது நடந்துகொண்டிருக்கும் காலத்தைக் காட்டுகிறது. ஆகவே, இது **நிகழ்கால** மாகும்.

செய்வான் என்ப து இனி நடக்கப்போகும் காலத்தைக் காட்டுகிறது. ஆகவே இது **எதிர்கால**மாம்.

**பயிற்சி :**

1. கிடைத்தது, மகிழ்ந்தேன், எழுதுக, போகிறேன், அடைந்தோம், புறப்பட்டோம், இருக்கிறது, நீராடினேம், ஆயிற்று, கொள்கின்றன, புசிக்கின்றனர், வருவர், காண்பார்கள்—இவ்வினைச்சொற்கள் ஒவ்வொன்றும் எந்தெந்தக் காலங்களை உணர்த்துகின்றன ?
2. ஏழாவது பாராவில் உள்ள வினைச்சொற்களுக்குக் காலம் கூறு.
3. வா, சொல், படி, கூறு, விடு, வை-இந்த வினைச் சொற்களைக் கொண்டு ஒவ்வொரு காலத்திற்கும் ஒவ்வோர் உதாரணம் எழுது.

# 8. தண்ணீர் வசதி

1. மக்களுக்கு இன்றியமையாது வேண்டப்படும் பொருள்கள் மூன்று. அவை காற்று, நீர், உணவு. இவையே உயிர் வாழ்வதற்கு மிக மிக முக்கியமானவை. இவற்றுள் முதன்மையானது காற்று. அதற்கு அடுத்தபடி வேண்டற்பாலது நீர். உணவு மூன்றும் தரமே முக்கியமாகும். ஆகவே, நடு நாயகமாக விளங்கும் நீரைப் பற்றிச் சிறிது கவனிப்போம். நீர் இன்றியமையாத பொருளாக இருப்பதால்தான், உலகப் படைப்பு மூன்று பாகம் நீராகவும், ஒரு பாகம் நிலமாகவும் இயற்கையில் அமைந்து இருக்கிறது. கடவுளும்கூட நீரை நம் வசத்தில் வைக்காமல் தம் வசத்தில் வைத்துக் கொண்டு வேண்டியபோது மழையாக ஆகாயத்திலிருந்து பொழிந்து வருகிறார்.

2. குடிநீர், மக்களுக்கு ஏரி, குளம், குட்டை, கிணறு, ஆறு முதலிய நீர் நிலைகளில் இருந்து கிடைக்கிறது. இவை இயற்கை நீர் வசதிகள் ஆகும். இவை நாட்டுப் புறங்களில் வாழும் மக்கட்கு நீர் அளித்து உதவும் சாதனங்

கள். நகரவாசிகளுக்கு இத்தகைய இயற்கை நீர் நிலைகள் பெரிதும் பயன்படுவது இல்லை. நகராண்மைக் கழகத்தாரால் செயற்கை முறைகளில் அமைந்த நீர்த் தேக்கத்தில் இருந்தே நீரைப் பெறவேண்டியவர்கள் நகரவாசிகள்.

3. நகரசபைகள் தங்களுக்கு வேண்டிய தண்ணீர் கிடைக்கும் பொருட்டு மலைச்சரிவுகளில் அணைகள் கட்டி அங்குப் பொழியும் மழைத் தண்ணீரைத் தங்கச் செய்து பெரிய செயற்கை ஏரிகளை அமைக்கின்றனர். இந்த நீரை நகரமக்கள் பெறுவதற்குப் பெரிய குழாய்களைப் பூமியில் புதைத்து அவற்றினின்று சிறுசிறு குழாய்களை இணைத்து வீடுகள் தோறும் தண்ணீர் வசதிகளைத் தந்துள்ளார்கள்.

4. இவ்வாறு வசதி செய்து வீட்டுக் குழாய்களில் விடப்படும் நீர் சுத்தமானதாக இருக்காது. அதில் வண்டல், அழுக்கு முதலியன கலந்து இருக்கும். நோயை விளைவிக்கும் நோய்க் கிருமிகளும் கலந்திருக்கும். ஆகவே, சுத்த நீராகக் குடிக்கும் பக்குவத்தில் அமையும்பொருட்டுச் சிற்சில மருந்துப் பொருள்களையும், சிற்சில வாயுப் பொருள்களையும் கலப்பர். அவை குளோரின் வாயுவும், கலவைப் பொடியு மாகும். இவற்றால் அந்நீரில் உள்ள நோய்க் கிருமிகள் அழிந்து நல்ல நீராக அமையும்.

5. தண்ணீரை வடிகட்டுதற்குச் சில முறைகளைக் கையாளுகின்றனர். வாய்க்கால் வழியாகவோ, குழாய் வழியாகவோ வரும் நீரை வடிகட்டும் பாத்திகளில் விழச் செய்வார்கள். அப்பாத்திகளின் அடியில் சரளைக் கற்களும் பெரு மணலும் பரப்பப்பட்டிருக்கும். சிற்சில பாத்திகளில் இரண்டு மூன்று அடி உயரத்துக்குப் பொடி மணல் பரப்பப்பட்டிருக்கும். இந்தப் பாத்திகளில் விழும் நீர், பாத்திகளின் அடிப்புறமாக வெளியே கசிந்து வரும். நீர் வெளிவர அசுத்தங்கள் பாத்திகளின் மேல் தங்கிவிடும்.

6. மற்ளெரு முறைப்படியும் தண்ணீரைச் சுத்தப் படுத்துதல் உண்டு. அதனை இயற்கை முறையில் சுத்தப் படுத்துதல் என்று கூறலாம். ஏரியில் இருந்துவரும் நீரைப் பெரிய குளங்களில் சில நாள் தேங்க வைப்பார்கள். தண்ணீருக்குமேலே அசுத்தங்கள் மிதந்து கொண்டிருக்கும். ஆனால், அவை நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாகக் குளத்தின்



அடிமட்டத்தை அடைந்து தங்கிப் படிந்துவிடும். பெரிய குளமாக இருப்பதால் மேலே மூடிவிட முடியாது. அதனால் சூரியனது ஒளி அதன் மீது நன்கு படிதற்கு வசதி ஏற்படுகிறது. அப்பரிதியின் ஒளி வன்மையால் தண்ணீரில் உள்ள நோயக் கிருமிகள் வளர்தற்கு இன்றி நசித்துப் போகின்றன. இதனாலும் தண்ணீர் தூய்மையுறுகிறது.

7. மற்ளெரு முறைப்படியும் நீரைச் சுத்தப்படுத்தலாம். நீர்த்தேக்கத்திலிருந்து வரும் தண்ணீர் கலங்கலாக

இருந்தால், படிகாரம் கரைத்த நீரை அதனோடு கலக்க வேண்டும். அப் படிகார நீர் மண் முதலிய அசுத்தங்களையும் நோய்க் கிருமிகளையும் தான் பற்றிக்கொண்டு மெல்லிய தகட்டு வடிவம் அடைந்து, நீர்நிலையின் அடிப்புறத்தே தங்கி விடும். அதன்பின் தண்ணீர் தெளிந்து தூய் நிலையடைந்து காணப்படும்.

8. இவ்வளவு அருமையுடன் கிடைக்கப் பெறுகின்ற நீரை வீணே செலவழிக்கக்கூடாது. அசுத்தப் படுத்தல் கூடாது. வேண்டிய அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சிலர் குழாயை இரவில் திறந்து விட்டுவிடுகிறார்கள். அது கீழேயுள்ள தொட்டியை நிரப்பியும்கூட அதனை மூடுவதில்லை. நீர் வீணே வழிந்து போய்க்கொண்டிருக்கும். இப்படி நீரை வீணே செலவிடுகின்றார்கள். இதை அறிந்தும் இப்பொழுது நீர் இல்லாக் குறையின் பொருட்டும் குறிப்பிட்ட நேரங்களில் குழாயில் நீர் வர நகராண்மைக் கழகத்தார் ஏற்பாடு செய்திருக்கின்றனர். ஆகவே, அவர்களுக்கு முன்பே நாமும் நீரின் பெருமை அறிந்து 'நீரைச் சிந்தினையோ' சீரைச் சிந்தினையோ' என்னும் பழமொழியை உணர்ந்து நீரைச் சிக்கனமாகச் செலவு செய்வோமாக.

**அருஞ் சொற்கள் :**

கிருமிகள்-பூச்சிகள், தூய்மை-சுத்தம், தகட்டு வடிவம்-தகடு வடிவம், சீர்-செல்வம்.

**கேள்விகள் :**

1. நீர் உயிர்களுக்கு மிக மிக இன்றியமையாதது என்பதை எப்படி அறிகிறோம்.
2. நாட்டுப்புறவாசிகளும், நகரவாசிகளும், எப்படிக் குடிநீரைப் பெறுகின்றனர் ?
3. நீர் சுத்தமடையக் கலக்கப்படும் பொருள்கள் எவை ?

4. நீரைச் சுத்தம் செய்யும் முறைகள் யாவை?
5. இயற்கை முறையில் நீர் எங்ஙனம் தூய்மை அடைகிறது?
6. நீரை வீணே பயன் படுத்தக் கூடாது என்பதை விளக்க எழுந்த பழமொழி யாது?

**பயிற்சி :**

1. நீரைச் சுத்தம் செய்யும் முறைகளை ஒரு கட்டுரையாக எழுது.
2. சென்னையில் உள்ள புதிய நீர்த்தேக்கமுள்ள இடத்தையும், அத்தேக்கத்தின் பெயரையும் குறிப்பிடு.
3. நீர் எவ்வாறு பயன் படுகிறது என்பதைக் குறித்து ஒரு சிறு குறிப்பு எழுது.

## இலக்கணம்

## வினைச்சொல்:

### முற்றும் எச்சமும்

வினை முற்றில் பொருள் முடிந்து நிற்கும்.

(உ-ம்) அவன் **ஓடினான்**. அவள் **பாடினாள்**

அவன் ஓடினான் என்று கூறுவதற்குப் பதிலாக 'அவன் ஓடி' என்று எழுதினால் பொருள் முடிந்திருக்கிறதோ? இல்லை. ஆகவே, பொருள் முடியாத சொல் **எச்சம்** எனப்படும் எனவே 'ஓடி' எச்சமாம்.

**'படித்த** பையன்' என்பதில் படித்த என்பதும் எச்சமாம். இவ்வெச்சம் பெயர்ச் சொல்லைத் தழுவி நின்றால் **பெயரெச்சம்** எனப்படும். 'படித்த' என்னும் எச்சம் 'பையன்' என்னும் பெயரைத் தானே தழுவி நிற்கிறது? ஆகவே, படித்த என்னும் வினை, பெயர் எச்ச வினையாம்.

'ஓடி' என்னும் வினை எதைத் தழுவி வரும்? ஓடி 'ஆடினான்' என ஆடினான் என்னும் வினையைக்கொண்டு முடியும். ஆகவே, 'ஓடி' **வினையெச்ச வினையாம்.**

**பயிற்சி :**

1. முக்கியமாகும், சிறிது, கவனிப்போம், அமைந்து, கிடக்கிறது. பொழிந்து, வருகிறார், அமைத்த, வேண்டிய, தங்க, செய்து, பெரிய, அமைக்கின்றனர். இவற்றுள் முற்றுச் சொற்கள், எச்சச் சொற்கள் எவை?

2. ஆறாவது பாராவில் காணும் வினை முற்றுக்களை எடுத்து எழுது.
3. ஏழாவது பாராவில் உள்ள பெயர் எச்சங்களை எழுதிக் காட்டு.
4. எட்டாவது பாராவில் உள்ள வினை எச்சங்கள் எவை?
5. நீங்களாக ஐந்து எச்ச வினைகளை எழுதிக் காட்டுக.

# 9. ஆலமரத்தின் சுய சரிதை

1. அருமை மாணவர்களே! நான் எப்படி உண்டானேன் என்பது உங்களுக்குத் தெரியுமா? தெரியாவிட்டால் கூறுகிறேன் கேளுங்கள்: என் வளர்ச்சியையும் பிறப்பையும் கண்டு என் விதை மிகப்பெரியதாக இருக்கும் என்று எண்ணுவீர்கள். அப்படி எண்ணி ஏமாந்து விடாதீர்கள். நீங்கள் பார்க்கிறபடி நான் 600 அல்லது 700 அடி பரப்புக்கு வளர்வேன்தான். நான் பரந்த இடம் ஒரு கூடாரம்போல் இருக்கும். என்னுடைய பரந்த நிழலில் அண்ணல் யானை, அணி தேர், காலாட்படை, குதிரைப்படையாகிய இவற்றோடு, ஒரு பெரிய மன்னனும் தங்கி இளைப்பாறலாம் என்றால், என் பரப்பளவைக் கூறவேண்டுமா? இவ்வளவு அகன்று வளர்வதற்கான என் விதை மிகமிக நுண்மையானது. மீன் முட்டையிலும் சிறியது என்றால், வேறு உங்களுக்கு என்ன கூறுவேன்? இந்த உண்மை எல்லாம் தெரிந்துதான் அதிவீரராமபாண்டியர் என்னும் புலவர் கூட என்னைப் பற்றிப் பாடும்போது,

> தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
> தெண்ணீர் கயத்துச் சிறுமீன் சினையினும்
> நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
> அணிதேர் புரவி ஆட்பெரும் படையொடு
> மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.

என்று குறிப்பிட்டுள்ளார்.

2. உண்மையில் நான்தான் மரங்களுக்கெல்லாம் அரச மரம். ஏனெனில், என்னைப்போலப் பெரிய மரம், பரப்



புடைய மரம் தாவர இனத்தில் கிடையாது என்று உறுதியாகக் கூறுவேன். ஆனால், எனக்கு அரசமரம் என்னும் பெயர் ஏற்படவில்லை. ஆலமரம் என்றுதான் பெயர் வழங்கப்படு கிறது. என்னிலும், பரப்பளவில் குறைவுடைய மற்றொரு மரம் அரசமரம் என்னும் பெயரைப் பெற்றுவிட்டது. அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அதுவும் என் இனம்தானே சுகமாக வாழட்டும். பிள்ளைகளே! எந்த மரத்திற்கும் இல் லாத ஒரு வியப்பான செயல் என்னிடத்தில் நிகழும். அதா வது என் கிளைகளில் இருந்து விழுதுகள் கீழ்நோக்கிப் புறப் படும். அவை பூமிவரை வந்து நிலத்தையும் ஊடுருவிச் சென்றுவிடும். அவை நான் எவ்வளவு பெரிய புயல் காற் றாலும் கீழே சாய்ந்து விடாதபடி தூண்கள்போல் அமைந்து

என்னைத் தாங்கி நிற்கும். என் விழுதுகளுக்கு மதலை என்றும் ஒரு பெயர் உண்டு. மதலை என்பது மகனையும் குறிக்கும் சொல்லாகும். மதலை எப்படி என்னைத் தாங்கி நிற்கிறதோ, அப்படியே ஒரு குடும்பத்தைத் தாங்கவேண்டிய பொறுப்பு மகனுக்கு ஏற்பட்டிருப்பதால் அவனையும் மதலை என்றனர் புலவர்கள்.

3. பிள்ளைகளே! சில மரங்களைப்போல் என் முழு உறுப்புக்களும் மக்களுக்குப் பயன்படுவது இல்லை. என் மரம் மக்கட்கு மரச்சாமான்கள் செய்யப் பயன்படுவது கிடையாது. என் கனிகளையும் மக்கள் உண்பது இல்லை. ஆனால், என்னிடத்தில் தோன்றும் பழங்கள் பறவைகளுக்கு இனிய உணவாகும். என்னிடம் பழம் பழுத்திருக்கிறது என்பதை அறிந்ததும், பறவைகள் தாமே வந்து என்னையடையும். அதனால்தான், 'மரம் பழுத்தால் வௌவாலை வா என்று இரந் தழைப்பார் அங்கு யாரும் இல்லை' என்று கூறுகின்றனர். என் இலைகள் மனிதர்களுக்கு மிகவும் பயன்படுகின்றன. என் இலைகளைக் கிள்ளியெடுத்துச் சென்று ஈர்க்குக் குச்சியினால் தைத்து உண்கலமாக உபயோகிக்கின்றனர். நான் பச்சையாக இருக்கும்போது இலையாகத் தைக்கப் பயன்படுவேன்; உலர்ந்தபோதும் தைக்க உபயோகப்படுவேன். என் னால் எத்தனையோ ஏழைகள் இந்த இலை தைக்கும் வேலை செய்து ஜீவனம் பண்ணுகிறார்கள் என்றுகூடத் துணிவுடன் கூறுவேன்.

4. இவ்வாறு நான் பயன் படுவதால் என்னைச் சாலை ஓரங்களில் வைத்து அரசாங்கத்தார் வளர்க்கின்றனர். 'பனை மரம் பெரிய விதையைக் கொண்டு வளர்ந்து ஒருவருக்கும் நிழல் கொடுப்பதில்லை. நாமோ சிறிய விதையைக் கொண்டு பரந்த நிழலைத் தருகிறோம்' என்று நான் கர்வம் கொள்வ

தில்லை. அருமை மாணவர்களே! நீங்களும் உங்கள் திறமை பெரிதாக இருந்தால், அதற்காகக் கர்வம் கொள்ளாதீர்கள். அவர் அவர்கள் தம் கடமையைச் செய்வதற்காகவே கடவுள் படைத்திருக்கிறார். நாமும் நம்மால் ஆன கடமையைச் செய்வோமாக. என் வாழ்க்கை வரலாற்றை இத்துடன் கூறி முடித்துக்கொள்கிறேன்.

**அருஞ் சொற்கள்:**

அண்ணல் யானை-பெருமையில் சிறந்த யானை, அணிதேர்-அழகிய தேர், சினை-முட்டை, வியப்பு-ஆச்சர்யம், விழுதுகள்-வேர்கள், இரந்து-கெஞ்சி, கலம்-பாத்திரம்.

**கேள்விகள் :**

1. ஆலமரம் எவ்வளவு தூரம் பரந்து வளரும்?
2. அது யார் யாருக்கு நிழலைத் தரும்?
3. ஆலமரத்தினிடம் காணப்படும் வியப்பான செயல் எது?
4. ஆலமரம் யார் யாருக்கு எம்முறையில் பயன் படுகிறது?
5. ஆலமரம் கூறும் புத்திமதி யாது?

**பயிற்சி :**

1. நால்வகைப் படைகளைக் குறிப்பிடு.
2. அதிவீரராம பாண்டியரைப்பற்றிச் சிறு குறிப்பு எழுது.
3. மதலை என்னும் சொல்லைப்பற்றி விளக்கமான குறிப்பு எழுது.

**இலக்கணம் :**

## தன் வினையும், பிறவினையும்

**ஓடினான், ஓட்டினான்** என்னும் இருவினைச் சொற்களுக்குள்ள வேறுபாடு யாது? ஓடினான் என்பதில், தானே ஓடினான் என்பதும், ஓட்டினான் என்பதில், தான் பிற ஒன்றை ஓட்டினான் என்பதும் பொருளன்றோ? ஆகவே, தானே செய்யும் வினையாதலின் **ஓடினான்** என்பது **தன் வினை**யாம். பிற செய்யும் வினையாதலின் **ஓட்டினான்** என்பது **பிறவினை**யாம்.

## பெயர் அடையும், வினையடையும்

**மெல்லப் பேசினான்** என்னும் தொடரில் மெல்ல என்பது பேசினான் என்னும் வினைச்சொல்லின் அடைமொழியாகும். இவ்வாறான

சொற்களை **வினையடை** என்று கூறலாம். **நல்ல** என்பது **பையன்** என்னும் சொல்லுக்கு அடைமொழியாக இருக்கிறது. இதனுல் நல்ல என்பது **பெயர்** அடையாம்.

**பயிற்சி :**

1. விதை பெரியதாக இருக்கும். ஒரு பெயர் உண்டு. கனிகளை மக்கள் தின்பதில்லை. பறவைகள் என்னை அடையும். நான் ஆடினேன். நான் ஆட்டினேன். நான் தேய்ந்தேன். படிப்பித்தான். நீ தேய்ந்தனை—இவ்வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்கள் இன்ன வினையெனக் குறிப்பிடு.
2. செய், பாடு நட, மடி, வை என்னும் வினைச் சொற்களைக் கொண்டு தன்வினை பிறவினைச் சொற்களை எழுதிக் காட்டு.
3. மெல்ல கூறினன், கரிய பொருள், தீய சொல், பைய நட-இத் தொடருள் பெயர் அடைச்சொல், வினை அடைச்சொல் எவை ?

# 10. உடற்பயிற்சி

1. பிள்ளைகளே ! "சுவரை வைத்துக் கொண்டுதான் சித்திரம் எழுதவேண்டும்" என்பது நம் நாட்டுப் பழமொழிகளில் ஒன்று. இதன் பொருள் யாது ? சித்திரஞ் சிறந்த கலைதான். அது மக்களுடைய கண்ணையுங் கருத்தையும் கவர வல்லதுதான். ஆனுல், அதனை எப்படி எழுதிக்காட்டுவது ? அதற்கு ஆதாரமாகச் சுவர் இருந்தால் தானே அச்சுவரில் எழுதிக் காட்ட இயலும். அச்சுவரும் சொரசொரப்பாக இல்லாமல் நன்கு வெண்சுதை தீட்டப் பட்டதாய் வழவழப்புடையதாய் வன்மை பெற்றதாய் அன்றோ இருக்கவேண்டும்! அதுபோலவே நம் உடலும் நல்லமுறையில் ஆரோக்கியமாக இருந்தால்தான் எந்தக் காரியத்தையும் செய்ய இயலும். எனவே, இந்தப் பழமொழி உடல் நல்ல நிலையில் இருக்க வேண்டும் என்பதை விளக்குதற்குரிய பழமொழி என்னலாம்.

2. உடல் நல்ல உரம்பெற்றதாய், நோய்நொடி இல்லா ததாய் இருந்தால் உலகில் நல்வாழ்வு நடத்த முடியும். எவ்வளவு செல்வம் இருந்தாலும், கல்வி அறிவு இருந்தாலும், போக்குவரவுக்குரிய சாதனங்கள் இருந்தாலும் உடல் உரங் குன்றி, நோய் கண்டு நலிந்து இருந்தால் பயன் இல்லை. ஆகவே, இம்மை இன்பத்தை நல்ல முறையில் துய்க்க வேண்டுமானுலும், ஆரோக்கியமாக இருக்க வேண்டுமானுலும், உடற் பலம் மிகமிக இன்றியமையாததாகும்.

3. உடற் பலம் எப்படி வரும்? வேளா வேளைக்கு உண்டு வந்தால் உடல் உரம் வந்து விடுமா? உண்ட உணவு எளிதில் ஜீரணமாகாமல் வயிற்றுப் போக்குத்தான் ஏற்படும். உடல் உரம்பெற வேண்டுமானுல் உடற் பயிற்சி செய்ய வேண்டும். உடற் பயிற்சியால் தேக பலத்தை நன்கு பெறலாம். தேகபலம் மனேபலத்தைப் பெருகச்செய்யும். நல்ல ஞாபகசக்தி இருந்தால்தானே கல்வியை நன்கு கற்க முடியும்? உடல்பலம் குன்றி நோய் வாய்ப்பட்டவன் எப்படிப் படிக்க இயலும்? நோயாளிக்குப் பாடம் சொல்லாதே என்று எச்சரிக்கை செய்கிறது தமிழ் இலக்கணமாகிய நன்னூல். "பிணியனுக்குப் பகரார் நூலே" என்பது அந்நூல் விதி. ஆகவே, பள்ளியில் படிக்கும் மாணவர்களுக்குத் தேகப் பயிற்சி மிக மிக வேண்டற்பாலது.

4. தேகப் பயிற்சி செய்வதால் நரம்புகள் முறுக்கேறுகின்றன. தசைகள் நன்கு திரண்டு வருகின்றன. மூச்சோட்டமும் நன்கு நடக்கிறது. இரத்த ஓட்டமும் தடைப் படுவதில்லை. நல்ல பசி எடுக்கத் தொடங்கும். கழிவுப் பொருள்கள் உடலில் தங்கப்பெருமல் வெளியே தள்ளப்படும். உடற்கட்டு அமையப்பெற்றவர் சுறுசுறுப்புடையவராய், கம்பீரத் தோற்றம் வாய்க்கப்பெற்றவராய், தைரியம் மிக்கவராய் விளங்குவர்.

5. "உடற்பயிற்சியை எப்படிச் செய்வது ?" என்று நீங்கள் கேட்கலாம். பார் விளையாட வேண்டும். தண்டால் எடுக்கவேண்டும். ஓட்டம் ஓடவேண்டும். குஸ்தி பழகல் வேண்டும். நீந்துதலும் தேகப்பயிற்சிக்குரிய முறைகளில் ஒன்றாகும்.

6. பந்தாடுதலும் சிறந்த பயிற்சியாகும். பந்தாட்டத்தில் ஓய்ந்து இருக்க முடியாதல்லவா ? பந்து செல்லும் இடங்களுக்கெல்லாம் ஓடிக்கொண்டே இருக்க வேண்டும். இப்படிப் பல முறை செய்வதால் தொலை தூரம் நெடுக ஓடியதற்குச் சமமாகிறது. நம் நாட்டுப் பழைய விளையாட்டாகிய பளிங்குடு குடு என்னும் விளையாட்டைப் பற்றி என்ன நினைக்கின்றீர்கள்? அது எளிய விளையாட்டாக இருந்தாலும் அரிய விளையாட்டாகும். அதிலும் ஓடுவதால் ஏற்படக் கூடிய பலன்கள் உண்டாகும்.

7. வாலி பால், பேஸ்கட் பால் ஆடுவதும் சிறந்த தேகப்பயிற்சியாகும். ஆட்டம் இளைஞர்கட்கு மிக மிக



அவசியமானது என்று அறிந்துதான் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் இதனையும் ஒரு பாடமாகச் சேர்த்திருக்கின்றனர்.

8. இந்த உடற்பயிற்சியை அவர் அவர்கள் வயதுக்கேற்ற முறையில் செய்யலாம். செல்வ நிலைக்கேற்ற நிலையில் செய்ய லாம். அரசகுமாரர்கள் தண்டால், பஸ்கி, முதலிய தேகப் பயிற்சியைச் செய்வதோடு, யானை ஏற்றம், குதிரை ஏற்றம் முதலியவற்றைப் பழகலாம். அப்படித்தான் பழகிவந்தனர் நம் நாட்டு அரச இளைஞர்கள். நாட்டுப்புறங்களில் உள்ளவர் ஏற்றம் இறைப்பதன் மூலமும் தம்மையறியாமல் தேகப் பயிற்சியைச் செய்து வருகின்றனர். கடினமான தேகப் பயிற்சிகளைச் செய்ய முடியாதவர்கள் காலை மாலைகளில் இரண்டு கல் தொலைவு உலாவி வரலாம் ; தோட்டவேலைகளைச் செய்யலாம்.

9. தேகப்பயிற்சியைச் செய்வதற்குரிய நேரம் காலை யும் மாலையும் ஆகும். அப்பொழுதுதான் சோர்வு காட்டாது ; சூரியனுடைய வெம்மை தாக்காது ; பகற்பொழுது செய்வது சோர்வை மிகுதியும் தரும் நேரமாகும். இரவில் செய்வது தளர்ச்சியைத் தருவதாகும். ஆகவே, தேகப்பயிற்சியைக் காலை மாலையில் சேய்வதே உசிதமாகும். காலை மாலைகளில் தேகப்பயிற்சி செய்யவேண்டும் என்பதை மட்டும் மனத்தில் கொண்டு, இருட்டறையிலும், காற்றோட்டம் இல்லாத இடங் களிலும் தேகப்பயிற்சியைச் செய்வது, குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக் கொள்வதற்குச் சமமாகும்.

10. ஆகவே, அருமை மாணவர்களே, நீங்கள் உண் மையில் தாய் நாட்டுப் பற்றுடையவர்களானால், நம் தாய் நாட்டுக்கு உங்கள் கடமையை ஆற்றவேண்டுமென எண் ணங் கொண்டவர்களானால், உடல் உரம்பெற முந்துங் கள். தேகப்பயிற்சியை இடைவிடாமல் செய்து வாருங்கள். உடற்பயிற்சி வகுப்புக்களுக்குத் தவறாமல்போய் உடற்பயிற்

சியைச் செய்யுங்கள். இளைஞர்களாகிய நீங்களே தாய் நாட்டின் செல்வங்கள். "உடம்பார் அழியின் உயிரார் அழிவார்."

### அருஞ் சொற்கள் :

சுதை-சுண்ணும்பு, உரம்-வன்மை, நொடி-இளைப்பு, போக்குவரவுக்குரிய சாதனம்-வண்டி வசதிகள், நலிந்து-மெலிந்து, இம்மை இன்பம்-இப்பிறவியில் அனுபவிக்கும் இன்பம், துய்க்க-அனுபவிக்க, பிணியன்-நோயாளி, பகரார் - சொல்லமாட்டார், நூல் - சாஸ்திரம், இலக்கணம், தசை-சதை, கழிவுப் பொருள்கள்-மலம், மூத்திரம், வியர்வை, ஆற்ற-செய்ய.

### கேள்விகள் :

1. சித்திரம் எழுதவேண்டிய சுவர் எவ்வாறு இருத்தல் வேண்டும் ?
2. உடற்பயிற்சியினல் ஏற்படும் நன்மைகள் எவை ?
3. உடல் உரம்பெற எவ்வெப்பயிற்சியை மேற்கொள்ள வேண்டும் ?
4. தேகப் பயிற்சியை எங்குச் செய்ய வேண்டும் ? எங்குச் செய்யக் கூடாது ? எப்பொழுது செய்ய வேண்டும் ?

### பயிற்சி :

1. இப்பாடத்தில் வந்துள்ள பழமொழிகளை எடுத்துக் காட்டு.
2. நீங்களாக வேறு இரண்டு பழமொழிகளைக் குறித்துக் காட்டுங்கள்.
3. 'உடம்பார் அழியின் உயிரார் அழிவார்' என்பது எந்த நூலில் உள்ளது என்பதைக் கேட்டு அறிக.
4. அவர் அவர் வயது, செல்வ நிலையாகிய இவற்றிற்கு ஏற்ற உடற்பயிற்சிகளைக் குறிப்பிடு.

### இலக்கணம்

## எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்.

**அவன் வந்தான்** என்னும் தொடருக்கும், **பாடங்களைப் படிக்க** என்னும் தொடருக்கும் உள்ள வேறுபாடு யாது ? அவன் வந்தான் என்னும் தொடர் பொருள் முடிந்து காணப்படுகிறது. "பாடங்

களைப் படிக்க" என்னும் தொடர் பொருள் முற்றுப்பெறுமல் நிற்கிறது ஆகவே, பொருள் முடிந்த தொடர், முற்றுத் தொடர் என்று கூறப்படும். வாக்கியம் என்றும் இதனைக் கூறலாம்; பொருள் முடியாத தொடர் எச்சத் தொடர் எனப்படும்.

முற்றுத் தொடரில் மூன்று உறுப்புக்கள் உண்டு. அவை எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்பன.

(உ-ம்) கந்தன் பாடங்களைப் படித்தான்.

கந்தன் — **எழுவாய்**

படித்தான் — **பயனிலை**

பாடங்களை — **செயப்படுபொருள்**

வாக்கியத்தில் பொருள் முடிந்துள்ள இடம் பயனிலை. பயனிலையைக் கொண்டு யார், எது என்று வினவும்போது வரும்விடை எழுவாய். அந்தப் பயனிலையைக் கொண்டே யாரை, எதை என்று வினவும் போது வரும் பதில் செயப்படுபொருள். இந்த முறை கந்தன் பாடத்தைப் படித்தான் என்னும் உதாரணத்தில் பொருந்தி யிருப்பதை அறிந்துகொள்க.

**பயிற்சி:**

1. கீழ்வரும் தொடர்களுள் முற்றுத் தொடர்களை எடுத்துக் காட்டு. சித்திரம் எழுத வேண்டும், நாட்டுப் பழமொழிகளில், எப்படி எழுதி, நோய் கண்டு நலிந்து, நன்கு கற்க முடியும், காரியத்தையும் செய்ய இயலும்.
2. எட்டாவது பாராவிலிருந்து நான்கு முற்றுத் தொடர்களையும், நான்கு எச்சத் தொடர்களையும் எடுத்துக் எழுது.
3. மூன்ருவது பாராவில் உள்ள வாக்கியங்கள் ஒவ்வொன்றிற்கும் எ, ப, செ, கூறு.
4. எழுவாய், பயனிலை, செயப்படுபொருளை அமைத்து நீங்களாக மூன்று உதாரணங்களை எழுதிக் காட்டுக.

# I. தோத்திரப்பாக்கள்

## தேவாரம்

1. வாசி தீரவே காசு நல்குவீர் ;
மாசில் மிழலையீர் ! ஏசல் இல்லையே.
2. இறைவர் ஆயினீர் ; மறைகொள் மிழலையீர் !
கறைகொள் காசினை முறைமை நல்குமே.

—திருஞான சம்பந்தர்.

## நாலாயிரப் பிரபந்தம்

3. செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே !
நெடியானே ! வேங்கடவா ! நின்கோயி லின்வாயில்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய்க் காண்பேனே.

—குலசேகராழ்வார்.

## திருப்புகழ்

4. அபகார நிந்தைபட் டுழலாதே,
அறியாத வஞ்சரைக் குறியாதே,
உபதேச மந்திரப் பொருளாலே,
உனைநான் நினைந்தருள் பெறுவேனோ ?
இபமாமு கன்தனக் கிளையோனே !
இமவான்ம டந்தைஉத் தமிபாலா !
சபமாலை தந்தசற் குருநாதா !
திருவாவி னன்குடிப் பெருமாளே.

—அருணகிரிநாதர்.

## நீதி நூல்

5 எப்புவி களும்பு ரக்கும்
ஈசனைத் துதிக்க வேண்டின்,

'அப்பனே! தாயே' என்போம்!
அவரையே துதிக்க வேண்டின்,
ஒப்பனை உளதோ வேலை
உலகின்கண்? புலனில் தோன்றும்
செப்பரும் வெய்வம் அன்னார்
சேவடி போற்றாய் நெஞ்சே!

—மாயூரம் வேதநாயகம் பிள்ளை.

## நாட்டுப் பாடல்

6. எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே—அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே—இதை
வந்தனைகூறி மனத்தில் இருத்திஎன்
வாயுற வாழ்த்தேனோ?

—பாரதியார்.

### குறிப்புரை :

1. **திருஞான சம்பந்தர்** : சீர்காழிப்பதியில் அந்தணர் குலத்தில் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் பிறந்தவர். இவர் மூவாண்டிலேயே பாடல் பாடும் வன்மையைப் பெற்றவர். இவ்வன்மை உமாதேவியார் கொடுத்த ஞானப்பால் உண்டதனால் ஏற்பட்டது. அதனாலேயே இவர் ஞானசம்பந்தர் என்று அழைக்கப்பட்டார். இவரும் திருநாவுக்கரசரும் திருவீழிமிழலை என்னும் இடத்தில் இருந்தபோது பஞ்சம் வரவே, அப்பஞ்சம் நீங்கும் வரை படிக்காசு தந்தனர் சிவபெருமான். அக்காசு வட்டம் பெற்று மாறிவந்ததால், வட்டம் பெறாத காசுவேண்டி இப்பாடலைப் பாடினார். இப்பாடல்கள் சம்பந்தர் தேவாரத்தில் உள்ளவை.

1. தேவாரம் = தெய்வத்திற்குரிய பாமாலை, வாசி = வட்டம், மாசு + இல் = குற்றம் இல்லாத, மிழலையீர் = திருவீழிமிழலை என்னும் ஊரில் உள்ள சிவபெருமானே !

2. மறை = வேதவோசை, கறை = வட்டம் பெறும் குற்றம், நல்குமே = கொடுங்கள்.

3. **குலசேகராழ்வார்** : வைஷ்ணவ சமயாசிரியர் பன்னிருவருள் ஒருவர். இவருக்குப் பெருமாள் என்றும் பெயருண்டு. இவர் சேரர் மரபைச் சேர்ந்தவர்; இராமபிரானிடத்தில் மிகுந்த பற்றுடையவர். இவர் பாடிய பாடல்கள் நாலாயிரப் பிரபந்தத்தில் பெருமாள் திருமொழி என்னும் பெயருடன் விளங்குகின்றன. இவர் வடமொழியில் முகுந்த மாலை என்னும் நூலையும் எழுதியுள்ளார். இவர் காலம் கி. பி. 8-ஆம் நூற்றாண்டு. திருமாலின் பெருமைகளைக் கூறும் தோத்திர நூல் நாலாயிரப் பிரபந்தமாம்.

செடி = இழிவு, வல்வினைகள் = கொடிய செயல்கள், வேங்கடவா = திருப்பதி மலையில் உள்ள பெருமாளே, வாயில் = வாசற்படி, வானவரும் = தேவர்களும், அரம்பையரும் = தேவ மாதர்களும், இயங்கும் = உலாவும்.

4. **அருணகிரிநாதர்** : முருகப் பெருமான் திருவருள் பெற்றுத் திருப்புகழ் என்னும் தோத்திர நூலைப் பாடியவர். இவர் ஏறக்குறைய 500 வருடங்களுக்குமுன் திருவண்ணாமலையில் பிறந்தார். இவர் காலத்து மன்னன் பிரபுடதேவ மகாராஜன். இவர் தம் முருக பக்தியால் தேவி பக்தனை சம்பந்தாண்டானை வென்றவர். இவர் கிளியுருவு பெற்று இன்றும் முருகனைப் பாடிக்கொண்டிருப்பதாகக் கூறுகின்றனர். திருப்புகழே அன்றிக் கந்தர் அனுபூதி, கந்தர் அந்தாதி, திருவகுப்பு முதலிய நூல்களையும் பாடியுள்ளார்.

திருப்புகழ் = முருகப்பெருமானுடைய சிறந்த புகழ்களைக் கூறும் நூல். அபகார நிந்தை = தீங்கான இகழ்ச்சி, இபமாமுகன் = யானை முகத்தையுடைய விநாயகன், இமவான் மடந்தை = பர்வதராஜன் மகளான பார்வதி, சற்குரு = நல்ல குரு, திருவாவினன்குடி = பழனி மலை.

5. **மாயூரம் வேதநாயகம் பிள்ளை** : இவர் கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவர். கிறிஸ்தவ மதத்தவர்; மாயவரத்தில் டிஸ்டி

ரிக்ட் முன்ஸீப்பாக உத்தியோகம் பார்த்தவர். தமிழ் அறிவு மிகுதியும் படைத்தவர். இவர் எழுதிய நூல் பிரதாப முதலியார் சரித்திரம், நீதி நூல் முதலியன. இப்பாடல் நீதி நூலில் உள்ளது.

புவி = உலகம், புரக்கும் = காக்கும், வேலை = கடல் சூழ்ந்த, கண் புலனில் = கண்ணறிவிற்கு எதிரே, செப்பரும் = சொல்ல முடியாத பெருமையுடைய, அன்னார் = அந்தப் பெற்றோர், சேவடி = செம்மையான பாதங்களை.

6. **பாரதியார் :** இவரது முழுப் பெயர் சுப்பிரமணிய பாரதியார் என்பது. இவர் எட்டையபுரத்தில் பிறந்து தமிழ் மொழியில் சிறந்த பாண்டித்தியம் அடைந்தவர். இவர் பாடியுள்ள பாடல்கள் தமிழ் மொழிப் பற்றையும், நாட்டுப்பற்றையும் எழுப்ப வல்லவை. இவர் பாடிய பாடல்கள் கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், பாப்பாப் பாட்டு முதலியன.

முந்தையர் = முன்னோர்.

### கேள்விகள் :

1. “வாசி தீரவே” என்னும் பாடல் எப்பொழுது பாடப்பட்டது ?
2. திருப்பதி, பழனி ஆகிய இவற்றிற்குரிய வேறு பெயர்கள் எவை ?
3. திருஞான சம்பந்தர், குலசேகரர், அருணகிரிநாதர் வேண்டும் வரங்கள் யாவை ?
4. திருவீழிமிழலை, திருவேங்கடத்தின் சிறப்புக்கள் யாவை ?
5. முருகப் பெருமானின் தாய், அண்ணன் யாவர் ?
6. எந்தெந்தக் காரணங்களால் பெற்றோரை வணங்குதலே சிறப்புடையது ?
7. நம் நாடு எவ்வெவ்வாறு இருந்தது ?

### பயிற்சி :

1. தேவாரம், பிரபந்தம், திருப்புகழ்-இவற்றின் பொருளை விளக்கு.
2. தோத்திரப் பாடலில் காணப்படும் மூன்று தலங்களை எடுத்துக் காட்டு.
3. சம்பந்தர் காலத்து உடன் இருந்த அடியாரைக் குறிப்பிடு.
4. பன்னிரண்டு ஆழ்வார்களில் நால்வர் பெயரைச் சுட்டிக் காட்டு.
5. ‘எப்புவிகளும்’ என்று தொடங்கும் பாடலின் கருத்துக்கேற்ற கொன்றை வேந்தன் தொடரைக் குறிப்பிடு.

# II. நீதிப்பாக்கள்

## 1. திருக்குறள்

1. அகர முதல எழுத்தெல்லாம் ; ஆதி
பகவன் முதற்றே உலகு.

2. செயற்கரிய செய்வார் பெரியர் ; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

3. விசும்பின் துளிவீழின் அல்லான்,மற் றுங்கே
பசும்புல் தலைகாண் பரிது.

4. ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே,
செல்லும்வாய் எல்லாம் செயல்.

5. தென்புலத்தார், தெய்வம் விருந்தொக்கல், தானென்று
கைம்புலத்தா றோம்பல் தலை. [ங்

6. தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

7. மகன்றந்தைக் காற்று முதவி, "இவன்றந்தை
என்னோற்றான்கொ"லெனுஞ் சொல்.

8. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய; ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

9. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்.

10. இனிய உளவாக இன்னாத கூறல்,
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

11. நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

12. நன்றே தரினும் நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

13. அடக்க மமரரு ளுய்க்கும்; அடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும்.

14. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை இழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

15. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரின்
தீமை புரிந்தொழுகு வார்.

16. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் ; பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

17. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

18. நடுவின்றி நன்பொருள் வெ.:.கின், குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

19. ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்,
தீதுண்டோ மன்னு முயிர்க்கு ?

20. சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

21. தீயவை தீய பயத்தலால், தீயவை
தீயினு மஞ்சப் படும்.

22. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின்.

23. நல்லா றெனினும் கொளற்றீது ; மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

24. வசையொழிய வாழ்வாரே வாழ்வா; ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

25. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்; பொருட்
பூரியார் கண்ணு முள.

26. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்.

27. ஒன்னார்த் தெறலு, முவந்தாரை யாக்கலு
மெண்ணின் தவத்தான் வரும்.

28. மழித்தலும் நீட்டலும் வேண்டா, வுலகம்
பழித்த தொழித்து விடின்.

29. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

30. எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

31. மறத்தல் வெகுளியை யார்மாட்டும்! தீய
பிறத்த லதனால் வரும்.

32. பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.

33. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழும் நெறி.

34. உறங்குவது போலும் சாக்கா; டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

35. யானென தென்னுஞ் செருக்கறுப்பான், வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

36. எப்பொரு ளெத்தன்மைத் தாயினும், அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

37. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துள் துன்பங் கெடின்.

38. நுண்ணிய நூற்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.

39. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன், மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

40. கண்ணுடைய ரென்போர் கற்ரோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்

—திருவள்ளுவர்.

**குறிப்புரை :**

குறள் என்பது இரண்டடிகளைக் கொண்ட ஒருவகைப் பாட்டு. அந்தப் பாடல்களால் பாடப்பட்டதனுல், இந்நூல் திருக்குறள் என்று பெயர் பெற்றது. திரு என்பது இந்நூலின் பெருமை நோக்கிச் சேர்க்கப்பட்ட ஓர் அடைமொழி. இந்நூலை எழுதியவர் திருவள்ளுவர். இவர் கடைச்சங்க காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். இவர் நூல் எல்லாப் புலவர்களாலும் மிகுதியும் பாராட்டப்படுவதாகும். இவர் மதுரையில் பிறந்து மயிலையில் வாழ்ந்தவர். இவர் பெற்ரோர் ஆதியும் பகவனும் ஆவர். மனைவியார் வாசுகி அம்மையார்.

**அருஞ்சொற்கள் :**

1. முதற்று-முதலாக உடையது, 3. விசும்பின்-ஆகாயத்திலிருந்து, 4. ஒல்லும் வகையால்-இயன்றவகையில், ஒவாது-தடைபடாமல், 5. தென்புலத்தார்-குடும்பத்தில் இறந்துபோன முன்னோர் (பிதுர்க்கள்), விருந்து-புதிதாக வந்தவர், ஒக்கல்-உறவினர், ஐம்புலத்து-ஐவகை இடத்தும், ஆறு-தருமம் செய்யும் வழியை, ஓம்பல்-தவருமல் செய்தல், தலை-சிறந்தறம், 6. பேணி-போற்றி, தகைசான்ற-நன்மை அமைந்த, 7. நோற்ருன்-தவஞ் செய்தான், 9. அகன் அமர்ந்து-மனமகிழ்ச்சி கொண்டு, செய்யாள்-இலக்குமி, உறையும்-வாழ்வாள், ஓம்புவான்-காப்பவன், 10. இன்னுத-யசொற்கள், 12. நடு இகந்து-நடுநிலைமை தவறி, ஆக்கத்தை-செல்வத்தை, 13. அமரருள்-தேவர் உள்ள இடத்தில், உய்க்கும்-கொண்டு சேர்க்கும், ஆர் இருள்-கொடிய நரகம், 15. விளிந்தார்-இறந்தவர்கள், ன்ற-சந்தேகம் இல்லாமல், 16. ஒறுத்தார்க்கு-தண்டித்தவர்க்கு, பொன்றுந் துணையும்-அழியும் அளவும், 18. வெஃகின்-விரும்பினுல், ஏதிலார்-றர், 20. பூரியார் கண்ணும்-அற்பரிடத்தும், 27. ஒன்னர்-பகைவர், றலும்-கெடுத்தலும், வெகுளி-கோபம், சாக்காடு-இறப்பு, இறை-டவுள்.

### கேள்விகள் :

1. பகவன் உலக முதல்வன் என்பது எந்த உதாரணத்தால் விளக்கப்பட்டுள்ளது ?
2. இல்லறத்தான் தன் வருவாயை எவ்வெவர்க்குப் பகுத்து உண்ண வேண்டும் ?
3. நற்பெண்ணின் இயல்பு யாது ?
4. நயனுடையான் செல்வம் எப்படிப் பயன்படும் ?
5. நாம் ஏன் பிறர்க்குத் தீங்கு செய்தல் கூடாது ?
6. எவ்வெச் செருக்கை ஒழிக்க வேண்டும் ?

### பயிற்சி :

1. 'விசும்பின் துளி' 'அன்பிலார் எல்லாம்' 'சொல்லுக சொல்லில்' 'மழித்தலும் நீட்டலும்' 'முறைசெய்து காப்பாற்றும்'— என்று தொடங்கும் குறட்பாக்களின் கருத்தைக் குறிப்பிடு.
2. 'ஒல்லும் ஆகையால்' 'அகன் அமர்ந்து,' 'அழுக்காறென,' 'ஒன்னார்த் தெறலும்,' 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும்'— என்று தொடங்கும் குறட்பாக்களுக்குப் பதவுரை தருக.
2. 'இனிய சொல்,' 'ஒழுக்கம் உயர்வளிக்கும்,' 'பொறுமை கடலினும் பெரிது,' 'ஆறுவது சினம்,' 'ஆசையை ஒழி'—இக் கருத்துக்களுக்குரிய குறட்பாக்களை எடுத்து எழுது.

## 2. விவேக சிந்தாமணி

### கல்விச் சிறப்பு

வெள்ளத்தால் போகாது ; வெந்தணலில் வேகாது ;
கொள்ளத்தான் போகாது ; கொடுத்தாலும் குறையாது ;
கள்ளருக்கும் எட்டாது ; காவலுக்குள் அமையாது ;
உள்ளத்தே பொருளிருக்க ஊரிலுழைத் துழல்வானேன் ? 1

### அன்புடன் இடுக

ஒப்புடன் முகம லர்ந்தே உபசரித் துண்மை பேசி,
உப்பிலா கூழிட் டாலு முண்பதே அமிர்தம் ஆகும்;

முப்பழ மொடுபா லன்னம் முகங்கடுத் திடுவராயின்;
கப்பிய பசிய னேடு கடும்பசி ஆகுந் தானே. 2

## எல்லார்க்கும் துன்பம் உண்டு

பாலுக்குச் சக்கரை இல்லையென் பார்க்கும், பருக்கை யற்ற
கூழுக்குப் போடஉப் பில்லைஎன் பார்க்கும், குற்றி தைத்த
காலுக்குத் தோல்செருப் பில்லையென் பார்க்கும், கனக தண்டி
மேலுக்குப் பஞ்சணை இல்லையென் பார்க்கும் விதனம்
[ஒன்றே. 3

## பயனற்றவை

ஆபத்துக் குதவாப் பிள்ளை, அரும்பசிக் குதவா அன்னம்,
தாபத்தைத் தீராத் தண்ணீர், தரித்திரம் அறியாப் பெண்டிர்,
கோபத்தை அடக்கா வேந்தன், குருமொழி கொள்ளாச்
[சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம் பயனில்லை ஏழுந் தானே. 4

—பல புலவர்கள்

### குறிப்புரை :

இந்நூல் பல நூலில் உள்ள அருமையான பாடல்களைக்கொண்டு தொகுக்கப்பட்டது. ஆனல், இதனைத் தொகுத்த ஆசிரியர் இன்னர் என்று கூறுதற்கு இல்லை.

2. முப்பழம்-வாழை, மா, பலா, கடுத்து-சுளித்து, குற்றி-மரக் கட்டை, 3. கனக தண்டி-பொன் பல்லக்கு, விதனம்-விசனம்.

### கேள்விகள் :

1. கல்விப் பொருளின் சிறப்பு யாது ?
2. முகமலர்ச்சியுடனும் முகச்சுளிப்புடனும் இடும் உணவு எவ் வாறு இருக்கும் ?
3. யார் யார் எவ்வெத் துன்பத்தால் வருந்துவர் ?
4. பயனற்ற ஏழு பொருள்கள் எவை ?

### பயிற்சி :

1. கல்விச் செல்வம், பொருட் செல்வம் இரண்டின் வேறுபாட்டை எழுது.
2. 'ஒப்புடன்' என்று தொடங்கும் பாடல் கருத்தைக் குறிப்பிடு.

## 3. நன்னெறி

### பக்கபலம் இருப்பின் எவரும் பயப்படார்

மெலியோர் வலிய விரவலரை அஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவில்,—பலியேல்
கடவுள் அவிர்சடைமேல் கட்செவி யஞ்சாதே
படர்சிறைய புள்ளரசைப் பார்த்து 1

### நற்குடிப் பிறந்தோர் என்றும் நல்குவர்

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ?—பைந்தொடீஇ!
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி.

### இலக்கணம் படித்தவர்முன் எவரும் தலைகுனிவர்

எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்,
எழுத்தறிவார் காணின் இலையாம்—எழுத்தறிவார்
ஆயுங்கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்,
வீயும் சுரநீர் மிகை. 3

### பேர்அறிஞர் பிறர்துன்பம் நீக்க முற்படுவர்

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரம் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவர்—நேரிழாய்!
மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்
கைசென்று தாங்கும் கடிது. 4

—சிவப்பிரகாச சுவாமிகள்.

**குறிப்புரை :**

சிவப்பிரகாச சுவாமிகள் கி. பி. 17-ஆம் நூற்றுண்டுப் புலவர். வீரசைவ மரபைச் சார்ந்தவர். காஞ்சீபுரத்தில் பிறந்தவர். இவர் ஆசிரியர்

வெள்ளியம்பலத் தம்பிரான். இவரை ஆதரித்தவர் அண்ணுமலை ரெட்டியார். இவர் துறைமங்கலத்தில் தங்கியிருந்தமையால் இவரைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் என்பார். இவர் பல நூல்களைப் பாடியுள்ளார். அவற்றுள் சில; சோண சைல மாலை, நால்வர் நான்மணி மாலை, பிரபுலிங்க லீலை, வெங்கைக் கோவை முதலியன.

**அருஞ்சொற்கள் :**

1. மருவில் - சேர்ந்திருந்தால், விரவலர் - பகைவர், பலியேல் - பூசையை ஏற்கும், அவிர்-ஒளிவிடும், கட்செவி-பாம்பு, புள்ளரசு-கருடன். 2. நல்கூர்ந்தான்-தரித்திரன் ஆனுன், இரப்பார்க்கு-பிச்சை கேட்டவர்க்கு, பைந்தொடீஇ-பசுமையான பொன்வளையல் அணிந்த மாதே (மகடூஉ முன்னிலை), அரம்பை-வாழை மரம், 3. எழுத்து - இலக்கணம், சுரநீர்-ஆகாய கங்கை, மிகை - வெள்ளப் பெருக்கு, வீயும் - அடங்கும். 4. நேரிழாய்-நேர்மையாக நகையணிந்த மாதே, மெய்-உடல், வியன்-பெரிய.

**கேள்விகள் :**

1. எப்பொழுது மெலிந்தோர் தம் பகைவர்க்கு அஞ்சார் ?
2. வாழைக் கன்றின் தன்மை யாது ? இதனுல் விளங்கும் கருத்து யாது ?
3. யார் முன் எவர் வணங்கிப் போவர் ? இதற்கு உபமானம் யாது ?
4. பேர் அறிஞர் எதை முன்வந்து ஏற்பர் ?

**பயிற்சி :**

1. 'கட்செவி' பெயர்க் காரணம் கூறு.
2. 'வீயும் சுரநீர் மிகை' இதில் அடங்கிய கதையை எழுது.
3. மகடூஉ முன்னிலையை விளக்கி உதாரணங் கொடு.

# 4. சதகங்கள்

## வேண்டத்தக்கவை

வாலிபந் தனில்வித்தை கற்க வேண்டும்; கற்ற
வழியிலே நிற்க வேண்டும்;
வளைகடல் திரிந்துபொருள் தேட வேண்டும்; தேடி
வளரறஞ் செய்யவேண்டும்;
சீலமு டையோர்களைச் சேர வேண்டும்; பிரிதல்
செய்யா திருக்க வேண்டும்.
செந்தமிழ் பாடல்பல கொள்ள வேண்டும்; கொண்டு
தியாகம் கொடுக்க வேண்டும்;
ஞாலமிசை பலதருமம் நாட்ட வேண்டும்; நாட்டி
நன்ருய் நடத்த வேண்டும்;
நம்பனிணை அடிபூசை பண்ண வேண்டும்; பண்ணி
ணுலுமிகு பத்தி வேண்டும்;
ஆலமர் கண்டனே! பூதியணி முண்டனே!
அழகனெம தருமை மதவேள்
அனுதின மும்மன தினினை தருசதுர கிரிவளர்
அறப்ப ளீசுர தேவனே! (1)

—அம்பலவாணக்கவிராயர்.

## வேண்டாதவை

"பெற்றதாய் தந்தைதன் சுற்றமே முதலான
பெரியோரை முனிதல் வேண்டா;
பின்னென்று முன்னென்று பேசியே அவமானப்
பேர்கொண்டு திரிதல் வேண்டா;
உறவர்கள் போலஉள் பகையான வஞ்சகரை
ஒருநாளும் நம்ப வேண்டா;

ஒருவருக் கிச்சையாய்ப் பொய்சொலிப் பின்சபையில்
ஊமைபோல் நிற்றல் வேண்டா;
சற்றுமே பொறுமையில் லாதவர்கள் சண்டையில்
தான்போய் விலக்கல் வேண்டா;
தைரியம் தனில்விக்ர மாதித்தன் என்னினும்
தன்னையே புகழ வேண்டா;
மற்றென்றும் எண்ணுது செயவேண்டா;" என்பர்
மணவாள நாரா யணன்
மனதிலுறை அலர்மேலு மங்கைமண வாளனே!
வரத வேங்கட ராயனே! (2)

—**நாராயண பாரதியார்.**

**குறிப்புரை :**

1. **அம்பலவாணக் கவிராயர் :** அருணசலக் கவிராயர் குமாரர். இவரைப்பற்றி வேறு குறிப்பு அறிதற்கு இல்லை.

சதகம் என்பது ஒருவகை நூல். அது நூறு பாடல்களைக் கொண்டது. இப்பாடல் அறப்பளீஸ்வரர் சதகத்தில் இருந்து எடுக்கப்பட்டது.

**அருஞ்சொற்கள் :**

அறப்பளீஸ்வரர்-சிவபெருமான், அவர்மீது பாடப்பட்டமையின் இப் பெயர் பெற்றது, பார்-பூமி, வளை-சங்கு, சீலம்-ஒழுக்கம், ஞாலமிசை-உலகில், நம்பன்-சிவபெருமான், ஆல்-விஷம், அமர்-பொருந்திய, கண்டனே-கழுத்தையுடையோனே, பூதி-திருநீறு, முண்டனே-நெற்றியுடையோனே, மதவேள்-ஒரு வள்ளலின் பெயர், கிரி-அறப்பளீஸ்வரர் எழுந்தருளியுள்ள மலை.

2. **நாராயண பாரதியார் :** பிராமண குலத்தவர். திருவெண்ணெய் நல்லூரில் பிறந்தவர். இவர் மணவாள நாராயணன் என்னும் பிரபுவால் ஆதரிக்கப்பட்டவர். இது திருவேங்கட சதகத்தில் இருந்து எடுக்கப்பட்டது. இது திருப்பதி, வேங்கடாசலபதியின் பேரால் ஆனமையின் இப்பெயர் பெற்றது.

**அருஞ்சொற்கள் :**

முனிதல்-கோபித்தல், வெறுத்தல். மணவாள நாராயணன்-ஒரு வள்ளல். அலர்மேலுமங்கை-இலக்குமி.

**கேள்விகள் :**

1. சதகமாவது யாது ?
2. வேண்டத் தக்கவை எவை ? வேண்டாதவை எவை ?
3. திருவேங்கடமுடையான், அறப்பளீஸ்வரர், எவ்வெவ்வாறு சிறப்பிக்கப் பட்டுள்ளரர் ?

**பயிற்சி :**

1. இவ்விரு சதகங்களும் பாடக் காரணமான வள்ளல்களின் பெயர்களைக் குறிப்பிடு.
2. மும்மூர்த்திகளின் தேவிமார்களின் பெயரைக் குறிப்பிடு.
3. வேறு சதகங்கள் இரண்டின் பெயரைக் குறிப்பிடு.

# III. கதைப் பாக்கள்

## 1. தேசிங்கு குதிரையை அடக்கியது

### டில்லி பாதுஷா தேசிங்கை வந்தவரலாறு கேட்டல்

'ஐயா! கேளும்; ஐயா! கேளும்; அறியாப் பாலகரே!
எந்த நாட்டி லிருந்து நீரும் இங்கே தேடி வந்தீர்?
உந்தன் ஊரும், பேரும், நாடும், தகப்பன் பேருமே,
நலமாய்ப் பெற்ற தாயின் பேரும் ஜல்தியில் சொல்லும்'
[என்றான்.

### தேசிங்கு தன் பெயர் முதலியன கூறல்

அந்த வார்த்தையைக் காதிலே காட்டான் அலறும் சிங்கம்
[போல்
சொல்லுகிறேன் கேளும்; சொல்லுகிறேன் கேளும்; டில்லி
[துரையே! நீர்
தெற்கே வெகு தூரம்இருக்குது செஞ்சிக் கோட்டைதான்;
செஞ்சிக்கோட்டை ஆளும் அரசன் தேரணி மகாராசர்;

தேரணிராசர் குமாரன் நான்தான் தேசிங்கு மகிபாலன்,
ஜல்தி ஜல்தி குதிரையைக்கொணரும் டில்லி துரையேநீர்

## குதிரை செய்த செயல்கள்

ஓடிவந்த ராசனைக்கண்டு உதைத்து எழுந்தது பார்;
தேடிவந்த ராசனைக்கண்டு திகைத்துக் கனைத்தது பார்;
அண்டம் இடிந்து விழுந்தாற்போலே அலறிக் கனைத்தது
[பார்;
கோட்டை இடிந்து விழுந்தாற்போலக் குலுங்கக் கனைத்
[ததுபார்.

## தேசிங்கு குதிரை மீது ஏறல்

அந்தவேளையில் என்னசெய்கிறான் ராசா தேசிங்கு ?
குதிரையைத்தட்டிச் சலாம்வாங்கினான் கொல்லும்
[சிங்கம்போல்;
தங்கத்தாலே சீனிப்போட்டுத் தடவிக் கொடுத்தானும்;
புலிக்குட்டியைப் போலப்பாய்ந்து புரவி ஏறினானும்.

## குதிரை அடங்கி விடுதல்

தடதட தடதட தடதட என்று தவிக்குது பார் குதிரை, [ரை
கிடகிட கிடகிட கிடகிட என்று கிளம்பிக் குதிக்குதுபார் குதி
லகானை இழுத்துக் கையிலே பிடித்தான் ராசா தேசிங்கு;
சிமிட்டாகொடுத்த வேகத்தினாலே திகைத்து நின்றது பார்;
நின்றகுதிரையை டில்லிக்குத்திருப்பி நேரே ஓட்டி
[வந்தான்;
நிமிஷந்தன்னில் கீழேகுதித்து நின்றான் தேசிங்கு.

—பெயர் தெரியாத ஆசிரியர்.

**குறிப்புரை :**

இது தேசிங்குராஜன் கதை என்னும் நூலில் இருந்து எடுக்கப்பட்டது. டில்லி பாதுஷாவிடம் ஒரு குதிரை இருந்தது. அதனை அடக்க

எவராலும் இயலவில்லை. அதை யடக்குவதாகச் சொல்லிப் பலர் முயன்றும் இயலாமையால் சிறைப்பட்டனர். அப்படிச் சிறைப்பட்டவருள் தேசிங்கின் தந்தையாரும் ஒருவர். அவரை மீட்கவே தேசிங்கு சென்று குதிரையை அடக்கி வெற்றி கொண்டான்.

**அருஞ்சொற்கள் :**

அண்டம்-உலகம், சீனி-சேணம், புரவி-குதிரை, லகான்-கடிவாள வார், சிமிட்டாக் கொடுத்தான்-கடிவாள வாரை விரைவாக உதறினன்.

**கேள்விகள் :**

1. தேசிங்கு ஏன் டில்லிக்குச் சென்றான் ?
2. பாதுஷா தேசிங்கைக் கேட்ட கேள்விகள் எவை? அவற்றிற்கு அவன் கொடுத்த பதில் யாது ?
3. குதிரை தேசிங்கைக் கண்டதும் என்ன செய்தது ?
4. குதிரை எப்போது நின்றது ?
5. இப்பாட்டில் வழங்கப்பட்ட தமிழ் அல்லாத மொழிகள் எவை ? உருமாறிய மொழிகள் எவை ?

**பயிற்சி :**

1. தேசிங்குமன்னன் குதிரையை அடக்கியதைக் கதை வடிவில் சுருக்கி வரைக.
2. தேசிங்குராஜன் கதை போன்ற வேறு இரு நூற்களைக் குறிப்பிடுக.

## 2. குரங்கு கூட்டைப் பிய்த்தது

### அற்பருக்குப் புத்தி சொன்னல் அல்லலே விளையும்.

‘பாடுறு மூட னுக்குப் பற்பல போதித் தாலும்
வீடுடை யவனை வீட்டை இழந்திடச் செய்வான்’ என்று
நேடுறு சன்மன் சொல்வான் : ‘நெடியதோர் பழும ரத்தில்
கூடுகொண் டனஇ ரண்டு தூக்கணம் குருவி தாமே’ 1

குளிரினல் நடுங்கி வானக் கொடுமழை யால்ந னைந்து,
நளிர்சுரத் தோடு தேகம் நடுங்கியே பற்கள் கிட்டி

வளமறு குரங்கொன் றங்கு வந்தது, குருவி பார்த்தே,
இளகிய மனத்தினுலே இன்சொலால் ஒன்று சொல்லும் : 2

'கைகள் கால்இருந்தும் இந்தக் கன்மத்தை அனுப விக்கும்
செய்தி என்?' என்ன; 'ஊசி மூஞ்சிகொள் சிறிய மூடா!
வைதுநீ புத்தி சொல்ல வல்லையோ?' எனக்கோ பித்து
நெய்திடும் அதன்தன் கூட்டை நெடுங்கையால் பிய்த்த 3
[தன்றே.

—வீரமார்த்தாண்ட தேவர்.

**அருஞ்சொற்கள் :**

1. பாடு+உறு=துன்பப்படும், நேடுறு-நல்லெண்ணம் பொருந்திய, சன்மன்-இவன் இப்பஞ்சதந்திரக் கதைகளை அரசகுமாரர்களுக்குச் சொன்னவன், பழுமரம்-ஆலமரம், நளிர்-நடுக்கம், 2. கன்மம்-துன்பம், வைது-திட்டி.

**கேள்விகள் :**

1. சன்மன் யாவன் ?
2. குரங்கு மழையால் எங்ஙனம் வாடியது ?
3. தூக்கணாங் குருவிகள் குரங்கை என்ன கேட்டன ?
4. குரங்கு செய்த குறும்பு யாது ?

**பயிற்சி :**

1. இக்கதையினைச் சுருக்கி எழுது.
2. இக்கதையின் நீதியைக் குறிப்பிடு.

# IV. வருணனைப் பாக்கள்

## 1. நிலாத் தோற்றம்

அம்புயம் வாடித் தளர்ந்ததம்மா—அயல்
ஆம்பலும் கண்டு களிக்குதம்மா,
இம்பருலகின் இயல்பி தம்மா—மதிக்
கின்னுர் இனியரும் உண்டோ அம்மா ? 1

பாலாழி மீது படர்ந்த வெண்ணெய்—ஒரு
பந்தா யுருண்டு திரண்ட துவோ ?
மேலாய் உலகில் ஒளி செயவே—ஈசன்
விண்ணகம் இட்ட விளக் கிதுவோ ? 2

—தேசிக விநாயகம் பிள்ளை.

## 2. மழைப் பொழிவின் பயன்

சோழனது சீமையிலே சொலித்தனவே மின்னல்கள் ;
கடலிரச்சல் போலவே குமுறினவே மேகங்கள்;
குமுறியவம் மேகமெலாம் குடம் கொண்டு வார்த்தாற் [போல்,
நல்லமழை பெய்ததனால் நாடும் செழித்ததுவே;
பூமி குளிர்ந்ததுவே ; பொய்கை நிரம்பியதே ;
ஏரி நிரம்பி எதிர்த்தனவே வெள்ளத்தால்,
கழனி நிரம்பிக் கால்வாய்கள் தாம்நிரம்பி,
உலர்ந்த மரங்களெல்லாம் உயிருண்டாய் பிழைத்தனவே ;
செடிகள் கொடிகளெல்லாம் செழித்துத் தழைத்தனவே ;
செந்நெல் விளைந்தனவே; தேசம் செழித்தனவே ;
பயிர்கள் விளைந்தனவே; பலனைக் கொடுத்தனவே.

—அல்லியரசாணிமாலை.

### குறிப்புரை :

1. **தேசிக விநாயகம் பிள்ளை** : இவர் நாகர் கோயில் என்னும் ஊரினர். சிவதாணுப் பிள்ளை என்பவரின் குமாரர். இவர் சைவ வேளாள மரபினர். இவர் ஆசிய ஜோதி, மலரும் மாலையும் என்னும் நூல்களைப் பாடியவர்.

### அருஞ்சொற்கள் :

அம்புயம்-தாமரை, ஆம்பல்-அல்லிமலர். இம்பருலகில்-இவ்வுலகில், மதி-சந்திரன், ஆழி-கடல், விண்ணகம்-ஆகாயத்தில்.

2. **அல்லியரசாணி மாலை** : இதன் நூலாசிரியர் யார் என்பது திட்டமாகக் கூறுதற்கில்லை. சிலர் புகழேந்திப் புலவர் பாடியது என்கின்றனர்.

**கேள்விகள் :**

1. சந்திரன் தோன்றினால் எம்மலர் வாடும் ? எம்மலர் மலரும் ?
2. கடலில் சந்திரன் தோன்றுவது எப்படி இருக்கிறது ?
3. சந்திரனைக் கண்டபோது நமக்கு என்ன எண்ணம் தோன்றுகிறது ?

**பயிற்சி :**

1. மதியின் தோற்றத்தைப் பற்றி ஒரு கட்டுரை எழுது.
2. மழை பெய்தால் நிகழும் செயல்களைக் குறிப்பிடு.

# V. தனிப்பாடல்கள்

## புலவர் பெருமிதம்

மன்னவனும் நீயோ ? வானுலகும் உன்னுலகோ ?
உன்னையறிந் தோதமிழை ஓதினேன் ? — என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ ? உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு ? 1

—கம்பர்.

## காளமேகம் கவிராசர்களை ஏசல்

வாலெங்கே ? நீண்ட வயிறெங்கே? ஈரிரண்டு
காலெங்கே ? உட்குழிந்த கண்ணெங்கே ?—சாலப்
புவிராசர் போற்றும் புலவீர்காள்! நீவிர்
கவிராசர் என்றிருந்தக் கால். 2

—காளமேகம்.

## சீதக்காதியின் சிறப்பு

ஈயாத புல்லர் இருந்தென்ன ? போயென்ன ? எட்டிமரம்
காயா திருந்தென்ன? காய்த்துப் பலனென்ன? கைவிரித்துப்

போயா சகம்என் றுரைப்போர்க்குச் செம்பொன் பிடிப்
[பிடியாய்
ஓயாமல் ஈபவன் மால்சீதக் காதி ஒருவனுமே. 3

—**படிக்காசுப் புலவர்.**

**குறிப்புரை :**

1. **கம்பர்** ஒரு பெரும் புலவர். தமிழில் இராமாயணம் பாடியவர். கி. பி. 12-ஆம் நூற்றூண்டில் வாழ்ந்தவர்.

2. **காளமேகப் புலவர்** : நகைச்சுவை தோன்ற பாடவல்லவர். இவர் திருமலைநாயகர் காலத்துப் புலவர். ஏறக்குறைய 300 ஆண்டுகட்கு முன்னிருந்தவர். இவர் ஆரம்பத்தில் கோயில் பரிச்சாரகராக இருந்து, பின் திருவானைக்காத் தேவியூன அகிலாண்ட நாயகியார் அருளால் பாடும் பேறு பெற்றவர். இவர் மதுரகவியின் மாணவர்கள் செருக்கை அடக்க இப்பாடலைப் பாடினர்.

3. **படிக்காசுப் புலவர்** : இவர் தென்களந்தை என்னும் ஊரில் செங்குந்தர் மரபில் கி. பி. 17-ஆம் நூற்றூண்டில் பிறந்தவர். இவர் எழுதிய நூல் தொண்டைமண்டல சதகம், தண்டலையார் சதகம் முதலியன. இவர் பாடிய பாடல் பல தனிப்பாடல் திரட்டிலும் உண்டு. இவர் சைவ சமயத்தவர்.

**குறிப்புரை :**

1. சோழன் கம்பரைத் தன் நாட்டை விட்டு நீங்கிச் செல்லவேண்டும் என்று கூறியபோது பாடிய பாட்டு இது. வானுலகு-தேவலோகம்.

2. காளமேகப் புலவர் முன் சில புலவர்கள் வர, அவர்களைப் பார்த்து, "நீங்கள் யார்?" என்று காளமேகம் கேட்க, அவர்கள் கவிராயர்கள் என்று கூறினர். காளமேகம் கவிராயர் என்பதைக் குரங்கரசர்கள் என்று வேண்டுமென்றே பொருள் கொண்டு, இப்பாடலால் அவர்களை ஏளனம் பண்ணினர். சால-மிகவும், ராயர்-அரசர்.

3. சீதக்காதி தமிழ் முஸ்லீம் குலத்து வள்ளல். அவர் இறந்ததைக் கண்டு சகியாது புலவர் இதனைப் பாடினர்.

மால்-பெருமையுடைய, புல்லர்-அற்பர், ஈயாத-கொடுக்காத, யாசகம்-பிச்சை.

## கேள்விகள் :

1. தனிப்பாடல் என்பது என்ன ?
2. கம்பர் புலவர்க்குச் சென்ற இடம் எல்லாம் சிறப்பு என்பதை எப்படி விளக்கினர் ?
3. காளமேகப் புலவரைக் காணவந்தவர்கள் கவிராயர் அல்லர் என்பதைக் காளமேகம் எங்ஙனம் கூறி நகைத்தனர் ?
4. சீதக்காதி யார் ? அவர் தன்மை யாது ?

## பயிற்சி :

1. "வாலெங்கே" என்று பாட்டில் அமைந்துள்ள நயத்தைக் குறிபபிடு.
2. சீதக்காதியின் முழுப்பெயரைக் கேட்டறிந்து எழுதி, அவர் கொடையின் சிறப்பையும் குறிப்பிடு.
3. 'குரங்கேற்றுக் கொள்ளாத கொம்புண்டோ' என்னும் தொடரை நன்கு விளக்குக.



# குமுத வாசகம்

## இரண்டாம் படிவம்

(பொதுப் பகுதி)




ஆசிரியர் :
**வித்துவான், பாலூர் கண்ணப்ப முதலியார்**
தமிழ் ஆசிரியர்,
நியூ காலேஜ், இராயப்பேட்டை, சென்னை

வெளியிட்டவர் :
**டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு ஸன்ஸ்**
சென்னை

உரிமை பதிவு] 1953 [விலை ரூ. 0–14–0

# முன்னுரை

---

'குமுதவாசகம்' என்னும் பெயருடன் வெளி வந்துள்ள இந்நூல், சென்னை அரசியலார் புதிதாக வெளியிட்டுள்ள 1951 பாடத் திட்டத்தின் படி எழுதப்பட்டுள்ளது. இது எல்லா மாணவர்களும் படித்தற்குரிய பொதுப் பகுதியை மட்டும் தன்னகத்தே கொண்டு திகழ்கிறது.

இலக்கணப் பாடத்தைத் தனித்துப் பயில்கையினும், உரைநடைப் பாடத்தோடு தொடர்ந்து பயிலின், அப்பாடத்தில் உணர்ச்சியும் ஊக்கமும் தோன்றும் எனக்கருதி, ஒவ்வோர் உரைநடைப் பகுதியின் கீழும் இலக்கணப் பாடம் எழுதப்பட்டிருப்பது, மாணவர் தம் தமிழ் அறிவைச் செம்மையாகப் பெறப் பெருந்துணையாகும் என்பதில் ஐயமில்லை.

அறிவு வளர்ச்சிக்குரிய பலதிறப்பாடங்களும், ஒவ்வொருபாடத்தின் முடிவிலும் வினக்களும், பயிற்சியும், வேண்டும் அளவுக்கு அருஞ்சொற் பொருளும் இந்நூல் தன்கண் கொண்டிருத்தலால் 'பொன்மலர் நாற்றம் உற்றாற்போல மாணவர் ஆயாசம் இன்றிப் பாடங்களை நன்கு உணர்ந்து, தம் மனத்தில் பதியவைத்துக்கொள்வர் என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

இந்நூலில் காணும் பாடல்கள் சிலவற்றை இதில் இணைத்துக் கொள்ளத் தம் இசைவைத் தெரிவித்த அவற்றின் உரிமையாளர்கட்கு என் நன்றியுள்ள வணக்கம் உரித்தாகுக.

இந்நூலைத் தமிழ் உலகம் ஏற்று, என்னை ஆதரித்து, ஊக்கம் அளிக்க வேண்டுகிறேன்.

'அம்மையப்பர் அகம்'
77, அவதானம் பாப்பையர் தெரு,
சூளை, சென்னை-7.

பா. து. க.

# உள்ளுறை

## உரைநடைப்பகுதி



## செய்யுட்பகுதி



கொடிபறக்குது கொடிபறக்குது

கொடிபறக்குது பாரடா!

கோணலற்ற கோலில்எங்கள்

கொடிபறக்குது பாரடா!

—நாமக்கல் கவிஞர்



# குமுத வாசகம்

## 1. தேசீயக் கொடி

1. அரசர்களுக்குரிய அங்கம் பலவற்றுள் தசாங்கம் என்பன பத்து உறுப்புக்கள் என்று பொருள்படும். அவை பேர், நாடு, நகர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி என்பவை. ஏனைய உறுப்புக்களைப் பற்றி நாம் இங்கு இப்பொழுது சிந்திக்காமல், கொடியைப் பற்றி மட்டும் சிந்திப்போமாக:

2. தேவர்கட்கும் சிறப்புடைய பெருமக்களுக்கும் தனித்தனி கொடிகள் உண்டு. சிவபெருமானுக்கு இடபக் கொடியும், திருமாலுக்குக் கருடக்கொடியும், பிரமனுக்கு அன்னக் கொடியும், இந்திரனுக்கு இடியும் மின்னலும் கலந்த கொடியும், தரும ராசருக்கு முரசக் கொடியும், அர்ச்சுனனுக்கு அனுமக் கொடியும், துரியோதனனுக்குப் பாம்புக் கொடியும் உரியன என நூல்கள் கூறுகின்றன. சேர சோழ பாண்டி நாடுகளில் தனியரசு செய்து வந்த முடியுடை மூவேந்தர்களான சேர சோழ பாண்டியர்களுக்கும் தனித்தனி கொடிகள் உண்டு. சேரருடைய கொடியில் வில் எழுதப் பட்டிருக்கும். சோழருக்குரிய கொடியில் புலி பொறிக்கப் பட்டிருக்கும். பாண்டியருடைய பதாகையில் மீன் தீட்டப் பட்டிருக்கும்.

3. நாம் இப்பொழுது சுதந்தரம் பெற்றுச் சுதந்தர நாட்டில் வாழ்கின்றோம் அல்லவா ? நமக்கும் ஒரு கொடி ஏற்பட்டுள்ளது. அதுவே மூவர்ணக் கொடியாகும். அம்மூந்

நிறங்கள் காவி, வெண்மை, பசுமை என்பன. இவை முறையாக அமைந்திருக்கும். அதாவது முதலில் காவி நிறமும், இரண்டாவது வெண்மை நிறமும், மூன்ருவது பசுமை நிறமும் பொருந்தியிருக்கும். முந்நிறங்களுடன் மட்டும் நம் கொடி திகழவில்லை. நம் நாட்டுக் கொடியின் வெண்மை நிறத்தில் ஒரு சக்கரமும் விளங்குகிறது. அச்சக்கரம் அசோகருடைய சக்கரமாகும். இம்முறையில் அமைந்த கொடியே நம் நாட்டுக் கொடி; அதாவது, சுதந்தர நாட்டுக் கொடி. இதுவே 1947-ஆம் ஆண்டு, ஆகஷ்டு மாதம், 15-ஆம் நாளில், இந்தியாவெங்கும் பறக்கத் தொடங்கியது. இக்கொடியே ஆட்சியாளர்களின் அலுவல் அகங்களிலும், கோட்டை களிலும், வியாபார நிலையங்களிலும், தொழிற்சாலைகளிலும், கல்லூரிகளிலும், பள்ளிக்கூடங்களிலும், மாடமாளிகை களிலும், குடிசைகளிலும் பறந்து வானுலக வாசிகளையும் 'எங்கள் சுதந்தர இந்தியாவுக்கு வருக! வருக!' என்று அழைப்பது போலக் காற்ருல் அசைந்து எவர்க்கும் இன்பம் ஊட்டி வருகின்றது. இனி இதன் வரலாற்றை அறிவோமாக:

4. இக்கொடி 1947-ஆம் ஆண்டு, ஆகஷ்டு மாதம், 15-ஆம் நாளிலேதான் ஏற்பட்டது என்று எண்ணிவிடா தீர்கள். இது 1906-ஆம் ஆண்டிலும் வேறு முந்நிறங்களுடன் விளங்கியது. அந்நிறங்கள் சிவப்பு, மஞ்சள், பச்சை என்பன. அந்நிறங்களில் சிவப்புப் பட்டையில் எட்டு நட்சத்திரங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. மஞ்சட்பட்டையில் 'வந்தே மாதரம்' என்னும் தேசீயமந்திரம் நாகரி எழுத்தில் எழுதப்பட்டிருந்தது. பச்சைப்பட்டையில், இடப்பக்கம் சூரியனும், வலப்பக்கம் ஒரு விண்மீன் தன்மேலமைத்த பிறையும் திகழ்ந்தன.

5. இவ்வாறு 1906-ஆம் ஆண்டு அமைந்த கொடி, 1921-ஆம் ஆண்டு சிறிது மாறுதல் அடைந்தது; மேலே

வெண்ணிறம் பெற்றது. இடையே சிவப்பு நிறம் அமைந்தது. கீழே பச்சை நிறம் பொருந்தப் பெற்றது. இடையில், அதாவது சிவப்பு நிறத்தில், நூல் நூற்கும் கருவியாகிய இராட்டை உருவம் பொறிக்கப்பட்டது. இம்முறையில் இக் கொடியை அமைத்தவர் உலகம் புகழும் உத்தமராகிய மகாத்துமா காந்தியடிகள் ஆவார். இங்ஙனம் அமைந்த கொடியும் காங்கிரஸ் மகாசபையாரால் 1931-ஆம் ஆண்டு மேலும் சிறிது மாறுதலைப் பெற்றது; அதாவது, மேலே காவி நிறமும், இடையில் வெண்மை நிறமும், ஈற்றில் பச்சை நிறமும் அமைந்து விளங்கியது. ஆனால், இராட்டை உருவம் மட்டும் இடையில் வெண்மை நிறத்தில் அமைந்து இருந்தது. இவ்வாறு அமைந்த கொடியேதான் இப்பொழுது இராட்டை நீக்கப் பெற்று அசோகர் சக்கரத்துடன் விளங்கி வருகிறது.

6. இனி, நம் சுதந்தரக் கொடியில் உள்ள மூன்று நிறங்களும் எந்நோக்கத்துடன் அமைந்திருக்கின்றன என்பதையும் உணர்வோம்: காவி நிறம் தைரியத்திற்கும் தியாகத்திற்கும் அறிகுறி என்றும், வெண்மை நிறம் உண்மைக்கும் தூய்மைக்கும் அடையாளம் என்றும், பசுமை நிறம் அன்புக்கும் அருளுக்கும் சின்னமென்றும், அசோக சக்கரம் அறத்திற்கு எடுத்துக்காட்டு என்றும் விளக்கம் கூறுகிறார்கள். இவ்விளக்கம் மிகமிகப் பொருத்தமானதே.

7. இந்தத் தேசீயக் கொடிக்கு நாம் என்றும் வணக்கம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். இதனிடத்தில் நமக்கு ஒரு பத்தி தோன்ற வேண்டும். தினமும் நாம் இக்கொடிக்கு வணக்கம் செலுத்த இயலாவிட்டாலும், ஆண்டுக்கொரு முறை ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதியில் வரும் சுதந்தர தினக் கொண்டாட்டத்தின் போதாகிலும் தவறாமலும், மறவாமலும் கொடி வணக்கம் செய்ய வேண்டும். இதனை ஒவ்

வொருவரும் தமது கடமையாகக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் அன்று பெரிய பெரிய தேசீயத் தலைவர் தாம்தாம் இருக்கும் ஊர்களில் ஒன்று கூடி இக்கொடியினைப் பறக்கவிட்டு வணக்கம் செலுத்தி வருகின்றனர்.

8. கொடிக்கு மரியாதை காட்ட வேண்டும் என்பதற்காக இக்கொடியை நம் விருப்பப்படி பயன்படுத்தக் கூடாது; தேசீயவாரம், சுதந்தர நாள், காந்தியடிகள் பிறந்த நாள், குடியாட்சி பெற்ற தினம் போன்ற குறிப்பிட்ட நாட்களில் மட்டுமே பறக்க விடவேண்டும்; விளம்பரச்சின்னமாகப் பயன்படுத்திக்கொள்ளக் கூடாது. கொடியைப் பறக்க விடுகையில் எப்போதும், சிவப்பு நிறப்பட்டை மேற்பகுதியில் திகழப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

**வாழ்க நம் தேசீயக் கொடி!**

**அருஞ்சொற்பொருள்:**

அங்கம்-உறுப்பு, பதாகை-கொடி, ஊர்தி-வாகனம், தார்-மாலை, தீட்டப்பட்டு-எழுதப்பட்டு, அலுவல் அகம்-தொழில் நிகழும் இடர்கள், விண்மீன்-நட்சத்திரம், மதி-சந்திரன், அறிகுறி-அடையாளம், ஆற்றல்-வல்லமை, தூய்மை-சுத்தம், அறம்-தருமம், சின்னம் - அடையாளம்,

**கேள்விகள்:**

1. அரசருக்குரிய தசாங்கங்கள் எவை?
2. மும்மூர்த்திகள், மூவேந்தர் என்னும் இவர்களுக்குரிய கொடிகள் எவை?
3. பாம்பு, முரசு, அனுமன் உருவங்கள் யார் யாருக்குக் கொடியில் சின்னமாய் விளங்கின?
4. நம் சுதந்தரக்கொடியில் அமைந்துள்ள முந்நிறங்கள் எவை?
5. அந்நிறங்கள் எவ்வெவற்றைக் குறிப்பனவாகக் கூறுகின்றனர்?

6. 1906, 1921, 1931, 1947 ஆகிய இந்த ஆண்டுகளில் நம் தேசீயக்கொடி எவ்வெவ்வாறு அமைந்தது ?
7. எவ்வெக்காலங்களில் நம் தேசீயக் கொடியைப் பறக்கவிட வேண்டும் ?

**பயிற்சி :**

1. மும்மூர்த்திகள், மூவேந்தர்கள் பெயர்களைக் குறிப்பிடு.
2. 1921, 1947 ஆகிய ஆண்டுகளில் மூந்நிறக்கொடி அடைந்த வேறுபாட்டைக் குறிப்பிடு.

**இலக்கணம் :**

## சுட்டும், வினவும்

**அவன், எப்பையன்**—இவ்விரண்டு சொற்களின் முன்னுள்ள எழுத்துக்களாகிய அ, எ என்பன, எவற்றைக் காட்டுகின்றன? சுட்டுப் பொருளையும் வினப்பொருளையும் காட்டுகின்றன அல்லவா ? இவ்வாறு சுட்டுப் பொருளைக்காட்டும் எழுத்துக்கள், அ, இ என்பன. 'உ' என்னும் எழுத்தும் செய்யுளில் சுட்டெழுத்தாக வரும். வினப்பொருளைக் காட்டும் எழுத்துக்கள், ஆ, எ, ஏ, ஓ, யா என்பன.

அவன்—அ
இவன்—இ } சுட்டு

கந்தனா — ஆ
எவன் — எ
ஏது — ஏ
முருகனோ — ஓ
யார் — யா } வினா

இச்சுட்டு வின எழுத்துக்கள் சொல்லுக்கு உள்ளேயே இருந்தால் அகச்சுட்டு, அகவின என்றும், சொல்லுக்கு வெளியே இருந்தால். புறச்சுட்டு, புறவின என்றும் கூறப்படும்.

அவன்
இவன் } அகச் சுட்டு

அப்பையன்
இப்பெட்டி } புறச் சுட்டு

| | | | |
|---|---|---|---|
| எவன்<br>ஏது<br>யார் | அக வினா | எப்பையன்<br>கந்தனே<br>வேலனா<br>இராமனோ<br>யாங்ஙனம் | புற வினா |

பயிற்சி :

1. பத்துச் சுட்டுப் பெயர்கள், வினாப் பெயர்களை எடுத்து எழுதி அவை இன்ன சுட்டு, இன்ன வினா எனக் குறிப்பிடு.
2. அவை, அல்லவா, அதுவே, அம்முந்நிறங்கள், இவை, இம் முறை, இவ்வாறு, இவ்விளக்கம்—இவ்வுதாரணங்களில் எவை சுட்டு வினா எழுத்துக்கள் என்பதைக் குறிப்பிடு.

# 2. அறிவுடைய அரசர்

1. மக்களுக்கு இரண்டு அறிவு உண்டு: ஒன்று, இயற்கை அறிவு; மற்றொன்று, செயற்கை அறிவு. செயற்கை அறிவு ஏட்டுக் கல்வி மூலமாக எய்தப் பெறுவது. இயற்கை அறிவு பொருள்களைக் கூர்ந்து கவனிப்பதாலும், உலக அனுபவம் மிகுந்து வருவதாலும் ஏற்படுவதாகும். இரண்டும் மக்களுக்கு வேண்டற்பாலன. இவ்விரண்டும் பெற்றவர்களையே உலகம் புகழும். அப்படி இவ்விரண்டையும் பெற்றவர் நம் நாட்டிலும் உளர்; பிற நாட்டிலும் இருக்கின்றனர். பிற நாட்டில் வாழ்ந்த ஒரு பேரரசருடைய நுண்ணறிவுத்திறனை இங்கு அறிந்து இன்புறுவோம்:

2. உலகம் ஐந்து பெருங்கண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை ஆசியா, அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா, ஆஸ்திரேலியா என்பன. ஆசியாக் கண்டத்திற்கு மேற்பாகத்தில் பாலஸ்தீனம் என்னும் ஒரு சிறு நாடு உள்ளது. இந்நாடு ஒரு சிறந்த புண்ணிய நாடு. ஏனெனில், இங்குத்தான் ஏசு பெருமான் அவதரித்தார். பாலஸ்தீனம்

புண்ணிய நாடு மட்டும் அன்று; நாகரிகத்திலும், பொருள் நிலையிலும் தலை சிறந்து விளங்கும் நாடுமாகும்.

3. இத்தகைய சீரும் சிறப்பும் படைத்த நாட்டைச் **சாலமன்** என்னும் பெயரிய மன்னர் ஒருவர் ஆண்டு வந்தார். சாலமன் பிறவியிலேயே நுண்ணறிவு பெற்றவர்; பின்பு பல நூல்களைப் படித்துக் கல்வி அறிவையும் பெருக்கிக்கொண்டவர். இந்த இரண்டும் இருந்தமையால், இவர் சிறந்த ஞானியாராய் விளங்கினர். ஞானியாரால் ஆளப்படும் அரசைப் பற்றி ஏதேனும் குறை கூற முடியுமா? இவரது அரசாட்சி மிகவும் சிறப்புடையதாய் இருந்தது. இவரிடம் வீரமும் இருந்தது; ஈரமும் இருந்தது. இவர் வீரம் காரணமாகப் பல அரசர்களை வென்று, அவ்வரசர்களின் நாடுகளைத் தம் நாட்டுடன் இணைத்துக்கொண்டு, பாலஸ்தீனம் பெருநாடாக விளங்கும் வண்ணம் அரசு புரிந்து வந்தார். பாலஸ்தீனத்திற்குத் தலை நகராய் விளங்கிய ஜெருஸலத்தில் அரண்மனை வகுத்துத் திறமையுடன் நீதி செலுத்தி வந்தார். இவர் நீதி ஓர வஞ்சனையின்றித் துலாக்கோல் போன்று இருந்தது. இவர் தம் அரசில் பொறுக்க வேண்டியவர்களைப் பொறுத்தும், ஒறுக்க வேண்டியவர்களை ஒறுத்தும் செங்கோல் செலுத்தி வந்தார்; தம் நல்லரசு தம்மோடே போய்விடாமல், தம்க்குப் பின் வருபவர்களும் இதன்படி நடக்க வேண்டும் என்பதற்காகவும், மக்களும் ஒழுக்கம் தவருது நன்முறையில் நடக்க வேண்டும் என்பதற்காகவும், பரந்த நோக்கம் கொண்டு **நீதி மொழிகள்** என்னும் நூலையும் எழுதி உதவினர்.

4. வீரத்திற்கு இந்தப் பணிகளைச் செய்தவர் ஈரத்திற்கும் சிறந்த தொண்டு புரிய வேண்டாவா? இவர் தம் நாட்டுத் தலைநகராகிய ஜெருஸலத்தில் ஒரு பெரிய ஆலயத் திருப்பணி

செய்து வைத்தார். 'மக்கள் கடவுள் அன்புடையவராய் இருத்தல் வேண்டும்,' என்பது இவருடைய அவா. அதனுல், இவர் ஆண்டவனே அன்புடன் பாடி ஆராதிக்க உத்தம கீதங்கள் என்னும் நூலையும் இயற்றியருளினுர். இப்படியல்லவோ மன்னர்கள் இருக்கவேண்டும்? மன்னர் பொருட்செல்வம் மட்டும் பெற்றிருந்து யாது பயன்? அவரிடத்தில் கல்விச் செல்வமும் இருத்தல் வேண்டும்; அருட்செல்வமும் அமைதல் வேண்டும். 'நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே' என்று நம் தமிழ் நூல் கூறுவது எவ்வளவு பொருத்தம் பாருங்கள்! இவ்வாறு சாலமன் ஞானியார் நாட்டை ஆண்டு வந்ததால், இவரது புகழ் பாரெங்கும் பரவியது.

5. இங்ஙனம் பரவிய புகழ், ஷீபா நாட்டுப் பேரரசியார் செவிக்கும் எட்டியது. அவ்வம்மையார்க்கு இப்பெரு மன்னரைத் தரிசிக்க வேண்டும் என்னும் அவா எழுந்தது. கற்ருரைக் கற்ருரேயன்ருே காண விரும்புவர்? அவ்வம்மையார் சாலமன் மன்னரை நேரில் கண்டு, அளவளாவி விட்டு மட்டும் வர எண்ணம் கொண்டிலர். 'அவர் பேர் அறிவு படைத்தவர்; நுண்ணறிவுத் திறன் உடையவர் என்று எல்லாரும் புகழ்ந்து கூறுகின்றனரே! அது எவ்வளவு தூரம் உண்மையாய் இருக்கும்!' என்று சோதித்தறியவும் உறுதி கொண்டார்.

6. ஷீபா மகாராணியார் ஒரு நல்ல நாளில் ஜெருஸலம் நோக்கிப் புறப்பட்டார். ஒரு நாட்டு மகாராணியார் ஆதலின், அரசமரியாதைகளுடன் அவ்வம்மையார் புறப்பட்டார். அமைச்சரும் தானைத்தலைவரும் உடன் வந்தனர். பொன்னும் மணியும் ஒட்டகங்களில் ஏற்றி வந்தனர்; ஜெருஸலத்தை அடைந்தனர். சாலமன் மன்னரும் ஷீபா மாநாட்டுப்பேரரசி

யாரைத் தக்க மரியாதையுடன் வரவேற்றுத் தனியிடம் தந்து இருக்குமாறு வேண்டிக்கொண்டனர். அவ்வம்மையாரும் அவ்வாறே இருந்து வந்தனர்.

7. ஒரு நாள் ஷீபா நாட்டு இராணியார் தம் கைகளில் இரண்டு மலர் மாலைகளை எடுத்துக்கொண்டனர். அவ்விரண்ட



னுள் ஒன்று, இயற்கையான புத்தம்புதிய ரோஜா மலர் களால் ஆன மாலை; மற்றொன்று, ஒரு சிறிதும் வேறுபாடு தெரிந்துகொள்ள முடியாத நிலையில் இருந்த செயற்கை ரோஜா மலரால் ஆன மாலை. அவ்விரு மாலைகளின் அளவும் ஒன்றே; நிறமும் ஒன்றே; மலர்களின் வடிவமும் ஒன்றே.

அம்முறையில் அம்மாலைகள் அமைந்திருந்தன. பார்வைக்கு இரண்டும் இயற்கை மாலைகளாகவே காணப்பட்டன. தொலைவில் இருந்து பார்ப்பவர் இரண்டும் இயற்கை மாலை என்றே தடையின்றி இயம்பிவிடுவர். ஏன்? அவற்றை அருகில் கண்டும் தம் கையில் வாங்கி மோந்து பார்க்கும் வரை இயற்கை மாலை என்றே கூசாது கூறிவிடுவர்.

8. அந்த மாலைகளைக் கையில் கொண்ட ஷீபா இராணியார் சாலமன் மன்னரைக் கண்டனர்; கண்டு, "மன்னரே, நான் மாலைகளைக் கையில் வைத்திருப்பதை நீர் பார்க்கின்றீர். ஆனால், இவற்றுள் ஒன்று இயற்கை மலர்களால் ஆனது; ஏனையது செயற்கை மலர்களால் செய்யப்பட்டது. ஆகவே, இவ்விரண்டு மாலைகளுள் எது இயற்கை மாலை? எது செயற்கை மாலை? செப்பும்," என்று அன்புடன் வினவினர்.

9. சாலமன் மாலைகளை உற்று உற்று நோக்கினர். உண்மையில் இவருக்கு இரண்டும் இயற்கை மாலைகளாகவே காணப்பட்டன. 'எதை இயற்கை என்பது? எதைச் செயற்கை என்பது?' என்று சிறிது சிந்திக்க வேண்டியவராய் விட்டார்.

10. அரண்மனைக்கு முன்னால் தோட்டம் இருந்தது. அத்தோட்டம் மரஞ்செடிகள் நிறைந்து நல்ல மலர்களைப் பெற்று வண்டுகளுக்குப் பெருவிருந்து அளித்துக்கொண்டிருந்தது. ஆகவே, அரசர் பணியாட்களை ஏவித் தோட்டத்திற்கு நேரேயுள்ள சன்னற் கதவுகளைத் திறக்குமாறு கட்டளையிட்டார். வேலையாட்களும் அவ்வாறே செய்யத் தோட்டத்திலிருந்த சுரும்பினங்கள் ஷீபா இராணியார் பிடித்திருந்த இயற்கை மலர்மாலையை மொய்த்துக்கொண்டு ஆரவாரம் செய்யத் தொடங்கின. இதைக் கண்ட சாலமன் மன்னர் கலுக்கென நகைத்து, "அம்மையாரே, நீங்களே இப்பொழுது

எது இயற்கை மலர்மாலை, எது செயற்கை மலர் மாலை என அறிந்துகொள்ளலாம் அன்றோ ?" என்று கூறி அச்சபையில் இருந்தவர் நன்கு அறிந்துகொள்ளும்படி தாமே வண்டுகள் மொய்த்த மாலையே இயற்கை மலர் மாலை என்று கூறினர்.

11. ஷீபா இராணியார் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. "உண்மையில் சாலமன் மன்னர் பெரிய ஞானியாரேயாவர்; இயற்கையறிவு வாய்ந்த ஏந்தலேயாவர்; நுண்ணறிவு படைத்த அண்ணலேயாவர்," என்று வாயார மனமாரப் புகழ்ந்தார். அங்கிருந்தவரும், தம்மரசரை மேலும் கொண்டாடிப் பாராட்டத் தொடங்கினர். ஷீபா இராணியார் சில நாள் ஜெருஸலத்தில் இருந்துவிட்டுத் தம் ஊர் போய்ச் சேர்ந்தார். மன்னர் பிரானும் தம் நுண்ணறிவுடன், தம்மைச் **சாலமன் ஞானியார்** என்று பாரெங்கும் பகர, நல்லரசு செய்து வந்தார்.

### அருஞ்சொற்பொருள் :

எய்தப் பெறுவது - அடையப் பெறுவது, ஈரம் - அன்பு, துலாக் கோல் - தராசுக்கோல், ஒறுக்க - தண்டிக்க, திருப்பணி-தொண்டு, அவா-ஆசை, நன்னடை நல்கல்-நல்ல ஒழுக்கங்களைக் கற்பித்தல், பார்-பூமி, தானைத் தலைவன்-சேனைத் தலைவன், இயம்பி-சொல்லி, சுரும்பினங்கள் - வண்டுக் கூட்டங்கள், அண்ணல்-பெருமையிற் சிறந்தவன்.

### கேள்விகள் :

1. பாலஸ்தீனம் எங்குள்ளது ? அதன் சிறப்பு யாது ?
2. சாலமன் எம்முறையில் அரசு செய்து வந்தார் ?
3. அவர் எழுதிய நூல்கள் யாவை ?
4. ஷீபா மகாராணியார் ஏன் சாலமனைக் காண விரும்பினர் ?
5. சாலமன் இயற்கை மாலையை எப்படி அறிவித்தார் ?

**பயிற்சி :**

1. ஐந்து கண்டங்களைக் குறிப்பிடு.
2. சாலமன் அரசரின் வீரத்தையும் ஈரத்தையும் குறித்து ஒரு கட்டுரை எழுது.
3. ஷீபா இராணியார் ஜெருசலத்திற்குப் புறப்பட்ட நிலையை விளக்கி எழுது.

**இலக்கணம் :**

## குற்றியலுகரம்

கு, சு, டு, து, பு, று என்னும் எழுத்துக்கள் ஒரு சொல்லுக்கு ஈற்றில் நகு, பசு எனத் தனிக் குறிலுக்குப்பின் வாராமல், பல எழுத்துக்களின் பின்வரின் அவற்றில் உள்ள உகரம் 'குற்றியலுகரம்' எனப்படும். (உ-ம்) பாக்கு, மச்சு, பட்டு, மத்து, மார்பு, வயிறு

குற்றியலுகரம் ஆறு வகைப்படும்; அவை ஈற்றெழுத்திற்கு அயலெழுத்தை நோக்கி வன்றொடர், மென்றொடர், இடைத்தொடர், ஆய்தத்தொடர், உயிர்த்தொடர், நெடிற்றொடர் என வழங்கப்படும்.

**உதாரணம்**

| சொற்கள் | வகை |
|---|---|
| சுக்கு, மச்சு, பட்டு, மத்து, பருப்பு, நாற்று | வன்றொடர் |
| சங்கு, மஞ்சு, நண்டு, பந்து, அம்பு, அன்று | மென்றொடர் |
| நொய்து, மார்பு, அல்கு, போழ்து, தெள்கு | இடைத் தொடர் |
| அஃது, இஃது | ஆய்தத் தொடர் |
| படகு, பலாசு | உயிர்த் தொடர் |
| ஆடு, சோறு | நெடிற் றொடர் |

### முற்றியலுகரம்

சொல்லின் ஈற்றில் மெல்லின மெய்யின்மேலும் இடையின மெய்யின் மேலும் ஏறிய உகரங்கள் முற்றியலுகரங்களாம்.

(உ-ம்) கணு — பல்லு
தனு — எள்ளு
தும்மு — ஏழு

தனிக்குறிலையடுத்துக் கு, சு, டு, து, பு, று சொல்லின் ஈற்றில் நின்றாலும் முற்றியலுகரமே.

(உ-ம்) நகு, பசு, நடு, அது, தபு, அறு,

**பயிற்சி :**

1. கீழ் வருவனவற்றுள் குற்றியலுகரத்தையும் முற்றியலுகரத்தையும் உடைய சொற்களைப் பிரித்து எழுது. குற்றியலுகரமாயின், இன்ன தொடர்க் குற்றியலுகரமெனவும் கூறு :—
இரண்டு, அறிவு, உண்டு, ஒன்று, ஏடு, கூர்ந்து, ஒரு, இங்கு, ஐந்து, இரு, வென்று, அரசு, வகுத் ஒறுத்து, தவறுது, செய்து, என்பது, எவ்வளவு, பெறு, பேறு, அது.
2. ஒன்பதாவது பாராவில் காணப்படும் குற்றியலுகர ஈற்றுச் சொற்களை எடுத்து எழுதி, அவை இன்ன தொடர்க்குற்றியலுகரம் என்றும் கூறு.
3. நெடிற்றொடர், உயிர்த்தொடர், இடைத்தொடர்க் குற்றியலுகரங்கட்குத் தனித்தனி மும்மூன்று உதாரணங்கள் கொடு.

# 3. வெற்றிலைப் பயிர்

1. தாவர வகைகளுள் வெற்றிலையும் ஒன்று. இது மக்களுள் பெரும்பாலோருக்கு மென்று சுவைக்கும் பொருளாய் இருந்து வருகிறது. சிலர் உணவின்றி இருக்க எண்ணங் கொண்டாலும், வெற்றிலை மெல்லுவதை மட்டும் நிறுத்திக் கொள்ள விரும்புவதில்லை. ஆனால், வெற்றிலையை மட்டும்

தின்பதில்லை. அதனுடன் பாக்கையும் சுண்ணும்பையும் கலந்து மென்று சுவைப்பார்கள். சுண்ணம் வெண்மை நிற முடையது. வெற்றிலை பசுமை நிறம் வாய்ந்தது. பாக்கோ, சில பழுப்பாகவும், சில சாம்பல் நிறமாகவும் இருக்கும். இம்மூன்று வேறுபட்ட வண்ணமுடைய பொருள்களையும் ஒன்று சேர்த்து மென்ற போது, செம்மை நிறம் தோன்று கிறது. இஃது ஒரு விந்தையன்றோ! வெற்றிலை எவ்வாறு பயிரிடப்படுகிறது என்பதை இனிக் கவனிப்போம்:

2. தாவரங்கள் பல வகையாகப் பிரிக்கப்படுகின்றன. அவை மரம், செடி, கொடி, புல், பூண்டு முதலியன. அவற் றுள் கொடி வகையைச் சேர்ந்தது வெற்றிலை. வெற்றிலைக் கொடியைத் துண்டு துண்டாக வெட்டி, அத்துண்டுகளை நட்டுப் பயிர் செய்வர். அக்கொடி நட்ட சின்னுட்களுக்குப் பின் இலைகளை விடத்தொடங்கும். அவ்விலைகள் தளிர்க்கத் தளிர்க்க, அவற்றைக் கிள்ளிக்கொண்டே வருவார்கள். இவ் வாறு செய்யவில்லையானால், கொடியில் அரும்பும் மலரும் நிறைந்து, காயும் பிஞ்சும் கலந்து அழகுறத் தோன்றும். அத் தோற்றம் விளங்கும் அளவுக்குக் கொடியை விட்டு வைத் தால்தானே! வெற்றிலைப் பூ, பொன்னிறத்துடன் காணப் படும். காயும், பூவும் பயன்படாமையால், அவை தோன்றும் வரைக்கும் அவற்றை வளர விடாமல், பயன்படும் இலைகளை மட்டும் கிள்ளி எடுத்துக்கொள்கின்றனர். இக்கொடி மலர், பிஞ்சு, காய் முதலியவற்றைத் தாங்கும் பேறு பெறுமல், வெற்று இலையுடன் இருத்தலின், இதற்கு வெற்றிலைக் கொடி என்னும் பெயர் வழங்குகிறது மிகப் பொருத்தமேயாகும். வெறுமை இலை என்னும் இரு சொற்கள் சேர்ந்துதான் வெற் றிலை என்பது வழங்கப்படுகிறது.

3. வெற்றிலைப் பயிருக்கு நல்ல உரம் பொருந்திய மேட்டு நிலங்களே ஏற்றவை. இப்பயிர் எருவை மிகுதியாகப் பெற்றும், தண்ணீர் இறைத்தலை இடைவிடாது பெற்றும் வளர வல்லது. வெற்றிலைக் கொடியை நடுவதற்கு நிலத்தைப் பண்படுத்திச் செய்ய வேண்டிய வேலைகள் பல இருக்கின்றன; நிலத்தைச் சமப்படுத்த வேண்டும். நிலம் மேடும் பள்ளமு மாய் இருக்கக்கூடாது. நிலம் முழுமையும் ஏறத்தாழ இரண் டடி இடை வெளி விட்டு, முக்கால் அடி ஆழத்திலும் ஒன்ற ரையடி அகலத்திலும் கால்வாய்களை வெட்ட வேண்டும். இடைவெளியாக விடப்பட்ட இரண்டடி அகலம் கொண்ட



இடங்களில், வெட்டிய மண்ணைப் போட்டு மேடைகள் செய்ய வேண்டும். முக்காலடி ஆழமாகத் தோண்டப்பட்ட கால் வாய்களில் நீரைப் பாய்ச்ச வேண்டும். மேடைகளின் இரு மருங்கினும் இரண்டிரண்டு வரிசையாக அகத்திச் செடியைப்

பயிராக்க வேண்டும். ஆக, ஒரு மேடையில் நான்கு வரிசை அகத்திச் செடிகள் வளர்ந்து வரும் என்பது தெரிகிறதல்லவா? மேடையில் ஓரத்தின் இரண்டு வரிசைகளுக்கு இடையில் உள்ள இடத்தைக் 'கங்கு' என்பர். இந்தக் கங்கின் இடை வெளி முக்கால் சாண் இருக்கும். ஒரு மேடையில் இரண்டு கங்குகள் அமைந்திருக்கும். கால்வாய் நீரை இந்த அகத்திச் செடிகளுக்கு இறைத்து இவற்றை வளரச் செய்வர். சேற்று மண்ணைக்கொண்டு மேடைகளின் இரு பக்கங்களையும் மெழுகிப் புல் பூண்டு முளையாதபடி கவனித்து வருவர். கங்குகள் நீங்கலாக மற்றும் இடைவெளி இருக்குமல்லவா? அந்த இடங்களில் இடைவிட்டு இடைவிட்டு வாழை, கத்தரி, வெண்டை முதலியவற்றையும் பயிராக்குவர். அகத்திச் செடி ஏறக்குறைய மூன்றடி உயரத்திற்கு வளர்ந்ததும், வெற்றிலைக் கொடிகளைத் துண்டு துண்டுகளாக வெட்டிக் கங்கு என்று கூறப்படும் இடங்களில் நட்டுவிடுவார்கள். கால்வாய்களில் நீரை நிரப்பி, அவற்றின் மூலம் நீரை வெற்றிலைக் கொடிக்கு இறைத்து வர வேண்டும். தண்ணீர் இறைக்க வெற்றிலைக் கொடி நன்கு செழித்து வளரும். அப்படி வளர்ந்து வரும் கொடியை, ஓர் ஆளின் இடுப்பளவுக்கு வளர்ந்துள்ள அகத்திச் செடிகளின்மீது படர விடவேண்டும். தண்ணீரை இறைத்துவிடுதல் மட்டும் போதாது. வெற்றிலைக் கொடிகளுக்கு அடியில் மாட்டுச்சாணம், ஆட்டுப் பிழுக்கை, பன்றி மலம் ஆகியவற்றை எருக்களாகப் போடவேண்டும். இவ்வாறு எரு ஊட்டப்பட்டதும் வெற்றிலையும் அகத்தியும் நன்கு செழித்து வளர்ந்து வரும். அகத்திச் செடிகள் ஆள் உயரத்திற்கு மரமாய் வளர்ந்ததும், அவ்வகத்தி மரங்களை அடுத்த மேடையின் ஓரத்தில் வளர்ந்திருக்கும் அகத்தி மரங்களுடன் இணைத்துக் கட்டுவர். இப்படி இணைப்பதற்கு இவ்விரு அகத்தி மரத் தொகுதிகளுக்கு இடையில் பட்டை

உரிக்கப்பட்டுக் காய்ந்து கனமற்று இருக்கும் அகத்தி மரங்களைக் குறுக்கில் வரிசையாக வைப்பர். அவை கீழே விழாதபடி அகத்தி மரத்தையும் முருங்கை மரத்தையும் முட்டுக் கொடுத்துக் கட்டிவிட வேண்டும். இவ்வாறு கட்டப்பட்ட போது அகத்தி மரங்களின் மேற்பாகம் ஒரே பந்தல் போலக் காணப்படும். கீழே கால்வாய், நீருடன் நிறைந்திருக்கும். இந்த அகத்தி மரங்களிலேதான் வெற்றிலைக்கொடி படர்ந்து வளர்ந்து வரும். இவ்வளவு செயல்களைச் செய்தல் மட்டும் போதாது. இக்கொடியைக் காப்பாற்றுதற்கு நிலத்தைச் சுற்றிலும் வேலியமைக்க வேண்டும். இவ்வேலியினை இரு காரணங்களுடன் அமைப்பர். ஒன்று காற்று மிகுதியும் இவ் வெற்றிலைப் பயிருக்குள் செல்லாதிருத்தலும், மற்றொன்று ஆடுமாடுகள் மேயாதிருத்தலும் ஆகும். இவ்வேலிகள் அகத்தி மரங்களாலும், முருங்கை மரங்களாலும், வாழைச் சருகுகளாலும் அமைந்தவை.



4. இந்த வெற்றிலை இந்த வண்ணம் பயிரிடப்பட்ட பின், நான்கு ஆண்டுகள் தொடர்ந்து பலனளித்து வரும். முதல் முதல் தோன்றும் இலையை இளங்கால் வெற்றிலை என்பர். அடுத்தபடி வெளி வரும் வெற்றிலை முதுகால் வெற்றிலை

எனப்படும். இளங்கால் வெற்றிலை மிக்க பசுமையும், தடிப்பும் உள்ளதாய் இருக்கும். முதுகால் வெற்றிலை வெளுப்பும் மென்மையும் பொருந்தியிருக்கும். வெற்றிலையில் பல வகை உண்டு. அவை வெள்ளை வெற்றிலை, பச்சை வெற்றிலை, கற்பூர வெற்றிலை, கார வெற்றிலை என்பன. பெயருக்கு ஏற்ற குணம் இவ்வெற்றிலையில் பொருந்தியிருப்பதால், இதற்கு இப் பெயர்கள் அமைந்திருக்கின்றன. கற்பூர வெற்றிலை கற்பூர மணமும், விருவிருப்புக் குணமும் கொண்டிருக்கும். கார வெற்றிலை காரமுள்ளதாய் இருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இவ்விரு வெற்றிலைகளும் மருந்துக்கு மிகுதியும் பயன்படக் கூடியவை. ஏனைய வகையான வெற்றிலைகள் மக்கள் சுவைத்து மெல்லக் கூடியவை. வெற்றிலையை அடிக்கடி பார்க்கும் உங்களுக்கு அதன் வடிவத்தைப் பற்றிக் கூற வேண்டுமோ? அது வேலைப் போன்று, முனை கூர்மையுடையதாகக் காணப்படும். அகன்று நீண்டுள்ள வெற்றிலைகளும் உண்டு.

5. வெற்றிலை நம் நாட்டில் மிகுதியாகப் பயிரிடப்படுகிறது. இலங்கைத் தீவும், மலையாளமும் வெற்றிலைப் பயிர்க்குப் பெயர் பெற்றவை. அவ்விடங்களில் வெற்றிலைக்கெனத் தனியிடங்களை நாட மாட்டார்கள்; தம் வீட்டுக்கு முன்புறமேனும் பின்புறமேனும் காலியிடங்கள் இருந்தால், அங்கெல்லாம் பயிரிட்டுவிடுவார்கள். மேலும், நம் தமிழ் நாட்டு உழவர்கள் பயிரிடும் முறைகள் யாவற்றையும் மேற்கொள்ளாமல், கொடியை மட்டும் நட்டுவிடுவார்கள். அந்நாடுகள் மழை மிகுதியும் பெற்று விளங்கும் நாடுகளாதலின், அம் மழை நீரால் வெற்றிலை வளர்ந்து நல்ல பயனை நல்கி வரும். இங்கு வளரும் வெற்றிலை, இரண்டு கை அகலமுள்ளதாய் இருக்கும்.

6. வெற்றிலை மங்கலப் பொருள்களுள் ஒன்று. கடவுள் பூசைகளிலும், திருமணக்காலங்களிலும் இது பெரிதும்வேண்டற்பாலதாய் இருக்கின்றது. திருமணத்தின் போது வருகிறவர்களுக்கு வேறு எந்தப் பொருளைக் கொடுத்து உபசரிக்காவிட்டாலும், வெற்றிலையைக் கொடுத்தே ஆக வேண்டும். இது முதல் மரியாதையாகும். வெற்றிலையுடன் பாக்கையும் வைத்துக் கொடுப்பார்கள். வீட்டிற்கு வருபவர்கள் முன்னிலையில் வெற்றிலைப் பெட்டியைத் திறந்து வைத்துப் போட்டுக்கொள்ளுமாறு வேண்டும் வழக்கம் இன்றும் நம் நாட்டில் உண்டு. உணவு உண்ட பின், இதனை இந்தியரும் இலங்கை வாசிகளும், பர்மியரும், மலையாளிகளும் பெரும் பான்மையும் மென்று சுவைக்கின்றார்கள்; மற்ற நேரங்களிலும் தின்பார்கள். வெற்றிலையுடன் இலவங்கம், ஏலக்காய், சாதிக்காய் முதலிய வாசனைப் பொருள்களையும் சேர்த்து மெல்லுவர்.

7. வெற்றிலை இத்துணைச் சிறந்த பொருளாய் இருப்பதனாலேதான், இதற்கு மெல்லிலை, வெள்ளிலை, தாம்பூலம் முதலிய சொற்கள் வழங்குகின்றன. இதன் சுவையை நன்கு உணர்ந்த நம்மாழ்வார், கண்ணனைப் புகழ்கையில் 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்'' என்று பாடிக் களித்துள்ளார். ஆகவே, இவ்வெற்றிலைப் பயிரை மேலும் மேலும் வளர்த்து நல்ல ஊதியத்தைப் பெற வேண்டும்.

அருஞ்சொற்பொருள் :

சுண்ணம்-சுண்ணும்பு, வண்ணம்-நிறம். உரம்-எரு, மருங்கு-பக்கம், சறுகு-உலர்ந்த இலை, நல்கி-கொடுத்து, ஊதியம்-வருவாய், திருமணம்-கல்யாணம்.

### கேள்விகள் :

1. வெற்றிலை எவ்வெவ்வாறு பயிரிடப்படுகிறது ?
2. வெற்றிலைப் பயிரோடு எவை எவை பயிரிடப்படுகின்றன ?
3. எத்தனை வகையான வெற்றிலைகள் இருக்கின்றன ?
4. இப்பயிர் எங்கெங்கு மிகுதியாகப் பயிரிடப்படுகின்றது ?
5. வெற்றிலை எவ்வெவ்வாறு பயன்படுகிறது ?

### பயிற்சி :

1. கங்கு, இளங்கால் வெற்றிலை, முதுகால் வெற்றிலை—இவைகளைப்பற்றிச் சிறு குறிப்பு எழுது.
2. இலங்கைத்தீவும், மலையாள தேசமும் இப்பயிரைப் பயிரிடும் முறையை விளக்கி எழுது.

### இலக்கணம் :

## மாத்திரை

**அ, ஆ** என்னும் இவ்விரண்டு எழுத்துக்களையும் ஒலித்துப் பார். இரண்டிற்கும் ஓசையில் வேறுபாடு தெரிகிறதா ? இவ்வாறு எழுத்துக்களை உச்சரிக்கும் கால அளவு 'மாத்திரை' என்று இலக்கணத்தில் கூறப்படும். இயல்பாகக் கண்ணிமைக்கும் நேரமும், கைந்நொடிக்கும் நேரமும் ஒரு மாத்திரைக்கு அளவாகும்.

மெய்யெழுத்துக்களும், ஆய்த எழுத்தும், குற்றியலுகரமும், குற்றியலிகரமும் அரை மாத்திரையுடையன. குறிலுக்கு மாத்திரை ஒன்று; நெடிலுக்கு மாத்திரை இரண்டு.

### பயிற்சி :

1. இறுதிப்பாராவில் உள்ள எழுத்துக்களுள் ஒவ்வொன்றிற்கும் மாத்திரை அளவைக் குறிப்பிடு.
2. ஐ, ரு, எ, மொ, நோ, ஈ, உ, சே, சை, தூ, பா, ணை, ரோ—இவ்வெழுத்துக்களுக்குரிய மாத்திரைகளைக் குறிப்பிடு.

# 4. எனது கேளிக்கைப் பிரயாணம்

(மகாபலிபுரம்)

'கணபதி விலாஸ்'
தாண்டவாசாரி வீதி,
புரசைப்பாக்கம்,
சென்னை, 17-10-'51

அன்புள்ள மாமா அவர்கட்கு வணக்கம்:

இவ்விடம் யாவரும் நலம். உம்முடைய நலம் அறிய விழைகிறேன். குமரன் பள்ளிக்கூடம் செல்கிருனு? நான் அடுத்த கோடை விடுமுறைக்கு அங்கு வருகின்றேன். மாமிக்கு இச்செய்தியை அறிவிக்கவும். இது நிற்க.

நானும் என் பள்ளிக்கூட நண்பர்களும் எங்கள் வகுப்பு ஆசிரியருடன் மகாபலிபுரம் சென்ருேம். அதன் சிற்ப ஓவியத் திறனை நான் என்னென்று உமக்கு எடுத்து எழுதப்போகி றேன்! என்ருலும், நான் குறித்துக்கொண்ட குறிப்பிலிருந்து சிலவற்றை எழுதுகிறேன். நீரும், மாமியும், குமரனும் தாம தம் செய்யாமல் ஒரு நாளைக்கேனும் போய் அதைப் பார்த்து விட்டு வரவேண்டும்.

நான் படிக்கும் ஏழாவது வகுப்பில் நாற்பது பிள்ளைகள் வாசிக்கின்ருர்கள். அவர்கள் யாவரும் எங்கள் கேளிக்கைப் பயணத்தில் கலந்துகொள்ளவில்லை. என்னுடன் இருபது பிள்ளைகள் மட்டுந்தான் இப்பயணத்தில் கலந்துகொண்டார் கள். சென்ற சனிக்கிழமைக் காலை நாங்கள் இருபத்தொரு நபர்களும் சென்னைக் கோட்டை வெளியிலிருந்து புறப்படும் பஸ்ஸில் ஏறி, மகாபலிபுரத்தையடைந்தோம். மகாபலிபுரம் கடற்கரை ஓரத்தில் அமைந்த பட்டினம். ஊருக்கும் கடற் கரைக்கும் ஏறக்குறைய இரண்டு பர்லாங்குத் தொலைவுதான்

இருக்கும். இது பல்லவர் அரசு புரிந்த காலத்தில் துறை முகமாய் இருந்த பட்டினமாகும். மகாபலிபுரம் **மாமல்ல புரம்** என்றும் கூறப்படும். இப்பெயரை இதற்குச்சூட்டி மகிழ்ந்த மன்னன், **'மாமல்லன்'** என்பவன். இவன் பல்லவ மரபினன்; கி. பி. ஏழாம் நூற்றுண்டில் காஞ்சிமா நகரைத் தலைநகரமாகக் கொண்டு, அரசாண்டவன். இங்குள்ள திருமால் கோயில் திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது. இவ்வாழ்வார் இத்தலத்தைத் **திருக்கடல் மல்லை** எனக்குறிப் பிட்டுள்ளார். இப்பொழுது காட்சியளிக்கும் இப்பட்டினம் முழுத்தோற்றத்தைப் பெற்றதன்று. இதன் பழைய தோற்றப் பொலிவு, பெரிதும் கடலால் கொள்ளப்பட்டது என்பது பலர் கருத்து. கடல் கொண்டது போக, எஞ்சியுள்ள பகுதி களையே நாம் இன்று கண்டு மகிழவேண்டியவர்களாய் இருக் கிறோம்.

மகாபலிபுரத்தைக் காண விழைவதன் இன்றியமையாத நோக்கம் யாதெனில், அங்குள்ள சிற்பங்களைக் கண்டு களிப்பதும், கற்கோயில்களைப் பார்த்துப் பரவசமுறுவதுமே யாகும். அங்கு ஐந்து கற்றளிகள் இருக்கின்றன. அவை ஐந்தாய் இருப்பதனுல், அவற்றைப் பஞ்சபாண்டவர் இரதங் கள் என்று கூறுகின்றனர். அப்படிக் கூறுவதற்குத் தக்க ஆதாரம் இல்லை எனச்சில சரித்திர ஆசிரியாகள் கருதுவதாக எங்கள் ஆசிரியர் கூறினர். அவரும் சரித்திரம் நன்கு கற்ற வர். இக்கற்கோயில்கள் **மகேந்திரவர்ம** பல்லவனுலும், அவன் மகன் **நரசிம்மவர்ம** பல்லவனுலும் கற்களைக் குடைந்து கட்டப்பட்டனவாகச் சரித்திர வரலாறு அறிவிக் கின்றது. இவை தனித்தனியே கற்பாறைகளைக் குடைந்து அமைக்கப்பட்டன என்பதைக் கேட்குந்தோறும், காணுந் தோறும் வியக்காமல் இருக்க முடியவில்லை.

இவ்வைந்து கற்கோயில்களுள் பெரியதாய் இருப்பதைத் தருமர் கோயில் என்கின்றனர். இது மூன்று வாயில் நிலை களைக் கொண்டது. இதில் காணப்படும் ஓவியத் திறனைச் சென்று கண்டால் அன்றி, எழுத்தால் எழுதி விளக்குதல் இயலாது. இரண்டாம் அடுக்கின் நடுப்பாகத்தின் கீழ்ப் பகுதியில் பார்வதி பரமேஸ்வரர் குமாரக்கடவுளோடு வீற் றிருக்கும் முறையில் ஒரு விக்கிரகம் செதுக்கப்பட்டிருக்



கிறது. இதனைச் 'சோமாஸ்கந்த மூர்த்தி' என்கின்றனர். தருமர் இரதத்திற்கு அடுத்தாற்போல இருப்பது பீம ரதம். அடுத்தபடி உள்ளவை காண்டீபன் தேரும், பாஞ்சாலியின் இரதமும் ஆகும். இங்குக் கரியின் உருவமும், அரியின் வடி வமும் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். திரௌபதி யின் இரதம் என்பது, துர்க்கையின் கோவிலே அன்றி வேறன்று என்று யூகிக்க இடம் ஏற்படுகிறது. நகுல சகா தேவர் இரதங்கள் என்பன முற்ற முடிய அமையப் பெறுமல் அரைகுறையான வேலைப்பாட்டுடன் காணப்படுகின்றன. துர்க்கையின் கற்கோயிலுக்கு முன் புறத்தில் ஒரே சிலையில்

செதுக்கப்பட்ட கைம்மாவின் வடிவத்தைக் காணலாம். இவற்றை எல்லாம் உன்னிப்பாகப் பார்த்து வருவதற்குள், எங்கள் கால்கள் கடுக்கத் தொடங்கின. ஆகவே, 'மிகுதி யான பாகங்களை நாளைக்குப் பார்ப்போம்,' என்று முடிவு கட்டிக்கொண்டு, சிறிது நேரம் கடற்கரை மணலில் அமர்ந்து உரையாடிவிட்டு, இரவு உணவு கொண்டு உறங்கினோம்.

மறுநாள் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, எஞ்சியுள்ள பகுதிகளைக் காணப் புறப்பட்டோம். வெயில் ஏறிவிட்டால், ஒன்றையும் சரிவரக் காண இயலாமற் போகுமென்று, காலை ஆறரை மணிக்கெல்லாம் வெளியே புறப்பட்டோம்.

ஐந்து கற்கோயில்களுக்கப்பாற் கண்ட காட்சி பகீரதன் தவத்தைக் குறிக்கும் சிற்பக் காட்சியாகும். இக்காட்சி அடங்கிய கற்சிலையானது இருபத்தொன்பது கெஜநீளத்திலும் பத்துக்கெஜ அகலத்திலும் இருந்தமையால், இத்தவக் காட்சியே அன்றி, வேறு பல வகைப்பட்ட ஓவியக் காட்சிகளும் இதில் இருந்தன. இத்தகைய நீளமான கல்லில் மக்கள், தேவர், விலங்கு முதலிய உருவங்கள் காணப்படுகின்றன. இரு பக்கங்களிலும் பெரிய பாறைகள் அடைபட்டிருக்கின்றன. இவற்றிற்கு இடையே ஒரு பிளவு காணப்படுகின்றது. அப்பிளவில் நாகர் உருவங்களும் நாககன்னியர்களின் உருவங்களும் வடிக்கப்பட்டிருக்கின்றன. அப்பிளவின் வழியே மழை பெய்யுங் காலத்து நீர் பாயும் இடைவெளி ஒன்று இருக்கிறது. பிளவுக்கு வடபால், ஒரு மாதங்கம் அப்பிளவுக்கு நேரே தன் கரத்தை நீட்டிக்கொண்டிருப்பதையும், அதற்குப் பின் பக்கமாக மற்றொரு வேழம் நிற்பது போலச் செதுக்கப்பட்டிருப்பதையும் காணும் போது, சிற்பியின் கை வன்மையைப் புகழாமல் இருக்க இயலாது. இதன்

பின் கிருஷ்ணன் கோவர்த்தனகிரியைத் தன் கையால் ஏந்திக் குடை போலப் பிடித்துக்கொண்டு, ஆக்களேயும் ஆயர் களேயும் மழைப்பொழிவிலிருந்து காத்து நிற்கும் சிற்பத்தைக்



கண்டோம். துர்க்கா தேவியின் தோற்றமும் அங்குத் தோற்று விக்கப்பட்டுள்ளது. அத்துர்க்கை தன் எட்டுத் தோள் களுடன் அரிமாமீது அமர்ந்து, மகிடாசுரனேப் போரிட்டு அடக்கி ஆளுவது போலச் செதுக்கப்பட்டிருக்கும் சிற்பம், எவருடைய கண்ணேயும் கருத்தையும் கவர வல்லதாய் இருக் கிறது. துர்க்கா தேவியின் சிற்பத்திற்கு எதிரே திருமால் பாம்பணேமீது பள்ளிகொண்டிருக்கும் முறையில் அமைந் துள்ள வடிவமும், தேவர்கள் வேண்டுகோளே ஏற்று நிற்கும் நிலேயில் ஆதி வராக அவதாரக் கோலத்துடன் விளங்கும்

திருமாலின் உருவமும், மூவடி மண் வேண்டி மூவுலகையும் அளந்ததோடு நில்லாமல், மாவலியின் சென்னி மீதும் திருவடி வைத்து அடிமை கொண்ட விக்கிரம அவதாரத் தோற்றமும் அங்கு இன்னும் மகிழ்வூட்டும் சிறப்பக் காட்சிகளாகும்.

இன்னேரன்ன காட்சிகள் நேரில் கண்டால் அன்றி, எழுத்தில் எழுதிக் காட்ட ஒண்ணுதவை. நீரும் மாமியும் எவ் விதமேனும் சென்று காண்பது சாலவும் பயனுடையதாகும். வேண்டுமானுல், யானும் உம்முடன் வருகிறேன். வந்தால், நான் கண்டவற்றை உமக்கும் கூறிக்கொண்டே வருவேன்.

மகாபலிபுரத்தின் கடற்கரை ஓரம் கற்பாறைகள் நிறைந்து காணப்படுவதால், கப்பல்கள் வெகு விழிப்புடன் செல்ல வேண்டி, அங்குக் கலங்கரை விளக்கம் ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. கடற்கரைக் கோவிலும் அங்கு இருக்கிறது. அவற்றையும் அங்குச் சென்ருல் காணலாம்.

ஊர் அத்துணை வளமுடையதாய்க் காணப்படவில்லை. இரண்டொரு நாள் வசதியாகத் தங்குவதற்குரிய இடவசதி யும் குறைவு. அப்படித் தங்க வருபவர் தமக்குத் தேவை யான பொருள்களுடன் வந்தால் அன்றிச் சௌகரியமாகத் தங்கிச் செல்ல இயலாது. அதனுலேதான் அங்கு வருபவர் இக்காட்சிகளைக் கண்டவுடன் திரும்பிவிடுகின்றனர்.

இம்மகாபலிபுரத்தை அடையப் பல மார்க்கங்கள் இருக்கின்றன. சென்னை எழும்பூரில் இரயில் ஏறிச் செங்கற் பட்டையடைந்து, அங்கிருந்து திருக்கழுக்குன்றத்தை அடைந்து, அங்கிருந்து ஜட்கா வண்டியில் செல்லலாம். திருக் கழுக்குன்றத்திற்கும் மகாபலிபுரத்திற்கும் ஒன்பதுகல் தொலை வாகும். திருப்போரூரை அடைந்து அங்கிருந்து கூண்டு வண்டியின் மூலமும் மகாபலிபுரத்தை அடையலாம். சென்னை யில் நேர் பஸ் ஏறியும் அங்குப்போய்ச் சேரலாம். இவ்வசதி

களோடு, சென்னை அடையாற்றையடுத்துள்ள பலகை வாராவதியில் படகு ஏறியும் அங்கு நேரே போய்ச் சேரலாம்.



இதற்குமேல் நான் ஒன்றும் மகாபலிபுரத்தைப் பற்றி உமக்கு எழுத வேண்டுவதில்லை என எண்ணுகிறேன்.

நாங்கள் ஞாயிற்றுக் கிழமை இரவு படகு ஏறிச் சென்னையை அடைந்தோம். வணக்கம்.

இங்ஙனம்,
உம் அருமை மைத்துனன்
கண்ணன்.

திரு. தட்சிணாமூர்த்தி பிள்ளை
16, கடை வீதி,
அரக்கோணம்.

அருஞ்சொற்பொருள் :

மரபினன் - வமிசத்தைச் சார்ந்தவன், எஞ்சியுள்ள - மிகுந்துள்ள, விழைவது - விரும்புவது, பரவசமுறுதல் - தம்மை மறத்தல், தளிகள்-கோவில்கள், குடைந்து-தோண்டி, காண்டீபன்-அர்ச்சுனன், கரி-யானை, அரி-சிங்கம், கைம்மா-யானை, கடுக்க-நோவ, சிலை-மலை, வடிக்கப்பட்டிருக்கின்றன-செதுக்கப்பட்டிருக்கின்றன, மாதங்கம்,

வேழம்-யானை, ஆக்கள்-பசுக்கள், வராகம்-பன்றி, மூவுலகு-மண், விண், நாக உலகங்கள், விழிப்புடன்-எச்சரிக்கையுடன், மார்க்கங்கள்-வழிகள்.

**கேள்விகள் :**

1. மகாபலிபுரத்தில் காணக்கூடிய ஐந்து ரதங்கள் எவை ?
2. அங்கு எவ்வெச்சிற்பங்களைக் காணலாம் ?
3. 29 கெஜ நீளத்திலும் 10 கெஜ அகலத்திலும் அமைந்த கற்சிலையில் காணப்படும் சிற்பங்கள் எவை ?
4. இவ்வூருக்கு மாமல்லபுரம் என்னும் பெயரைச் சூட்டியவன் யாவன் ?

**பயிற்சி :**

1. யானைக்குரிய பெயர்களை எடுத்து எழுது.
2. துர்க்கை வடிவம், சோமாஸ்கந்தமூர்த்தி அமைந்துள்ள தோற்றத்தைக் குறிப்பிடு.
3. மகாபலிபுர நிலவளத்தைப்பற்றிச் சில வாக்கியங்கள் எழுது.
4. நீ சென்று பார்த்துள்ள ஊர் ஒன்றின் இயல்பைக் குறித்துக் கட்டுரை எழுது.

**இலக்கணம் :**

## காரணப்பெயரும் இடுகுறிப்பெயரும்

**'நாற்காலி'** என்று எதைக் கூறுகிறோம் ? நான்கு கால்களுடைய ஒரு பொருளை அல்லவா கூறுகிறோம் ? எதனால் அதற்கு அப்பெயர் கொடுக்கப்பட்டது ? அது நான்கு கால்களைப் பெற்றிருப்பதனால் அல்லவா ? அப்படிக் காரணத்தோடு வைக்கப்பட்ட பெயர்கள் **காரணப் பெயர்களாம்.**

**'மரம்'** என்னும் பொருளுக்கு, ஏன் அப்பெயர் வைக்கப்பட்டது என்பதை யாராலும் கூற முடியாது. இவ்வாறு காரணமில்லாமல் நெடுங் காலமாக ஒரு பொருளுக்கு இட்டு வழங்கும் பெயரை **இடுகுறிப்பெயர்** என்பர்.

**பயிற்சி :**

1. கோயில், பாண்டவர், கல், காண்டீபன், மழை, வேழம், ஆ, ஆயர், பாம்பு, மண், கப்பல்-இவை இன்ன பெயர்கள் என்பதைக் குறிப்பிடு.

2. காரணப்பெயர், இடுகுறிப்பெயர்கட்குத் தனித்தனி மும் மூன்று உதாரணம் கொடு.
3. காற்றுடி, பனை மரங்கள், வீடு, முள்ளி, கல், மீன் கொத்தி-இவை இன்ன பெயர்கள் என்பதை விளக்கமாக எழுது.

# 5. நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை

1. செந்தமிழ் நாட்டு மாவட்டங்களாய்த் திகழும் பேரூர்களில் சேல மாவட்டமும் ஒன்று. அம்மாவட்டத்தைச் சார்ந்த ஊர் மோகனூர் என்பது. அவ்வூரில் வேங்கடராமப் பிள்ளை என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் அவ்வூர்ப்போலீஸ் தலைமை ஊர்காவலர். அவருக்கு வாழ்க்கைப்பட்ட வனிதை யார் அம்மணி அம்மையார் என்பவர். அவ்விரு தம்பதிகள் இல்லறத்தை இனிது நடத்தி வருகையில் இறைவன் அருளால் ஏழு குழந்தைகளை ஈன்றெடுத்தார்கள். அவ்வெழுவருள் பிறந்த ஆண் குழவி எதுவும் நிலைக்கவில்லை. இதனால், அவர் கட்குக் கவலையுண்டாயிற்று. இக்கவலை நீங்கும் காலம் அணு கியது. ஒரு முறை ஓர் அந்தணரை வேங்கடராமப் பிள்ளை காண நேர்ந்தது. அவருக்கு பல உபசாரம் செய்து உதவியும் புரிந்தார். அந்தணர் செந்தண்மை பூண்ட செவ்வியராய் இருந்தமையால், பிள்ளையின் மனம் ஆண் மகப்பேறு இல்லா மையால் அல்லல் உறுகிறது என்பதை யூகித்து அறிந்து, "அன்பரே, உமக்கு ஆண்டவன் அருளால் ஆண் மகன் உதிப்பான். அவனுக்கு இராமலிங்கம் என்னும் பெயரைச் சூட்டி இன்புறும்," என்று கூறிச் சென்றார். இம்மொழிகளைக் கேட்ட தம்பதிகள் இன்பமுற்று அப்பேற்றைப் பெறும் நாளை எதிர்நோக்கி இருந்தார்கள்.

2. கூறியவர் தூய மனத்தினர் ஆதலின், அவ்வாறே 1888-ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 19-ஆம் நாள், வெள்ளிக்கிழமை நள் இரவு வேங்கடராமப் பிள்ளைக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. இக்குழந்தை எட்டாவதாகப் பிறந்த படியால், "எட்டாவது பிள்ளை உலகைக் கட்டியாளும்,



என்னும் பழமொழிக்கு இணங்க இவன் பின்னளில் சிறந்து விளங்குவான் போலும்!" என்று பெற்ருேர் மகிழ்ந்து, குழந்தையை அன்புடன் வளர்த்து வந்தனர். முன்பு மறையவர் கூறியபடி அம்மைந்தர்க்கு இராமலிங்கம் என்னும் பெயர் வழங்கினர்.

3. நாமக்கல் வட்டாரப் போலீஸ் மேற்பேர்வையாளர் ரசாக்கு உசேன் என்பவர். அவருக்குப் பிள்ளைப் பேறு இல்லை. இராமலிங்கம் அவர் வீட்டுக்கு அடிக்கடி போய் வந்ததால்,

உசேன் அவர்களும் அவர் மனைவியார் பதுலா பீகம் அம்மையாரும், இவரை அன்புடன் பாராட்டி வந்தனர்.

4. இராமலிங்கத்திற்கு முதல் முதல் கல்வி கற்பித்த ஆசிரியர் பழனி உபாத்தியாயர் சண்முகம்பிள்ளை என்பவர். பின்பு இவர் நம்மாழ்வார் பள்ளிக்கூடத்தில் அப்பள்ளிக்கூடத்தலைவர் நம்மாழ்வாரிடம் கல்வி பயின்று வந்தார். இராமலிங்கத்திற்குச் சித்திரம் வரைவதில் ஊக்கம் அதிகம். ஒரு முறை நம்மாழ்வார் ஆசிரியர், கணக்கு ஒன்றைப் போடும்படி கூற, இவர் சித்திரம் வரைந்து வைத்தனர்; அதனால் அடியும் பட்டனர். ஆனால், இவர் எழுதிய சித்திரம் அழகாய் இருந்ததால், ஆசிரியரே அதனைப் பாராட்டி ஒரு ரூபாயும் பரிசாகத் தந்தார். பின்பு இவர் கோவையில் படித்து வந்தார். இவர் நான்காவது பாரம் படிக்கையில் இவருக்கு எலியட்டுத்துரை மகனார் ஆங்கில பாடம் நடத்தி வந்தார். அப்போது ஆசிரியர் இவரை நாகரிகம் என்பதைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுமாறு பணிக்க, இவர் அதனைத் திறம்பட எழுதித் தம் ஆசிரியர் உருவத்தையும் சித்தரித்துவிட்டார். இவரது திறனைக் கண்ட எலியட்டுத்துரைமகனார் இவருக்கு இரு நூல்களைப் பரிசு அளித்தனர்.

5. இவர் 1907-ஆம் ஆண்டு மெற்றிக்குலேஷன் படிப்பினை முடித்துக்கொண்டார். பிறகு திருச்சிராப்பள்ளி எஸ். பி. ஜி. கல்லூரியில் இடைக்கலை வகுப்பில் பயின்று வந்தார். ஆனால், காது வலி காரணமாகக் கல்லூரிப் படிப்பினைத் தொடர்ந்து பெற இவருக்கு இயலவில்லை. கல்லூரிப் படிப்பு நின்றதும் கலியாணமும் நடந்தது. இவர்க்கு மனைவியராய் வாழ்க்கைப்பட்டவர் முத்தம்மாள் என்பவர். இவர் குடும்பத்தில் ஈடுபட நேர்ந்ததால், தொழிலும் மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாயிற்று. இவரைத் தந்தை

யார் போலீஸ் உத்தியோகத்தில் அமர்த்த அரும்பாடு பட்டார். அத்தொழிலை ஏற்கச் சிறிதும் ஒவ்வாத இவர், தாலூக்கா ஆபீஸில் மூன்று மாதம் குமாஸ்தா வேலை பார்த்து வந்தார்; ஆனால், எந்த நேரமும் சித்திரம் எழுதுவதை மட்டும் நிறுத்த வில்லை. அதில் நாளுக்கு நாள் நல்ல பயிற்சி பெற்று வந்தார். குமாஸ்தா வேலைக்குப் பிறகு நாமக்கல்லில் ஆசிரியர் வேலையை மேற்கொண்டார்; அதனையும் மூன்று திங்களில் விட்டொழித்தார்.

6. இராமலிங்கம் பிள்ளை திலகர், லஜபதிராய், இராம கிருஷ்ணர், விவேகானந்தர் முதலியவர்களின் படத்தை வரைந்து, பொது மக்கள் பார்வைக்கு அனுப்பினர். அப் படங்களைக் கண்ட பொது மக்கள், நல்வரவு கூற, அப்படம் வரையும் தொழிலில் இராமலிங்கம் பிள்ளை முனைந்து நின்றார். இதனால், பண வருவாய் சிறிது மிகுந்தது. படம் வரையும் பயிற்சி ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் அரியணை அமர்கையில் இந்தி யத்தாய் அம்மன்னர்க்கு முடி சூட்டும் முறையில் ஒரு படம் வரையத் தூண்டியது. இவர் அவ்வாறே எழுதி முடித்தார். அதனைத் திரு. பா. வெ. மாணிக்க நாயக்கர் துணைக்கொண்டு டில்லிக்கு எடுத்துச் சென்று, அங்குள்ளவர் கண்களைக் கவரச் செய்தார்; அதனால், தங்கப் பதக்கம் பரிசு பெற்றார். இவ்வாறு பல்வேறு சித்திரங்களை எழுதி எழுதித் தம் பெய ரைப் பரவச் செய்தமையால், பெசண்டு அம்மையாரும் சில நகைச்சுவைப் படங்களை வரைந்து தருமாறு வேண்ட, அவ் வாறே வரைந்து கொடுத்தார். அதன் மூலம் ரூ. 500 பெற் றார். இவ்வாறு படம் எழுதி எழுதிப் புகழையும் பொருளை யும் தேடிக்கொண்டார் இராமலிங்கம் பிள்ளை.

7. இராமலிங்கம் பிள்ளை தீவிரமாக அரசியல் கிளர்ச்சி யில் ஈடுபட்டார். இப்படி இவரை ஈடுபடச் செய்தவை, திலகர்,

கோகலே முதலியோர் வெள்ளையர் அரசியலை எதிர்த்துப் பேசியதும், **பங்கிம் சந்திர சட்டர்ஜி** எழுதி வெளியிட்ட வந்தே மாதரம் என்னும் தேசீய கீதமும் ஆகும். மேலும், இராம லிங்கம் பிள்ளை பல பத்திரிகைகளையும் படித்து வந்தார்; அரசியல் கூட்டங்களில் கலந்துகொண்டார்; பல சொற் பொழிவும் ஆற்றத் தொடங்கினர். இதனால், இவரது புகழ் மேலும் பரவியது. இவரையின்றி நாமக்கல்லில் அரசியல் கூட்டம் நடவாத நிலைக்கு வந்துவிட்டது. இவரது பேச்சுத் திறனால் 1914 ல் நடந்த திருச்சி அரசியல் மாநாட்டில் தலைமை தாங்கும் பேறும் இவருக்குக் கிடைத்தது. கரூர்க் காங்கிரஸ் தலைவரானர். அங்குக் காந்தியடிகளாரை வர வேற்றுப் பெருமை பெற்ருர். இராமலிங்கம் பிள்ளை அரசி யலில் புகுந்து பாடு பட்டதனால், சிறை செல்லவும் நேர்ந்தது. காந்தியடிகளாரின் சத்தியாக்கிரகப் போரில் கலந்துகொண்டு ஓராண்டு சிறை புகுந்தார்; நாட்டுப் பற்றில் அதி தீவிரப் பற்றுடையவராய் விளங்கினர்.

8. ஓவியப் புலவராம் இராமலிங்கம் பிள்ளை காவியப் புலவராயும் கண்ணியம் பெற்ருர்; இளமை முதற்கொண்டே பல பாடல்களைப் பாடி வந்தார். அப்பயிற்சி நாளடைவில் இவரைக் கவிஞராக்கியது. நாடகத்திற்குரிய பாட்டுக்களைப் பாடிக் கொடுத்து வந்தார். அப்படிப் பாட வேண்டிப் பெற்றவர்களுள் காலஞ்சென்ற திரு. எஸ். ஜி. கிட்டப்பாவும் ஒருவர். அப்படிப் பல பாடல்களைப் பாடி வந்ததனால், இவரை **நாமக்கல் கவிஞர்** என்று யாவரும் புகழத் தொடங் கினர்.

9. 1914-ஆம் ஆண்டு தூத்துக்குடியில் ஒரு கவிதைப் போட்டி நடந்தது. அதில் நாமக்கல் கவிஞரும் கலந்துகொண் டார். ஆனல், சிற்சில காரணங்களால் கவிஞர் பாடல்கள்

2. **அவர்தான்** வந்தார், **அதுஎல்லாம்** சென்றன, **அவள்தாம்** போயினுள்.-இவ்வுதாரணங்களில் பொதுப்பெயர்கள் சரியான முறையில் அமைக்கப்பட்டனவா என்பதைக் கூறித் தவருயின் காரணமும் காட்டிச் சரியாக எழுது.

3. தன்மைப் பெயர், முன்னிலைப் பெயர்கள் இருதிணைப் பொதுப் பெயராக வருமாறு தனித்தனி மும்மூன்று உதாரணம் எழுது.

# 6. இயந்திரமும் சர்க்காவும்

## (உரையாடல்)

**இயந்திரம்:** நண்பா, நான் ஒரு பாவத்தையும் செய்யவில்லை. என்றாலும், காலஞ்சென்ற உலகம் போற்றும் உத்தமராய் விளங்கிய மகாத்துமா காந்தியடிகளார் என்னை ஏன் வெறுத்து வந்தாரோ, தெரியவில்லையே! அவர் வேண்டுதல் வேண்டாமை இல்லாத மகான். அவர் எந்தத் தொழிலையும் இழிவாக எண்ணும் இயல்பை அறவே ஒழித்தவர். அத்தகைய பேரறிவாளர், என்னை ஏன் வெறுத்து வந்தாரோ, அறியேன்! சர்க்கா நண்பா, உனக்கு ஏதேனும் காரணம் தெரியுமோ? தெரிந்தால், கூறு; கேட்கிறேன்.

**சர்க்கா:** தோழா. எல்லாரையும் வேறுபாடு கருதாமல் ஒருபடியாகக் கண்டு பழகும் பெரியவரான காந்தியாரோ உன்னை வெறுப்பார்! நீ எங்கள் இந்திய நாட்டிற்குத் தேவையில்லை என்று அவர் கருதி வந்தனரே அன்றி, உன்னை வெறுத்து வந்திலர்.

**இயந்திரம் :** நான் என்ன அப்படிக் குற்றம் செய்துள்ளேன் ? நான் இந்தியாவுக்குத் தேவையற்றவன் என ஏன் அவர் நினைத்துவிட்டனர் ?



**சர்க்கா :** ஆ ! அப்படிக்கேள்; அறிவிக்கிறேன் : நீ ஒரு சில முதலாளிகள் கைக்கு ஆளாகின்றாய். அம்முதலாளிகள் உன்னைக் கொண்டு பெருவாரியான வருவாய் தேட, ஒரு சில தொழிலாளர்களை மட்டும் வேலையில் அமர்த்திக்கொண்டு, அவர்கட்கும் போதுமான ஊதியம் தருதலின்றி, அரை வயிற்றுக் கஞ்சிக்கும் அல்லற்படும் நிலையில் வேலை வாங்குகின்றனர். உன்னால் பலருக்கு வேலை கிடைப்பது அரிதாய் இருக்கிறது. இதனால், பல குடும்பங்கள் உண்ண உணவின்றியும், உடுக்க உடையின்றியும் கவலையுறுகின்றன.

**இயந்திரம் :** பல பேர் வேலை இல்லாமல் வேதனைப்படுவதற்கும், அவர்கள் பசியால் வாடுவதற்கும் நான் எப்படிக் காரணமாவேன்? 'அவர்களை எல்லாம் வேலையில் அமர்த்தாதீர்கள்,' என்று நான் முதலாளிகளிடம் சொல்லிக்கொண்டு வருகின்றேனா? ஏன் இப்படி என் மேல் பழியினைச் சுமத்துகின்றாய்?

**சர்க்கா :** உன் நிலையைப்பற்றி நீயே சிந்தித்துப் பார். பலர் செய்யக்கூடிய வேலையை நீயே செய்ய முன் வந்துவிடுகிறாய். அப்படி இருந்தால், முதலாளிகள் பல பேர்களைத் தொழிலில் ஈடுபடுத்தி அவர்கட்கு ஊதியம் கொடுத்து உதவ முன் வருவார்களா? குறைந்த கால அளவில், நிறைந்த ஊதியம் பெற வேண்டுமென்னும் பேராசைக்காரர்கள் அல்லரோ அம்முதலாளிகள்?

**இயந்திரம் :** ஆஹா! அப்படிச் சொல்லு. நான் குறைவான நேரத்தில் நிரம்ப வேலை செய்வது, என்னிடம் அமைந்த தனிப்பெரும்பண்பு. இதனாலேதான் என்னை முதலாளிகள் விரும்புகின்றார்கள்.

**சர்க்கா :** நீயே உன்னைப் பெருமைப்படுத்திக்கொள்வதில் பயனில்லை. நீ முதலாளிகளுக்குக் குறைவான ஆட்களை வைத்து வேலை வாங்க வழி காட்டுகிறாய் என்பது உன் பேச்சிலிருந்தே விளங்குகிறதல்லவா? ஒரு தொழிற்சாலைக்குக் குறைவான ஆட்கள் தேவை இருப்பதால், வேலையில்லாமல் வேதனைப்படும் வேலையாட்களின் தொகை பெருகி, ஒருவர்க்கொருவர் போட்டியிட்டுக்கொண்டு, குறைந்த ஊதியம் பெற்றேனும் தம் வரையில் காலந்தள்ள எண்ணுகிறார்கள் அல்லவா? மற்றவர்கள் பட்டினி கிடந்து துன்புற வேண்டுவதுதானே? உன்னால் எத்தனை தீங்குகள் விளைகின்றன என்பதைச்

சிறிது சிந்தித்துப் பார். அப்படிப்பட்ட உன்னைக் காந்தி பெரியார் இந்தியாவிற்கு வேண்டா என்று சொன்னதில் என்ன தவறு இருக்கிறது ?

**இயந்திரம்:** நான் எப்படித் தொழிலாளர்களின் போட்டிக்குக் காரணம் ஆவேன்? இது என் குற்றம் அன்று. ஏன் உழைப்பாளிகள் குறைந்த ஊதியத்திற்கு ஒப்புக்கொள்ள வேண்டும்? அவர்கள் யாவரும் ஒன்று கூடி, ஒரு திட்டம் வகுத்துக்கொண்டு, ஒரு வேலையை எவர் செய்தாலும் இவ்வளவு கூலி கொடுத்தே தீரவேண்டும் என்று ஏன் கூறக் கூடாது? 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு; ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு,' என்னும் அமுதமொழியை ஏன் அவர்கள் சிந்திக்கக் கூடாது? சிந்தித்து அதன்படி ஏன் நடக்கக்கூடாது? முதலாளிகளின் வரவைத் தக்கபடி பங்கிட்டு உதவுமாறு ஏன் முதலாளிகளையே கேட்கக் கூடாது?

**சர்க்கா:** நீ சொல்லுவது எனக்குப் புரியவில்லை. சொல்லுவதை விளக்கமாகச் சொல்லு.

**இயந்திரம்:** முதலாளிகள் ஒரு தொழிற்சாலையை அமைக்க வேண்டுமானால், அதற்கு முன்பணம் வைக்கிறார்கள் அல்லவா? அம்முன்பணம் இல்லையானால், தொழிற்சாலை ஏது? நான் எங்கே? தொழிலாளர்தாம் எங்கே? ஆகவே, முன்பணம் இன்றியமையாதது. ஆதலால், அம்முன்பணத்திற்குரிய நியாய வட்டியை முதலாளிகள் எடுத்துக்கொள்ளட்டும். முதலாளிகளே தொழிற்சாலைகளில் இருந்து வேலை பார்த்தால், அதற்குரிய ஊதியமாகத் திங்கள்தோறும் எடுத்துக்கொள்ளட்டும். மிகுந்த வருமானத்தைப் பணி புரிபவரின் வேலைக்குத்

தக்கபடி பங்கிட்டுக் கொடுத்து வந்தால் 'குறைந்த ஊதியம் பெறுகிறோம்,' என்று கூலியாட்கள் கூக்குரல் இடமாட்டார்கள் அல்லவா? 'முதலாளிகள் கொள்ளை இலாபம் அடித்துக்கொண்டு போகிறார்கள்,' என்று குறை கூற மாட்டார்கள் அல்லவா?

**சர்க்கா:** இயந்திர நண்பா, நீ கூறுவது ஒழுங்காகத்தான் இருக்கிறது. 'பந்திக்கு முந்திக்கொள்,' என்பது போல, முந்திக்கொண்டு வேலையில் அமர்ந்தவர்களுக்கு நீ கூறும் திட்டம் பயனளிக்க வல்லதுதான். ஆனால், வேலையின்றி வருந்துபவர் கதி யாதாவது? அவர்கட்கு எப்படி உதவுவது? இதற்கு நீ ஒரு வழி காட்டு.

**இயந்திரம்:** சர்க்காத் தோழனே, நீ பணியாளர் பக்கம் நின்று இவ்வளவு பேசுவது குறித்து நான் மனம் மிக மகிழ்கிறேன்! அவர்கட்கும் வழி வகைகளை வகுக்கலாம். மனம் இருந்தால், மார்க்கமும் இருக்கும் அல்லவா? ஒரே ஆள் பல மணி நேரங்களாக வேலை செய்வதைக் குறைத்துச் சில மணி நேரங்களே வேலை செய்யத் திட்டம் ஏற்படுத்தினால், பல பேர்களைத் தொழிற்சாலைகளில் அமர்த்தி வேலை கொடுக்கலாம் அல்லவா? திட்டமான கூலியையும் வகுத்துவிட்டால், 'ஒரு தொழிற்சாலையில் அதிகம் கொடுக்கின்றனர்; மற்றொரு தொழிற்சாலையில் குறைவாகக் கொடுக்கின்றனர்'' என்னும் குறையும் ஏற்படாதன்றோ? இவைகள் எல்லாம் நல்ல திட்டங்கள் அல்லவா?

**சர்க்கா:** நீ சொல்லுகிறபடி நடந்தால், நீயும் இந்தியாவில் இடம் பெறுவதால் குற்றம் ஒன்றும் வாராது என்றுதான் எனக்கும் படுகிறது. இத்திட்டங்களைப் பற்றி முதலாளி

களும் அரசாங்கமும் கலந்து சிந்தித்து ஒரு நல்ல முடிவுக்கு வந்தால், தொழிலாளர் உலகத்திற்கு நலமாகத் தானே இருக்கும்! சரி, உன் வேலையை நீ ஒழுங்காகச் செய்துவா. நானும் என் கடமைகளைச் செய்து வருகிறேன். மற்றொரு சமயம் ஓய்வு கிடைக்கும் போது, உன்னை வந்து சந்திக்கிறேன். வணக்கம்.

**அருஞ்சொற்பொருள் :**

ஒரு படியாக - ஒரே விதமாக, ஊதியம் - சம்பளம், அல்லல் - துன்பம், அரிதாய் - கடினமாய், திங்கள் - மாதம், பணி புரிபவர் - வேலை செய்பவர், மார்க்கம் - வழி.

**கேள்விகள் :**

1. எந்திரங்கள் இருப்பதால் இந்தியாவுக்கு ஏற்படக்கூடிய துன்பங்கள் யாவை ?
2. எந்திரம் சர்க்காவினிடத்தில் தொழிலாளர் குறையைப் போக்க எந்தெந்த முறைகளைக் கையாளக் கூறியது ?

**பயிற்சி :**

1. 'எந்திரமும் கைத்தொழிலும்' என்னும் தலைப்புக் கொடுத்து ஒரு கட்டுரை எழுது,
2. ஆட்டோ ரிக்ஷாவும், கை ரிக்ஷாவும் உரையாடுவது போல ஒரு வியாசம் எழுது.

**இலக்கணம் :**

## ஆகு பெயரும் வினையாலணையும் பெயரும்

'**நாடு** சிரிக்கிறது' என்பதன் பொருள் என்ன ? 'நாட்டில் உள்ளவர் சிரிக்கின்றனர்' என்பதுதானே உண்மைப் பொருள் ? ஆகவே, நாடு என்னும் **இயற்பெயர்** அதனோடு இயைபுடைய மக்களுக்கு ஆகி வந்தால், இதனை **ஆகுபெயர்** என்று இலக்கணம் கூறும்.

**'வந்தான்'** என்பதற்கும், **'வந்தானை'** என்பதற்கும் என்ன வேறுபாடு இருக்கிறது? வந்தான் என்பது வினைமுற்று. வந்தானை என்னும் போது வினைமுற்று வேற்றுமை உருபை ஏற்று, வந்த மனிதனைக் குறிக்கிறதல்லவா? இவ்வாறு, வினைமுற்று, பெயர்த்தன்மையடைந்து, வேற்றுமை யுருபை ஏற்று வந்தால், அதனை **வினையாலணையும் பெயர்** என்பர்.

**பயிற்சி :**

1. **உலகம்** போற்றும், பணிபுரிபவர், அமர்ந்தவர்களுக்கு, **நீலம்** சூடினள், **வெள்ளையை** வண்டியில் கட்டு, **வறுவல்** உண்டாயா? **தலைக்கு** ஓர் அணா கொடு. **கெடுவான்** கேடு நினைப்பான், இவற்றுள் வினையாலணையும் பெயர் ஆகுபெயர் இன்ன எனக் காரணத்துடன் கூறு.
2. வினையாலணையும் பெயர்க்கும் ஆகுபெயர்க்கும் தனித்தனி மும்மூன்று உதாரணம் எழுது.
3. படி, செய், ஓடு—இவ்வினைச்சொற்களை அடிப்படையாகக் கொண்டு, வினையாலணையும் பெயர்களை எழுதிக்காட்டு.

# 7. சித்திரம்

1. கல்வியிற்சிறந்த கம்பர், கலை மகளை 'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் ஏய உணர்விக்கும் என்னம்மை' என்று ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுளிலிருந்து கலைகள் அறுபத்து நான்கு என்பது திட்டமாகத் தெரிகிறது. அவ்வறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றே சித்திரக்கலை என்பது. இச்சித்திரம் பல வேறு நிறங்களின் துணைக்கொண்டு சுவர்களிலும் காகிதங்களிலும் தீட்டப்படுவதாகும். சித்திரம் எழுத நல்ல பயிற்சி பெறுதல் வேண்டும். இதனாலேதான் 'சித்திரமும் கைப்பழக்கம்' என்று நம் தமிழ் மொழி குறிப்பிடுகிறது. இனி இச்சித்திரத்தின் சிறப்பியல்புகளைச் சிறிது கவனிப்போம்:

2. சித்திரக்கலை பல விதத்திலும் சிறப்புடையது என்னலாம். இது அழகிய தோற்றத்தால் இன்பத்தை ஊட்டவல்லது; இயற்கைக் காட்சிகளை எடுத்துக் காட்டுவது. நேரில் பார்க்கக் கூடிய பொருளையும் சித்திரத்தில் பார்க்கும் போது அப்பொருள் தன்பால் அமைந்த இயற்கை அழகிலும் மிஞ்சிய அழகுடையதாய்க் காணப்படுகிறது. இக்கலை பல சத்திகளை வளர்க்கும் பேராற்றல் பெற்றதுமாகும். இதனுல், ஞாபக சத்தி, கற்பனுசத்தி. அனுமான சத்தி முதலிய சத்திகள் வளர்கின்றன. 'சித்திரமும் கைப்பழக்கம்' என்னும் முதுமொழிக்கிணங்க, இதனைத் தீட்டும் பயிற்சியில் இறங்கினுல், இதன் மூலம் கையிலுள்ள நரம்புகளுக்கு வலிமை ஏற்படுகிறது; ஒழுங்கு முறை, தெளிவு, அழகு முதலிய தோன்ற எழுத வேண்டும் என்னும் ஊக்கம் எழுகின்றது; பொருள்களைக் கூர்ந்து கவனிக்க வேண்டும் என்னும் எண்ணமும் உண்டாகிறது. சித்திரக்காரன் எழுதும் சித்திரம், மக்கள் வடிவமே அன்றி, மாவும் புள்ளும் மற்றும் பல உயிருள்ள பொருள்களின் உருவங்களும் ஆதலின், அப்பொருள்களின் மீது இரக்க உணர்வும் தோன்ற இக்கலை துணை செய்கிறது. பல பொருள்கள் இப்பொழுது நாம் காணுதற்கு இல்லாமல் இருக்கலாம். ஆனுல், அவை சித்திரங்களில் தீட்டப்பட்டிருந்தால், அவற்றின் மூலத்தை உணர்ந்து இன்புறலாம். பண்டைய நாகரிகம் பலவற்றை அறிதற்கு இதுவும் ஒரு துணைக்கருவியாகும். சித்திரக்கலை தன்னைப் பயின்றவரைச் சும்மா இருக்க விடாது. பல புதிய பொருள்களைத் தேடிக் கண்டு, அவற்றையும் சித்திரத்தில் அமைக்கத் தூண்டிக் கொண்டே இருக்கும். சொல்லால் புரிய வைக்க இயலாதவற்றை மனத்தில் எளிதில் சித்திரத்தின் மூலம் புரியச்செய்து, பதிய வைக்கலாம். இதனுலேதான் இளைஞர்களாகிய உங்கட்குச் சித்திரங்கள், பாடத்தில் மிகுதியாக அமைக்கப்பட்

டுள்ளன. வாணிபம் பெருகுதற்கும் இச்சித்திரமே பயன்படு கிறது. இன்னமும் இதன் பெருமையும் அருமையும் பலவாய் அமைந்து இருக்கின்றன.

3. இன்னோரன்ன பெருஞ்சிறப்பு வாய்ந்த கலையாய் இது இருப்பதனாலேதான், இதனை எந்நாட்டவரும் விரும்பிக் கற்றுப் பயனடைந்து வருகின்றனர். இக்கலை மேனாடுகளில் சிறப்பாகவே போற்றப்பட்டு வருகிறது என்றுகூடக் கூற லாம். மேல் நாட்டவர் தீட்டும் சித்திரங்களுக்கும் நம்மவர் வரையும் சித்திரங்களுக்கும் சிறிது வேறுபாடுண்டு. மேற்கு நாட்டவர் அச்சித்திரத்தில் உண்மை வடிவை அப்படியே எழுத முற்படுவர். அதனால், பார்ப்பவருக்கு இன்பம் தாராது போயினும், அது குறித்துக் கவலைப்பட மாட்டார்கள். அவர் கட்கு வேண்டுவது உண்மை வடிவம் அதில் தீட்டப்பட்டிருக் கிறதா என்பது மட்டுந்தான். ஆனால், நம் சித்திரக்காரர் களோவெனின், உண்மை வடிவத்தைச் சித்திரத்தில் தீட்டு தலோடு, தம் கைத்திறத்தால் பார்ப்பவர் உள்ளம் கவரும் வகையில், சிறிது செயற்கையையும் இணைத்துத் தீட்டுவர். அப்பொழுது அவர்கள் உத்தி, வன்மை யாவும் அதில் காணப் படும்.

4. இத்துணைச் சிறப்பு இச்சித்திரத்திற்கு இருப்பதாலே தான், ஆலயங்களிலும் பெரிய பெரிய மாடங்களிலும் இச் சித்திரங்களைத் தீட்டி வைக்கின்றனர். கோவில் சித்திரங்களின் அழகைக் காண விரும்புபவர், மதுரை, தஞ்சாவூர், சிக்கல், திருவிடைமருதூர் போன்ற இடங்களுக்குச் சென்று காண் பார்களாக. சென்னையில் வாழ்பவர் கந்த கோட்டத்திற்குச் சென்றாலும், சுவர் முழுமையும் சித்திரங்கள் அமைந்து சிறப் பினைத் தருவதை நன்கு உணரலாம். வீடுகளில் சித்திரங்கள் வரையப்பட்டிருந்தது என்பதைப் பழைய நூல்களில் கூறப் பட்டிருப்பதிலிருந்து உணர்ந்துகொள்ளலாம்.

5. மதுரையில் ஒரு மாளிகையின் சுவரில் புலி காட்டில் உலவுவதைப் போலத் தீட்டப்பட்ருடிந்ததாம். அம் மாளிகை வழியே ஒரு யானை, தன் மீது ஒரு மாதினை ஏற்றிக் கொண்டு சென்றதாம். சென்ற அக்களிறு சித்திரத்தில் தீட்டப்பட்ட கொடுவரியின் தோற்றத்தைக் கண்டு, அது உயிருள்ள புலியென்றே எண்ணிப் பிளிறத் தொடங்கியதாம். இதனை அறிந்த ஆடவன் ஒருவன் அக்கைம்மாவினைப் புலிச் சித்திரத்தின் தோற்றத்தைக் கடந்து ஓட்டிச் சென்றானும். இதனால், சித்திரம் உயிருள்ள பொருள் போலவே தீட்டப் படும் என்பது தெரிகிறதல்லவா? இவ்வாறு **பரிபாடல்** என்னும் சங்க நூல் கூறுகிறது. சித்திரங்கள் அழகுடன் கம்பீரமும் நிறைந்து எல்லாருடைய மனங்களையும் ஈர்த்துத் தம்பால் ஒன்றச் செய்யும் இயல்புடையன என்பது புலனாகிறதன்றோ? இத்தகைய சித்திரக்கலையினை நீங்கள் பயில முந்துங்கள். இது எளிதில் பயிலக்கூடிய கலையே. இதற்குக் கைப்பழக்கந்தான் மிகுதியும் தேவை. **'சித்திரமும் கைப்பழக்கம்'** என்பது நாட்டு அனுபவமொழியன்றோ?

### அருஞ்சொற்பொருள் :

சுதை–சுண்ணும்பு, தீட்டப்படுவது-எழுதப்படுவது, வடிப்பது - அமைப்பது, மிஞ்சிய–மிகுந்த, ஆற்றல்-வல்லமை, அனுமானம்-யூகித்து அறிதல், ஊக்கம்-முயற்சி, புள்-பறவை, மா-விலங்கு, களிறு-யானை, கொடுவரி-புலி, ஈர்த்து-இழுத்து.

### கேள்விகள் :

1. சித்திரக்கலையால் ஏற்படும் நன்மைகள் யாவை ?
2. நம் நாட்டுச் சித்திரக்கலைக்கும் மேல் நாட்டுச் சித்திரக்கலைக்கும் உள்ள வித்தியாசம் யாது ?
3. சித்திரக்கலையைக் கற்பதனால் எந்தெந்தச் சத்திகள் உண்டாகின்றன ?

**பயிற்சி :**

1. சித்திரங்கள் அமைந்த திருக்கோவில்கள் சிலவற்றைக் குறிப்பிடு.
2. பழங்காலத்தில் பெரிய பெரிய வீடுகளில் சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்தன என்பதற்கு ஓர் உதாரணம் கூறு.

**இலக்கணம் :**

## வேற்றுமையும் அதன் பொருளும்

'**கந்தன்** வந்தான்'—இதில் கந்தன் முதல் வேற்றுமையல்லவா ? இம்முதல் வேற்றுமை இவ்வாக்கியத்தில் எழுவாயாகத்தானே நிற்கிறது ? ஆகவே, முதல் வேற்றுமை எழுவாய்ப் பொருளைத் தரும் என அறிக. இதற்குக் **கருத்தாப்பொருள் வேற்றுமை** என ஒரு பெயருமுண்டு.

அரசன் **கோவிலைக்** கட்டினன். கோவிலை என்னும் சொல்லில் இரண்டாம் வேற்றுமை உருபான, ஐ இருக்கிறது. இது இங்கு ஆக்கல் பொருளில் உள்ளது, ஆகவே, இரண்டாம் வேற்றுமைக்கு ஆக்கல் முதலிய பொருள்கள் உண்டென அறிக.

'**வாளால்** வெட்டினன்' என்னும் முற்றுத்தொடரில் மூன்ரும்வேற்றுமையான **ஆல்** வந்துளது. இது வெட்டுதற்குக் கருவியாகிய வாளோடு வந்திருத்தலின், கருவிப்பொருள் காட்ட வல்லதாம். இது போலவே, 'அவனுடன் நான் சென்றேன்,' என்று கூறும்போது **உடன்** என்னும் உருபு உடன் நிகழ்ச்சிப் பொருளில் நிற்றலைக் காண்க. எனவே, மூன்ரும் வேற்றுமைக்குக் கருவிப் பொருளும் உடனிகழ்ச்சிப் பொருளும் பொருள்களாகும்.

'ஏழைக்குச் சோறு போட்டான்.' நான்காம் வேற்றுமை உருபு '**கு**' என்பது உங்களுக்குத் தெரிகிறதல்லவா ? இவ்வுருபுக்குக் கொடை, பகை முதலிய பொருள்கள் உண்டு.

**பயிற்சி :**

1. இப்பாடத்திலிருந்து முதல் வேற்றுமை. இரண்டாம்வேற்றுமை, மூன்ரும் வேற்றுமை, நான்காம் வேற்றுமை உருபுகளை ஏற்ற சொற்களாகத் தனித்தனி நான்கு உதாரணங்களை எடுத்துக் காட்டி, அவை எந்தப் பொருளில் வந்துள்ளன என்பதையும் குறிப்பிடு.

2. உடன் நிகழ்ச்சிப் பொருள், ஆக்கப் பொருள், கருவிப் பொருள், எழுவாய்ப் பொருள், பகைப் பொருள் ஆகிய இவற்றிற்குத் தனித்தனி இரண்டிரண்டு உதாரணம் கொடு.
3. மகாபலி வாமனனுக்கு இரண்டடி மண் கொடுத்தான். தச்சன் மேசையைச் செய்தான். என்னேடு வந்த நாய்—இங்குக் காட்டப்பட்ட வேற்றுமை உருபுகள் எவ்வெப்பொருளில் வந்துள்ளன ?

# 8. ஜகதீஸ் சந்திர போஸ்

1. நம் நூல்கள் பிறப்பு வகையை ஏழாகப் பிரித்துக் கூறுகின்றன. அவை தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்பன. 'எழுபிறப்பும் தீயவை தீண்டா,' என வள்ளுவரும் கூறியுள்ளார். ஊர்வன என்பன பாம்பு, பல்லி முதலியன. நீர் வாழ்வன தவளை, மீன், முதலை முதலியன. பிற பிறப்புக்களைப் பற்றிக் கூற வேண்டுவது இல்லை. அவை உங்கட்கு நன்கு தெரிந்தவையே.

2. இப்பிறவிகளின் அறிவு ஒரு படியாக இல்லை; பல வகையாய் உள்ளன. தாவரங்கட்கு மெய் உணர்ச்சியாகிய ஊற்றுல் அறியும் அறிவும்; நத்தை, சிப்பி முதலியவற்றிற்கு மெய்யறிவுடன் நாவறிவாகிய சுவையறிவும்; கறையான், எறும்பு முதலியவற்றிற்கு மெய் அறிவும், நாவறிவும், மூக்கால் அறியும் மண அறிவும்; தும்பி, நண்டு முதலியவற்றிற்கு மெய்யறிவு, நாவறிவு, மூக்கறிவுடன், கண்ணுல் பார்த்தறியும் கண்ணறிவும், தேவர், மக்கள், விலங்கு, பறவை முதலியவற்றிற்கு மெய்யறிவு, நாவறிவு, மூக்கறிவு, கண்ணறிவுடன், செவியறிவாகிய கேட்கும் அறிவும் பொருந்தியுள்ளனவென நம் முன்னேர் நன்கு உணர்ந்து கூறியிருக்கின்றனர். இவற்றுள் தாவரமாகிய மரஞ்செடி கொடிகட்கு

மெய்யறிவு உண்டு என்பதை விளக்கிக் காட்டவே இப்பாடம் அமைந்தது.

3. நம் முன்னோர் எவற்றையும் கூடமாகக் கூறிச் சென்றுள்ளனர். அவ்வுண்மைகளை விஞ்ஞான முறைப்படி விளக்கிக் காட்டியவர்கள் இக்கால விஞ்ஞான நிபுணர்கள் ஆவார்கள். அவர்களுள் தாவரங்களும் உறங்குகின்றன



என்பதைக் காட்டியவர் **சர். ஜகதீஸ் சந்திர போஸ்** என்னும் பெரியார் ஆவார். இவர்தாம் உலகில் எங்கும் இது வரை எவரும் கண்டறியாத தாவர சாஸ்திர நுட்பங்களைக் கண்டறிந்தவர். இவர் பிறந்த இடம் நம் இந்தியாவில் வங்க மாகாணத்தில் **பிக்ரம்பூர்** என்பது. இவர் பிறந்த காலம்,

1858-ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 30-ஆம் நாள். இவர் தந்தையார் **பகவன் சந்திர போஸ்** என்பவர்.

4. ஜகதீஸ் சந்திர போஸ் இளமை முதற்கொண்டே ஊக்கமும் நுண்ணறிவும் கொண்டு விளங்கினர். இக்குறிகள் இவர் பிற்கால வாழ்வில் தலை சிறந்த பேரறிஞராக உலகம் போற்றும் நிலைக்கு வருவார் என்பதை விளக்கி நின்றன. இவர் கல்கத்தாவில் **செயிண்டு சேவியர்** கல்லூரியில் பயின்று, **பி. ஏ.** பட்டமும் பெற்றார். இவருக்கு இளமையிலிருந்தே இயற்கைத் தத்துவவுணர்ச்சியில் ஈடுபாடு இருந்து வந்ததால், இவர் இலண்டன் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து இயற்கைத் தத்துவ அறிஞர் பெறக்கூடிய **பி. எஸ்ஸி.** பட்டத்தையும் 1885 ல் பெற்றார். இவர் இலண்டன் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்றுத் திரும்பியதும், கல்கத்தாவிலேயே மாகாணக்கல்லூரியில் பூத பௌதிக சாஸ்திரப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார்.

5. அத்தொழில் இவர் செய்யும் ஆராய்ச்சிக்குப் பெருந்துணையாய் இருந்தது. இவர் பல சாஸ்திர உண்மைகளைக் கண்டறிந்து, அவற்றைப் பத்திரிகைகளில் வெளியிட்டு வந்தார். இதனால், இவருடைய பெயரும் புகழும் பெரிதும் பரவலாயின. இவருடைய பரந்த இயற்கைத் தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியைக் கண்டு வியந்த இலண்டன் சர்வ கலாசாலை, **டாக்டர் ஆப் ஸயன்ஸ்** என்னும் பட்டமாகிய **டி. எஸ்ஸி.** என்னும் பட்டத்தைத் தந்து இவரைக் கௌரவித்தது. இவரை இவ்வாறு ஊக்கப்படுத்தவே, இவர் தம் ஆராய்ச்சிக்கு வேண்டிய கருவிகளைத் தாமே செய்யவும் தலைப்பட்டார். ஒருவர் ஒரு சமயம் இவரை நோக்கி, "இக்கருவிகள் எங்குச் செய்யப்பட்டன? இவ்வளவு நுட்பமாக உள்ளனவே!" என்று கேட்டபோது, "இவை என் தாய் நாட்டில் செய்யப்பட்டன,"

என்று விடை இறுத்தாராம். இதனால் இவருக்கு இருந்த நாட்டுப் பற்று வெளியாகிறதல்லவா?

6. மின்சார அலைகளைப் பற்றி ஆராய்ந்தவர் மூவர். ஒருவர் ஆங்கிலேயர்; இன்னொருவர் அமெரிக்கர்; மூன்றும் அறிஞர் நம் இந்தியரான போஸ் பெரியார். இம்மூவரும் செய்த மின்சார அலைகளின் ஆராய்ச்சியில் வெற்றி பெற்றவர், நம் போஸ் பேரறிஞரே. இது நமக்கு ஒரு பெருமை அல்லவா?

7. போஸ் கண்ட ஆராய்ச்சிகள், தாவரங்கட்கும் விலங்குகட்கும் நரம்புத் தொடர்பு ஒன்றே என்பதும், மரத்து வாழ்க்கையும் மனித வாழ்க்கையை ஒத்தே காணப்படுகின்றது என்பதும், மரங்களும் உறங்குகின்றன, விழித்துக் கொள்கின்றன என்பதும் ஆகும். இவர் கண்ட முறைப்படி மரங்கள் இரவு பன்னிரண்டு மணிக்குத் தூங்கத் தொடங்குகின்றனவாம்; மீண்டும் காலை எட்டு மணிக்கு எழுந்து விடுகின்றனவாம்.

8. மரங்கள் உறங்குகின்றன என்பது தெரிய வேண்டுமானால், தூங்கு மூஞ்சி மரத்தைப்பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். இரவு நேரத்தில் அதன் இலைகளெல்லாம் மடங்கிக் காணப்படும்; பகல் நேரத்தில் நன்கு விரிந்து இலங்கும். மேலும், தாவரங்களுக்கு உணர்ச்சி உண்டு என்பதைத் தொட்டாற்சிணுங்கி என்னும் செடியிலிருந்தும் அறிந்துகொள்ளலாம். தொட்டவுடன் அச்செடியின் இலைகள் சுருங்கிக் கொள்ளும்; சிறிது நேரத்திற்கெல்லாம் அச்சுருக்கத்தைப் போக்கிக்கொண்டு செழித்துக் காணப்படும். இவை போன்ற பல தாவர நுட்பங்களை மின்சாரத்தின் உதவி கொண்டு விளக்கிக் காட்டியவர் ஜகதீஸ் சந்திர போஸ் ஆவார். அவற்றின் முறைகளை எல்லாம் மாணவர்கள் கல்லூரியில் தாவரங்

களைப் பற்றிச் சிறப்பறிவு பெறும் போது அறிந்துகொள்ள லாம். தாவரங்களும் உறங்குகின்றன என்பதை மட்டும் மனத்தில் இப்பொழுது வைத்துக்கொள்ளலாம்.

### அருஞ்சொற்பொருள்

மெய்-உடல், ஊற்றல் அறியும் அறிவு - சரீரத்தில் பிறர் தொட்ட போது உணரும் அறிவு, இப்பி-முத்துச் சிப்பி, நிபுணர்கள் - அறிவில் சிறந்த பெரியோர்கள், தத்துவம்-உண்மை, விடை இறுத்தார்-பதில் கூறினர், இலங்கும்-விளங்கும்.

### கேள்விகள் :

1. எழுவகைப் பிறவிகள் எவை ?
2. ஐவகை அறிவு எவை ?
3. ஜகதீஸ் சந்திர போஸ் எங்கு எப்போது பிறந்தார் ?
4. இவருக்கு எவ்வெப்பட்டங்கள் கிடைத்தன ?
5. இவர் வாழ்க்கை வரலாற்றில் நமக்குப் பெருமை தரும் இரு செயல்கள் எவை ?
6. இவர் கண்ட ஆராய்ச்சிகள் எவை ?
7. தாவரங்களைப்பற்றி இவர் கண்ட உண்மைகள் எவை ?

### பயிற்சி :

1. ஒன்று முதல் ஐந்து வரையில் அறிவு பெற்ற உயிர்ப் பொருள் களைக் குறிப்பிடு.
2. 'இவை என் தாய் நாட்டில் செய்யப்பட்டன'-இடம் குறி.
3. தமிழ் மொழியறிவில் டாக்டர் பட்டம் பெற்றவர் பெயரைக் குறிப்பிடு.
4. தாவரங்கட்கு உறக்கம் உண்டு, உணர்ச்சி உண்டு என்பதற்கு உதாரணம் கொடு.
5. போஸைப் போன்று விஞ்ஞான ஆராய்ச்சி செய்த இந்திய அறிஞர் இருவர் பெயர்களைக் குறிப்பிடு.

### இலக்கணம் :

## வேற்றுமையும் அதன் பொருளும் (தொடர்ச்சி)

மலையிலிருந்து இறங்கினன். இதில் இருந்து என்னும் உருபு ஐந் தாம் வேற்றுமையாகும். இவ்வுருபு நீங்கற்பொருளில் உள்ளது. இதற்கு

எல்லைப் பொருளும் உண்டு. சென்னையிலிருந்து தெற்குச் சிதம்பரம் என்னும் உதாரணத்தைப் பார்.

**'எனது புத்தகம்'** என்னும் தொடரில் **அது** ஆறும் வேற்றுமை உருபு. இதற்குரிய பொருள் உரிமைப்பொருள்.

**வீட்டில்** இருந்தான். **இல்** ஏழாம் வேற்றுமை உருபு. இது இடப் பொருளில் வரும்.

**கந்தா**, வா.—இது எட்டாம் வேற்றுமை. இது விளிக்கும் பொருளில் வரும்.

**பயிற்சி:**

1. இப்பாடப் பகுதியிலிருந்து 5, 6, 7, 8 - ஆம் வேற்றுமை உருபுகளை ஏற்ற பெயர்களுள் தனித்தனி மும்மூன்று எடுத்து எழுதி, அவற்றின் பொருளையும் எழுது.
2. எனது வீடு, சென்னையின் வடக்கு நெல்லூர், புலி காட்டில் வாழும், இராமா படி, - இவை எவ்வெவ்வுருபுகளைப் பெற்று எவ்வெப்பொருளில் வந்துள்ளன?
3. ஏழாம் வேற்றுமை இடப் பொருளுக்கும், ஐந்தாம் வேற்றுமை நீங்கற்பொருளுக்கும் இரண்டிரண்டு உதாரணம் கொடு.

# 9. சிலேடை மொழிகள்

1. ஒரு மொழியை நன்கு எழுத வேண்டுமானாலும், திருத்தமுறப் பேச வேண்டுமானாலும் இலக்கணப் பயிற்சி மிக மிக இன்றியமையாததாகும். இவ்விலக்கண அமைப்பு, தமிழ் மொழியில் செம்மையாய் அமைந்துள்ளது. இம் மொழியில் ஐந்து வகையாக இலக்கணங்களைப் பாகுபாடு செய்து அமைத்திருக்கின்றனர். அவ்விலக்கணங்கள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன. இவ் வைந்தினுள் காணப்படும் அணியிலக்கணத்தின் சிறு பிரிவே **சிலேடை** என்பது. சிலேடை என்பது ஒரு சொல்லோ, தொடரோ, ஒன்றுக்கு மேற்பட்ட பொருளைச் சமயத்திற்கேற்ப அறிவிப்பதாகும். 'அதிவீரராமபாண்டியர் அரசு புரிந்து வந்த காலத்தில், **கவிகை** தாங்கினர் எல்லாம் **கவிகை** தாங்கினர்,'

என்று சிறப்பித்துக் கூறிய தொடரில் இந்தச் சிலேடையணி பொருந்தி இருப்பதைப் பாருங்கள். முதலில் காணும் 'கவிதை தாங்கினர்' என்னும் தொடர், 'குடையைத்தாங்கினர்' என்னும் பொருளிலும், அதே தொடர் அடுத்தபடி கவியைக் (பாட்டுக்களைக்) கையில் தாங்கினர் என்னும் பொருளிலும் அமைந்து, 'அரசாங்கத்தில் குடை பிடிக்கும் பணியை மேற் கொண்டவர் சிறந்த கவிஞர் ஆயினர்,' என்பதை எவ்வளவு அழகுற அறிவுறுத்திக் காட்டுகிறது! இத்தகைய சொற்களையும் தொடர்களையும் படிக்குந்தோறும் கழிபேரின்பம் தோன்றும். இன்னோரன்ன சிலேடைச் சொற்களும், தொடர்களும் தமிழ் மொழியில் பலவாகும். அவற்றுள் ஒன்றை இங்கு எடுத்துக் காட்டுவோம். அது சர். முத்துசாமி ஐயர் அவர்களும், பூண்டி அரங்கநாத முதலியார் அவர்களும் பேசிக்கொண்ட நகைச்சுவை ததும்பும் சொல்லேயாகும்.

2. தம் முயற்சியால் முன்னுக்கு வந்த மிகமிகப் பெரியவர்களுக்குள் சர். தி. முத்துசாமி ஐயர் அவர்களும் ஒருவர். அவர் மிக ஏழ்மையான அந்தணக் குடியில் பிறந்த வர். அவர் தம் தந்தையாரை இளமையிலேயே இழந்தமை யால், அவர் தாயார் சில வீடுகளில் வேலை செய்து வயிறு வளர்க்க வேண்டியவராய் இருந்தார். முத்துசாமி ஐயர் இளமை முதற்கொண்டே கல்வியில் பெருவிருப்புடையவர். அதனால், ஓய்ந்த தம் நேரங்களை வீணாக்காமல் விடாது படித்துக்கொண்டே வந்தார். மாலையில் தெருவில் உள்ள விளக்குக் கம்பத்தின் அடியில் படித்து வந்தாரென்றால், அவருக்கு இருந்த படிப்பின் அவாவை என்னென்று கூறு வது! இப்படி அவர் படித்து வந்ததாலேதான், உயர்ந்த பதவியைப் பெற்றார்; சிறந்த நீதிபதியாய்த் திகழ்ந்தார். அவருடைய விடாமுயற்சி இளைஞர்கட்கு ஒரு சிறந்த எடுத்துக்

காட்டாகும் என்பதற்காக அன்ரே அவருடைய உருவச்சிலே, சென்னே உயர்நீதி மன்றத்தில் நடுநாயகமாய் நின்று இன்னமும் காட்சியளித்து வருகின்றது? நல்ல உயர்ந்த சலவைக் கல்லாலாகிய வடிவம் அன்ரே அங்குச் சமைத்து வைக்கப் பட்டுள்ளது?



பூண்டி அரங்கநாத முதலியார்

3. அத்தகைய பெருமை வாய்ந்த சர் முத்துசாமி ஐயர் அவர்கட்கும், **பூண்டி அரங்கநாத முதலியார்** என்னும் பெரியாருக்கும் நெருங்கிய நட்புண்டு. பூண்டி அரங்கநாத முதலியார் ஆங்கில மொழியிலும், அருங்கணிதத்திலும் தலே சிறந்த புலமை வாய்ந்தவர்; இவற்ரேடு தண்டமிழிலும் இலக்கிய

இலக்கணங்களைக் கற்றுத் தேர்ந்தவர். இவரது தமிழ் அறிவை இவர் பாடியுள்ள கச்சிக்கலம்பகம் என்னும் அரிய நூலிலிருந்து நன்கு நாம் அறிந்துகொள்ளலாம். இவர் சென்னை அரசியற்கல்லூரியில் பேராசிரியர் தொழிலைச் சிறப்புடன் நடத்தியவர்; மாணவர்களிடத்தில் பேரன்பு கொண்டவர். இவர்க்கு இன்னர் இனியார் என்னும் வேற்றுமை இல்லை. இவர் கல்வியில் விருப்பங்கொண்டு நுண்ணறிவுடன் பயிலும் மாணவன் ஏழ்மையுடையவனானால், அவனுக்குத் தம் சொந்த வருவாயில் பணம் உதவிப் படிக்க வைக்கும் இயல்பு வாய்ந்தவர். இவர் ஒரு நாள் தம் வகுப்பில் தினமும் பயின்று வரும் மாணவன் ஒருவன், தொடர்ந்து சில நாட்கள் வாராமையை உணர்ந்தார்; அவன் வாழும் இல்லத்தை நாடிச் சென்றார்; அவன் வாராமைக்குரிய காரணத்தைக் கேட்டார். அவன், "என் தந்தையார் திடுமென இறந்து போனதால், கல்லூரிப் படிப்பிற்குப் பணம் கட்ட முடியாமையால், வருவதற்கு இயலவில்லை," என்று கூறினன். இவர் அதைக்கேட்டு மனம் இளகி, அவன் பி. ஏ. பட்டம் பெறுகின்ற வரையில் தம் பணத்தைக் கொடுத்து உதவி செய்து வந்தாரெனில், இவருடைய உதாரகுணத்தை என்னென்று உரைப்பது!

4. இத்தகைய ஈகைக்குணம் வாய்ந்த முதலியாரும், நடுவு நிலைமை தாங்கிய ஐயர் அவர்களும் பொழுது போக்குக்காகப் பல கழகங்களில் உறுப்பினராய் இருந்தனர். அவற்றுள் ஒன்று சென்னை மவுண்டுரோடில் உள்ள காஸ்மாபாலிட்டன் கிளபு என்பது. ஆங்கு ஒரு நாள் நிகழ்ந்த சம்பவந்தான் நகைச்சுவைக்குரிய நிகழ்ச்சியாகும்.

5. ஒரு நாள் பூண்டி அரங்கநாத முதலியார் தம்மை ஒத்த நண்பர்களுடன் குதூகலமாக உரையாடிக்கொண்டிருந்தார். அந்த நேரத்தில் சர். தி. முத்துசாமி ஐயர் அங்கு வந்தனர்.

அவர் வரும் பொழுது அவர் கண்ணுக்கு எதிரே காட்சி யளித்தவர் முதலியார் ஆவர். உடனே, ஐயரவர்கள் தம் இரு கைகளையும் கூப்பி, "முதலியாரே, **அடியேன்,**" என்றனர். அப்படிச் சொன்ன போது ஐயரின் இடக்கையில் வளைதடி தொங்கிக்கொண்டிருந்தது. உடனே, முதலியார் ஐயரைப் பார்த்து, "அப்படியானல், உம் கையில் **தடியேன்?**" என்று



சர். தி. முத்துசாமி ஐயர்

கேட்டனர். அங்கிருந்தவர் யாவரும் கொல்லென நகைத்தனர். சர். தி. முத்துசாமி ஐயருக்கும் நகை தாங்க முடியவில்லை. சிறிது நேரம் கிளபு முழுமையும் ஒரே சிரிப்பு மயமாய்விட்டது.

6. ஒரு சிலர் காரணம் தெரியாமலே சிரிக்கத் தொடங் கினர். "எல்லாரும் நகைக்கையில் நாமும் நகைக்காமல் இருத்தல் ஒழுங்காயிராது," என்பதற்காக அவர்கள் நகைத் தார்கள். என்ருலும், காரணத்தை மட்டும் அறிந்துகொள்ள வேண்டுமென்பது அவர்கட்கு எண்ணம். ஒருவர் மெல்லத்

தம் பக்கத்தில் இருந்தவரை உசாவினர். அங்கிருந்தவர், தம்மைக் கேட்ட நண்பரைப் பார்த்து, "ஒன்றுமில்லை. நம் நீதிபதி ஐயர் தமக்கும் முதலியாருக்கும் இருக்கும் நெருங்கிய நட்புரிமை காரணமாகப் பணிமொழியில் 'அடியேன்' என்று கூறினர். அதனை முதலியார் உணர்ந்திருந்தும், அம்மொழியைக்கொண்டு சிறிது வேடிக்கை பண்ண வேண்டும் என்பதற்காக, 'நீங்கள் என்னை அடிக்க மாட்டேன் என்று கூறுகிறீர்களே! அவ்வாறிருக்க, உங்கள் கையில் ஏன் தடியை வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்பார் போல, 'தடியேன்?' என்றனர். இதுதான் இத்துணைச் சிரிப்புக்கும் காரணம்," என்றனர்; இந்த விளக்கத்தைக் கேட்ட நண்பர்கள் மேலும் மேலும் நகைக்கத் தொடங்கினர்கள்.

7. நல்லறிஞர்கள் பேச்சில் இன்னோரன்ன பொருள் பொதிந்த நகைச்சுவைத் தொடர்கள் பல காணப்படும். புலவர்கள் பாடிய சிலேடைக் கவிகள் பல. அவற்றிலும் இத்தகைய சுவை எண்ணிறந்தனவாகும்.

### அருஞ்சொற்பொருள் :

யாப்பு-பாட்டை எவ்வாறு எழுத வேண்டும் என்பதை அறிவிக்கும் இலக்கணம், பணி-வேலை, கழிபேரின்பம்-மிகப்பெரிய இன்பம், நீதி மன்றம்-நியாயத் தீர்ப்பளிக்கும் சபை (கோர்ட்டு), புலமை-அறிவு, ஏழ்மை-வறுமை, முகவரி-விலாசம், இல்லம்-வீடு, உதார குணம்-தாராளமாகக் கொடுக்கும் குணம், குதூகலம்-மகிழ்ச்சி, உசாவினர்-கேட்டார், பணிமொழி-வணக்கமான வார்த்தை, எண்ணிறந்தன-மிகப்பல.

### கேள்விகள் :

1. ஐந்து இலக்கணங்கள் எவை ?
2. சர். தி. முத்துசாமி ஐயர் எங்ஙனம் முன்னுக்கு வந்தனர் ?

3. பூண்டி அரங்கநாத முதலியார் தாராளமான மனமுடையவர் என்பது எதனுல் தெரிகிறது ?
4. ஐயரும் முதலியாரும் எவ்வாறு பேசிச் சிரிப்பை உண்டாக்கினர் ?

**பயிற்சி :**

1. கவிகை தாங்கினர். இத்தொடருக்கு இரு பொருள் கூறு :-
2. கச்சிக் கலம்பகம், சிலேடை, யாப்பு-இவற்றைப் பற்றிச் சிறு குறிப்பு எழுது.

**இலக்கணம் :**

## உடன்பாடும் எதிர்மறையும்

**'வந்தான்'** என்னும் வினைக்கும், **வந்திலன்** என்னும் வினைக்கும் வேறுபாடு யாது ? **வந்தான்** என்பது செயல் நடந்தமையையும், **வந்திலன்** என்பது செயல் நடவாமையையும் அறிவிக்கின்றன. நடக்கும் தொழிலை அறிவிப்பது, **உடன்பாட்டு** வினை; நடவாமையை அறிவிப்பது **எதிர்மறை வினை.**

**பயிற்சி :**

1. எழுத வேண்டும், அமைந்துள்ளது ,அறிவிப்பது, தாங்கினர், பாருங்கள், மேற்கொண்டவர், கவனியுங்கள், தருவது, காணப்படும், பேசிக்கொண்ட, பாட்டுச்சொல், வாராமை, இயலாமையால், தாங்க முடியவில்லை, நகைக்காமல், இல்லை, அடிக்க மாட்டேன்—இவற்றுள், உடன்பாட்டையும் எதிர்மறையையும் அறிவிக்கும் சொற்களை எடுத்து எழுதி, பிறகு எதிர்மறைச் சொல்லுக்கு உடன்பாடும், உடன்பாட்டுச் சொல்லுக்கு எதிர் மறையும் கூறு.
2. எதிர்மறை வினைக்கும் 'உடன்பாட்டு வினைக்கும் ஐந்தைந்து உதாரணங்களை எடுத்துக் காட்டு.

# 10. வடதுருவ மண்டலம்

1. விண்ணில் எண்ணில் அடங்காத மீன்கள் ஒளி விட்டுக்கொண்டிருக்கின்றன. அவை பகற்போதில் பரிதியின் பேரொளியில் மறைந்துள்ளதால், நம் கண்ணுக்குத் தோன்ருமல் இரவில் மட்டும் காட்சி அளிக்கின்றன. அவ்விரவிலும் விசும்பு மேகப்படலத்தால் மூடப்படாமல் உள்ள போதுதான் தோற்றம் அளிக்கும். இங்ஙனம் பகற்போதில் தென்படாமல் இரவுப்பொழுதில் விளக்கந்தந்து மின்னிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்கள் அனைத்திற்கும் சிறப்புக் கூறுதற்கில்லை. அவை நூல்களிலும் பெருமையாகப் பேசப் படுவன அல்ல. அப்பல்கோடித் தாரைகைகட்குள் ஒரு சிலவே அறிஞர்களின் கருத்தைத் தம்பால் ஈர்த்துத் தம்மைப் பற்றிப் பேசுமாறு தூண்டி நிற்கின்றன. அப்படி அமையும் உடுக்களுள் துருவ நட்சத்திரமும் ஒன்று. அத்துருவ நட்சத்திரத்திற்கு நேரேயுள்ள மண்டலம், 'துருவ மண்டலம்' என்பது. அதுவே உலகின் வடமுனை. அதனை 'நார்த்போல்' என ஆங்கிலத்தில் கூறுவர். அதனைக்கண்டு அதன் நிலையை அறிந்தவர் வரலாற்றை ஈண்டுக் கற்போம்:

2. வடதுருவமும் ஒரு பிரதேசமேயானாலும், அப்பிரதேசத்தில் நாம் தினந்தோறும் கண்டு வரும் இரவையும் பகலையும் காண முடியாது; ஓர் ஆண்டில் ஆறு மாதம் பகலாகவே இருக்கும்; மிகுந்த ஆறு திங்கள் இரவாகவே இருக்கும். இப்படி இருந்தால், அப்பிரதேசத்தில் புல் பூண்டுகளோ, புள் விலங்குகளோ, மக்கள் தொகுதியோ நிலையாக வாழ முடியுமா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். அப்பிரதேசத்தில் எங்கும் பனிக்கட்டிகள் உறைந்தே காணப்படும்.

3. இத்தகைய துருவப் பிரதேசத்தை நேரில் கண்டு, அங்குள்ள இயல்பை அறிய ஐரோப்பியர்களும் அமெரிக்கர்

களும் முயன்று வந்தார்கள். இம்முயற்சி எளிய முயற்சி அன்று; அரிய முயற்சி. இதனால், பல பொருட்செலவும் உயிர் இழப்பும் நேரிட்டன. என்றாலும், இவ்விருநாட்டு அஞ்சா நெஞ்சம் படைத்த வீரப் பெருமக்கள், தங்கள் முயற்சியைக் கைவிடவில்லை. இம்முயற்சியில் வெற்றி பெற்றவர் **பியரி** என்னும் பெயரிய அமெரிக்கர் ஆவர்.

4. பியரி வீரர், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நாவாய்ப் படையில் வேலை செய்து வந்தவர். அவர் புதுக்காடுகள், இடங்கள் முதலியவை கண்டு பிடிக்கப்பட்ட வரலாறுகளை அடிக்கடி படிப்பது வழக்கம். அவர், தமருக்கு முன் **நான்ஸென்** என்னும் தீர புருஷர் 1893-ஆம் ஆண்டு புறப்பட்டு, மூன்றாண்டுகள் முயன்று **கிரீன்லாந்து** பிரதேசம் கண்டு பிடித்த வரலாற்றினைப் படித்தார். அத்தகைய வரலாறு பியரி பெரியாரையும் மீண்டும் கிரீன்லாந்துக்குச் சென்று அப்பிரதேசத்தைக் கண்டு மீளத் தூண்டியது. அவர் 1899-ஆம் ஆண்டு தமக்குத் துணையாக ஒரு குழுவினைத் திரட்டிக்கொண்டு புறப்பட்டார். அவர் புறப்பட்ட வேளை நல்ல வேளையாய் இல்லை. இடைவழியில் அவருக்கு நோய் கண்டது. அதனால், அவர் அதற்குமேல் சென்றால் முயற்சி பயனற்றுப் போகும் என உன்னித் திரும்பிவிட்டார். நோய் நீங்கியது. என்றாலும், உடனே தம் பயணத்தை மேற்கொண்டிலர்; அடுத்த 1906-ஆம் ஆண்டு செல்லலுற்றார்; அச்செலவு வெற்றிகரமாய் முடிந்தது. கிரீன்லாந்தைக் கண்டார். தாம் கண்டவற்றை உலக மக்களுக்கு உணர்த்தினர். அதனால், அவருடைய பெயரும் புகழும் பரவலாயின.

5. இந்த வெற்றியால் பியரி தீரர் மன அமைதி உற்றிலர். எப்படியாவது வடதுருவ மண்டலத்தைக் காண வேண்டும் என்று எண்ணிக்கொண்டேயிருந்தனர். அவர்

எண்ணத்தை அறிந்த அமெரிக்கர் அவருக்கு ஊக்கம் அளித்து, அவர் வடதுருவம் காணுதற்கான வசதிகளையும் தந்தனர். சுடர்விளக்கானாலும் தூண்டுகோல் ஒன்று வேண்டு மல்லவா ? இவ்வாறு அமெரிக்கர் தமக்கு ஊக்கமும் ஆக்கமும் உதவவே, பியரி 1908-ஆம் ஆண்டு, ஜூலை மாதத்தில் நியூ யார்க்குத் துறைமுகத்திலிருந்து புறப்பட்டார். அவர் ஏறிச் சென்ற கலம் ரூஸ்வெல்ட்டு என்னும் பெயருடையது. அப் போது அவரை வழி கூட்டி அனுப்பியவர்கள் ஆயிரக்கணக் கான அமெரிக்கர்களும், ஐக்கியநாட்டுத் தலைவரான ரூஸ் வெல்ட்டும் ஆவார்கள்.

6. ரூஸ்வெல்ட்டுக் கப்பல் புறப்பட்ட சில தினங் களில் அவர் யார்க்கு முனையை அடைந்தார். அங்கு வாழ் பவர் எஸ்கிமோ இனத்தவர். பியரி, அவர்களுள் சில குடும் பத்தினரையும் இருநூற்றைம்பது நாய்களையும் தம் கப்பலில் ஏற்றிக்கொண்டு வடக்கு நோக்கி மேலும் பயணப்படலானார். அவர் செல்லாறுதோறும் பனிக்காட்டுப்பனி கப்பலைச் சூழ்ந்துகொண்டது. அதற்குமேல் செல்ல வேண்டா வென்று எண்ணி ஒரு நிலப்பகுதியில் அவர் இறங்கினார். அவ்விடத்தைச் சீர்படுத்தினார்; கப்பலில் இருந்த சாமான்களை இறக்கினார்; ஒரு சிறு கிராமத்தை உண்டாக்கினார்; தம்முடன் அழைத்து வந்த எஸ்கிமோ குடும்பத்தினரை அங்குக் குடி யேற்றினார்; அவ்விடத்தில் ஆறு மாதகாலம் தங்கினார். அங்கிருந்து மேலும் நானூற்றைம்பது மைல் சென்றால்தான் வடதுருவ மண்டலத்தை எட்ட முடியும்.

7. இவ்வளவு தூரம் பல இன்னல்களை அடைந்து, பனியைப் பாராமலும் மழையைக்கண்டு மனம் மாறாமலும் சென்ற பியரி, அந்த நானூற்றைம்பது கல் தொலைவையும் கடந்து போகாமல் இருப்பாரா ? ஆகவே, 1909-ஆம்

ஆண்டு, பிப்பிரவரித் திங்கள், 15-ஆம் நாள், அவர் தம் குழுவினருள் எழுவருடனும், எஸ்கிமோக்களில் 95 பேர் களுடனும், 150 நாய்களுடனும், 28 சகடங்களுடனும் தம் பயணத்தைத் தொடங்கினர். அவர்கள் தங்கள் கைவசத்தில் ஏறக்குறைய இரண்டு மாதங்களுக்குப் போதுமான உணவுப் பொருள்களைக் கொண்டிருந்தார்கள். அன்னமயம் பிராண மயம் அல்லவா? அன்னம் ஒடுங்கினுல் அனைத்தும் ஒடுங்கி விடுமே! ஆகவே, உணவையும் உடன் கொண்டு சென் ருர்கள்.

8. அவர்கள் கடந்து செல்ல வேண்டிய பிரதேசம், பனி உறைந்த பிரதேசம். அப்பனியிலேயே போய்க்கொண்டி ருந்தார்கள். சென்றவர்களுள் சிலர் கை கால் ஒடியப்பெற்ற னர்; சிலர் நோய்வாய்ப்பட்டனர். அவர்களை மேலும் அழைத் துப் போதல் அடாதென எண்ணிய பியரி, அவர்களை மீண்டும் தாம் புறப்பட்ட புதிய இடமாகிய கிராமத்தை அடைய ஏற்பாடு செய்துவிட்டனர். கடைசியில் அவருடன் நின்றவர்கள் நான்கு எஸ்கிமோக்களும், அவருடைய பணி யாளன் ஹென்ஸன் என்பவனும் ஆவார்கள். நாற்பது நாய் களும் உடன் இருந்தன. வண்டிகள் பல கிலமாகிப் போக, நல்ல நிலையில் இருந்தவை ஐந்தேயாகும். பலர் திரும்பிவிட்ட தால், உணவு மிகுதியும் செலவாகாமல், ஏறக்குறைய நாற் பது நாட்களுக்கு வரக்கூடிய அளவுக்கு மிகுந்து இருந்தது. இவ்வாருன கட்டத்துடன் ஒரு மாதகாலம் பயணப்பட்டு, முந்நூற்றுப்பதினேழு மைல்களைக் கடந்தனர். இன்னமும் கடந்து வடதுருவ மண்டலத்தைக் காண வேண்டிய தொலைவு நூற்று முப்பத்து மூன்று மைல்களாகும். இந்தத் தூரத்தை வெகு சிரமப்பட்டுக் கடக்க வேண்டியிருந்தது. தொடர்ந்து அவரால் நடந்து போக இயலவில்லை; சிறிது தூரம்

நடந்தார்; பிறகு உறக்கம் கொண்டு சிரமத்தைத் தீர்த்துக் கொண்டு மேலும் பயணப்பட்டார். இவ்வாறு சென்று, 1909-ஆம் ஆண்டு, ஏப்பிரல் மாதம், 6-ஆம் தேதி வட துருவத்தை அடைந்துவிட்டனர். ஆ! அப்பொழுது அவர் அடைந்த ஆனந்தத்தைச் சொல்லவும் வேண்டுமா! ஆடினர்; பாடினர்; தோள்களைத் தட்டினர்; துள்ளினர்; "இருபது ஆண்டுகளாக நான் கண்டு வந்த கனவு நனவாயிற்று!" என்று கூறி மகிழ்ந்தார். தம் மனைவியாரால் செய்யப்பட்டதும் அமெரிக்காவின் கொடி எழுதப்பட்டதுமாகிய பட்டுத் துணியை எடுத்து ஒரு கொம்பில் கட்டி வடதுருவத்தில் பனி மலைமேல் செருகினர்.

9. வீரபுருடர் பியரி, வடதுருவப் பிரதேசத்தில் நீண்ட காலம் தங்கியிருக்கவில்லை. எப்படித் தங்கியிருக்க முடியும்? அங்கு ஒரே பனிப் படலம். அவரிடமிருந்த உண வுப் பொருள்கள் யாவும் சுருங்கிப் போயின. "நாம் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றிவிட்டோம்! இனி நமக்கு இங்கு வேலையில்லை," என்று புறப்பட்டுத் தம் புதுக் கிராமத் தைப் பதினறு நாட்களில் சேர்ந்தார்.

10. அதன் பின் அவர் தம் தாய் நாடாகிய அமெரிக் காவை அடைந்தார். அப்பொழுது அவருக்கு அளிக்கப்பட்ட வரவேற்புக்கள் பலவாகும். அவர் பெருமை ஒலி பெருக்கியின் மூலம் உலகம் எங்கும் பரப்பப்பட்டுப் பாராட்டப்பட்டது. இத்தகைய பெரியார்களைச் 'செயற்கரிய செய்வார்' என்று கூறுவதில் தடையுண்டோ ?

**அருஞ்சொற்பொருள்:**

எண்ணில-கணக்கில்லாதவை, மீன்கள்—நட்சத்திரங்கள், பரிதி-சூரி யன், தாரகை-நட்சத்திரம், உடுக்கள்-நட்சத்திரங்கள். ஈர்த்து-இழுத்து. விண்ணில்-ஆகாயத்தில். விசும்பு—ஆகாயம், ஈண்டு-இங்கு, அறை

யின்-சொன்னால், புள்-பறவை, அரிய-கடினமான, இழப்பு-இழத்தல் (சேதம்), நாவாய்-கப்பல், குழுவினை-கூட்டத்தினை, உன்னி-நினைத்து, செலவு-பயணம், ஆக்கம்-உயர்வு, கலம்-கப்பல், செல்லாறு-செல்லும் வழி, இன்னல்கள்-துன்பங்கள், சகடங்கள்-வண்டிகள், நனவு-உண்மை.

### கேள்விகள் :

1. பியரி என்பவர் யார் ? அவர் எதைக் காண முயன்று வந்தார் ?
2. கிரீன்லாந்தைக் கண்டவர் யார் ?
3. தீரர் பியரிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தவர் யார் ?
4. பியரியுடன் சென்றவர் யாவர் ?
5. பியரி எப்பொழுது வடதுருவத்தில் தம் நாட்டுக் கொடியை நிலை நாட்டினார் ?

### பயிற்சி :

1. நட்சத்திரத்தைக் குறிக்கும் சொற்களை எடுத்து எழுது.
2. நட்சத்திரங்களைப் பற்றிச் சில வாக்கியம் எழுது.
3. ரூஸ்வெல்ட்டு, ஹென்ஸன்—குறிப்பு எழுது.
4. பியரியைப் போலச் செயற்கரிய செயலைச் செய்த ஒருவரது வரலாற்றைக் கேட்டு எழுது.

### இலக்கணம் :

## வலி மிகுமிடங்கள்

i. அ, இ, என்னும் சுட்டு எழுத்துக்கள், எ என்னும் வினா எழுத்து ஆகிய இவற்றோடு வல்லின மெய்யை முதலாகக் கொண்டசொற்கள் வந்து புணர்ந்தால், வந்த வல்லினம் மிகும். இச்சுட்டு வினா எழுத்துக்கள் அந்த, இந்த, எந்த எனத் திரிந்து நின்ற போதும் வந்த வல்லினம் மிகும். படி என்னும் இடைச்சொல்லைப் பெற்றுச் சுட்டு வினாக்கள் வரினும் வலி மிகும்.

| | | | |
|---|---|---|---|
| (1) | அ+பையன் | =அப்பையன் | சுட்டு வினாவுடன் வல்லினம் வர மிகுந்தது. |
| | இ+காடு | =இக்காடு | |
| | எ+தட்டு | =எத்தட்டு | |
| (2) | அந்த+பெட்டி | =அந்தப்பெட்டி | சுட்டு வினாக்கள் திரிந்த போதும் வலி மிக்கது. |
| | இந்த+தட்டு | =இந்தத்தட்டு | |
| | எந்த+பையன் | =எந்தப்பையன் | |

(3) அப்படி + சொல் = அப்படிச் சொல்
இப்படி + பார் = இப்படிப்பார்
எப்படி + தந்தாய் = எப்படித்தந்தாய்
} சுட்டு வினவுடன் படி வர வலி மிகுந்தது.

ii. **எலியைப்பிடி, விலேக்குக் கொடு** என்னும் தொடர்கள் முறையே இரண்டாம் வேற்றுமையைப் பெற்றும், நான்காம் வேற்றுமையைப் பெற்றும் வந்துள்ளன. இப்படி இரண்டாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமைகளுடன் வல்லினம் முதலில் வந்த சொற்கள் வருமொழியாக வரின், வல்லினம் மிகும்.

iii. பெரும்பாலும் உயிர் ஈற்றுச் சொற்களோடு வல்லினம் வருமொழி முதலாக வரின், வல்லினம் மிகும்.

(உ-ம்) ஆட + சென்றான் = ஆடச்சென்றான்.
ஓடா + குதிரை = ஓடாக்குதிரை
நொடி + பொழுது = நொடிப்பொழுது

**பயிற்சி :**

1. கீழ் வருவன இன்ன காரணத்தால் வலி மிகுந்து காணப்படுகின்றன என்பதைக் குறிப்பிடு:-
ஒளிவிட்டுக்கொண்டு, கண்ணுக்குத் தோன்றாமல், மேகப் படலம், சிறப்புக் கூறுதற்கு, பேசப்படுகின்றன, அப்பல கோடி, தம்மைப்பற்றி, துருவத்தைப் பற்றிச் சிறிது, பனிக் கட்டிகள்.
2. எட்டாவது பாராவில் சில தொடர்கள் வல்லினம் மிகுந்து வந்துள்ளன. அவற்றிற்குக் காரணம் கூறு.
3. வலி மிகுந்து வரும் தொடர்கள் பத்து எழுது.

# 11. ஔவையார் தூது

1. அரசர்கட்கு அமைந்த அலுவலாளர்கள் பலருள் தூதுவரும் ஒருவராவர். தூதுவருக்கு அமைந்திருக்க வேண்டிய பண்புகள் பலவாகும். அவர்கள் பகை வேந்தரிடத்துச் சமாதானத்தை நாடியும், பிரிக்க வேண்டியவர்களைப் பிரித்து வைக்க வேண்டியும் தூதாகச் செல்வார்கள். அவர்

கள் தங்களைச் சார்ந்த மன்னரிடத்து அன்புடையவர்களாயும், நற்குண நற்பண்புடைய குடியில் பிறந்தவர்களாயும், அரசன் விரும்பும் பண்பாடு பெற்றவர்களாயும் இருத்தல் வேண்டும். அவர்கள் மனத்தில் கள்ளம் கபடு இருத்தல் கூடாது. அவர்கள் தூய மெய்யும், தூய மனமும் பெற்றவர்களாய் இருத்தல் வேண்டும். எல்லா நூல்களையும் கற்று வல்லவர் முன் தாங்கள் உரையாடும் போது, அன்னார் வினாக்களை எழுப்பிய காலத்து, அவற்றிற்கு உடனுக்கு உடன் ஏற்ற விடை ஈய வல்லவர்களாய் இருத்தல் வேண்டும். தூதுவர் கல்வியால் ஆகிய செயற்கை அறிவினைப் பெற்றிருத்தல் மட்டும் போதாது; இயற்கை அறிவினையும் பெற்றிருத்தல் வேண்டும். அவர்கட்கு அன்பும், சொல் வன்மையும் மிக மிக இன்றியமையாதவை. அஞ்சா நெஞ்சும் அவர்கள் பால் அமைதல் வேண்டும். தம் அரசர் கூறியனுப்பிய மொழிகளைப் பகை வேந்தனிடம் கூறும் போது, தம் அரசர்க்கு இழுக்கு நேரும் வகையில் யாதொரு வார்த்தையும் கூறாதவராய் இருத்தல் வேண்டும்; பாரித்துப் பேசாமல், சொல்ல வேண்டியவற்றைச் சுருங்கிய சொற்களால் சொல்லுதல் வேண்டும்.

2. தூதுவர் கூறுவனவற்றை மாற்றரசர் அப்படியே எடுத்துக்கொள்வர் என்று கூற முடியாது. அவர்கள் வெகுளவும் கூடும். அக்காலங்களில் அதன்பொருட்டுச் சிறிதும் அஞ்சாது, அச்சினத்தை உடனே மாற்றி, அவ்வேந்தர்களே விரும்புமாறு பேசி மகிழ வைக்கும் ஆற்றலும் படைத்திருக்க வேண்டும். காலம் அறிந்து பேச வேண்டும். உயிர்க்கே கேடு வருவதானாலும், தம் அரசர்க்கு நன்மை தருவதாகிய செயலிலேயே உறுதியாகப் பேசும் திறன் படைத்தவராய்த் திகழ வேண்டும்.

3. இப்பண்புகள் அனைத்தும் நம் ஔவை மூதாட்டி யாரிடத்தில் செவ்வையாய் அமைந்திருந்தன. அப்படி அமைந்திருந்த காரணத்தாலேதான் **அதிகமான் நெடுமான் அஞ்சி** தன் பகை வேந்தனை தொண்டைமானிடம் அவரைத் தூதுவராக அனுப்பினன். அதற்குரிய காரணத்தையும், ஔவையார் தூதுரைத்த பண்பினையும் இனிக் காண்போம்:

4. அதிகமான் நெடுமான் அஞ்சி, வன்மையும் வண்மை யும் உடையவன். அவன் சோழநாட்டைச் சார்ந்த தகடூரைத் தலைநகராகக்கொண்டு, அதையடுத்த மலை நாட்டை ஆண்டு வந்தான். அம்மலை நாடே இப்போது **தர்மபுரி** என்பது. அவ னுக்கு ஔவையாரிடத்தில் பெருமதிப்பு உண்டு. அதனலே தான் அவன் தனக்குக் கிடைத்த அரிய நெல்லிக் கனியை அவ்வம்மையாருக்குக் கொடுத்து உண்ணச் செய்து, அவ்வம் மையார் நெடுங்காலம் வாழ்வதை விரும்பினன்.

5. அவன் காலத்தில் காஞ்சீபுரத்தில் தொண்டைமான் என்பவன் அரசு புரிந்து வந்தான். அவன், அதிகமான் பெரும் புகழுடன் விளங்கி, எல்லாராலும் சிறப்பிக்கப்படுவதை விரும்பவில்லை; அதிகமானுடைய நாடு நாளுக்குநாள் பெருகி வருவதைக் கண்டு மனம் சகிக்கவில்லை. ஆகவே, அதிகமா னேடு போர் தொடுத்து அவனை அடக்கி, அவன் அரசைத் தன்னடிக்கீழ்ப்படுத்த எண்ணி, அதற்கு வேண்டிய போர்க் கருவிகளைப் பெருக்கி, மற்றும் பல வழி வகைகளையும் சிந்தித் துக்கொண்டிருந்தான்.

6. இவ்வாறு தொண்டைமான் எண்ணி ஏற்பாடுகளைச் செய்து வருவதை அதிகமான் அறிந்தான். ஆனல், அதிக மானே, தொண்டைமானேடு போர் புரிய எண்ணம் கொண் டிலன். இதனல், அதிகமான் தொண்டைமானுக்கு அஞ்சி னன் என்பது கருத்தன்று. போரிலே தானே வெற்றித்

திருவைப் பெறக்கூடும் என்பதும், எதிரி தோல்வி உறக் கூடும் என்பதும் அவனுக்குத் தெரியும். என்றாலும், போரில் இரு திறத்து வீரர்களும் வீணே மடிய நேரிடுமே என்னும் இரக்கமே அவனைப் போருக்குச் செல்லாதபடி செய்தது. ஆகவே, சமர் புரியாது சமாதானத்தை நாடி, தன் ஆற்றலை யும் உணர்த்தி வைக்க ஒரு தூதுவரை அவன்பால் அனுப்பத் தீர்மானித்தான். அப்படித் தூது சென்று உரைப்பவர் யார்



என்று எண்ணியவனுய்த் தூதுவர் பண்புகள் அனைத்தும் ஒருங்கே அமைந்த ஔவையாரை அனுப்ப எண்ணங் கொண்டான். அவ்வாறே அப்பணியினை ஏற்க ஔவை யாரும் இசைந்தனர். ஔவையார் தொண்டைமானிடம் தூத ராகச் சென்றார்.

7. ஔவையார் வருகையைத் தொண்டைமான் அறிந்து அம்மூதாட்டியாருக்கு நல்வரவு கூறினான். ஔவை யார் தூதுவராய் வந்தவர் என்பதை அறிந்த தொண்டைமான்

தன் ஆண்மையும் வீரமும் அவ்வம்மையார் அறிந்து அதியமானுக்கு உரைக்க வேண்டும் என்னும் எண்ணமுடையவனாய், தன் படைக்கலக் கொட்டிலைக் காண்பித்தனன்.

8. ஔவையார் நுண்ணறிவு படைத்தவர் அல்லவா? அவர் தொண்டைமான் எதன்பொருட்டு அக்கொட்டிலைக் காட்டுகிறான் என்பதை உணர்ந்து, 'இந்தத் தருணத்தில் அதிகமானுடைய ஆற்றலை வெளிப்படையாகச் சொல்லாமல் குறிப்பாகச் சொல்ல வேண்டும்,' என்று தீர்மானித்து, "கச்சிப்பதிக்காவல, உன் படைக்கலங்கள் நல்ல ஒளி பெற்று, நெய் பூசப்பட்டு, பீலியும் மாலையும் அணியப் பெற்று, அழகாக வைக்கப்பட்டுப் பார்ப்பவர் கண்களைப் பறிப்பனவாக அவ்வளவு அழகாய் உள்ளன! ஆனால், அதிகமான் ஆயுதங்கள் யாவும் இந்தப் பேற்றைப் பெற்றில. அவை கூர்மை இழந்தனவாய், இரத்தக் கறை படிந்தனவாய், நுனி முறிந்தனவாய் உள்ளன. அவை மீண்டும் செவ்வனே விளங்கக் கொல்லன் உலைக்களத்தில் கொண்டு போய்ச் சேர்க்கப் பட்டுள்ளன," என்று மொழிந்தனர்.

9. இவ்வாறு கூறிய மாற்றத்தினின்று என்ன அறிகிறோம்? தொண்டைமான் படைக்கலங்கள் போர்க்களத்தைப் பாராமல், அழகுடன் பொம்மைக் கொலுவில் வைக்கப்படுபவை போலக் காணப்படுகின்றன. தொண்டைமானோ, தொண்டைமான் போர் வீரர்களோ, அமர்க்களத்தை எட்டிப் பார்த்தவர் அல்லர். அப்படிப் பார்த்திருந்தால், அவை இந்நிலையில் இருந்திரா. ஆனால், அதிகமான் நெடுமான் அஞ்சியின் படைக்கலங்கள் கூர் மழுங்கிக் கொல்லன் உலைக்களத்தை உற்றுக்கிடக்கின்றன. அடிக்கடி போர் செய்து வெற்றி கொண்ட காரணத்தால், இந்நிலை அடைந்துள்ளன என்பதை அறிகிறோம் அல்லவா? இம்மொழிகளின் மூலம்

அதிகமானுடைய வீரச்சிறப்பும் வெற்றியின் மேன்மையும் புலப்படுத்தப்பட்டன அல்லவா ?

10. தொண்டைமானும் அறிவு வாய்ந்தவன்; ஔவை யார் வார்த்தைகளின் உள்ளுறை பொருளை உணர்ந்துகொண் டான்; அதிகமான் வன்மையறியாது அமர் தொடுக்க எண்ணி யது தவறு என்பதை உணர்ந்தான்; தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டான்; ஔவையாரிடம் சமாதான மொழி களைப் பேசி, அவ்வம்மையாரை வழி கூட்டி அனுப்பினான்.

11. ஔவையார் தூதால் அமரும் நின்றது; ஆருயிர் கள் பல காக்கப்பட்டன. மேலும், ஆண் மக்களே அன்றிப் பெண்டிரும் தூது சென்று சந்து செய்ய ஆற்றல் படைத்த வர் என்பதும் தெரிகிறது. இது பெண்கள் சமூகத்திற்குப் பெருமதிப்புத் தருவதன்றோ!

**அருஞ்சொற்பொருள் :**

அலுவலாளர்-உத்தியோகம் பார்ப்பவர், பண்பு-குணம், விடை - பதில், பாரித்து-மிகுதிப்படுத்தி, மாற்றரசர்-பகை வேந்தர், சினம் - கோபம், செவ்வை-ஒழுங்கு, வண்மை-ஈகை, வன்மை-வலிமை, வெற்றித்திரு-ஜயலட்சுமி, சமர்-சண்டை, படைக்கலக் கொட்டில்- ஆயுதச்சாலை, கச்சிப்பதி-காஞ்சீபுரம், காவல-அரச, அமர்-சண்டை, சந்து-சமாதானம்.

**கேள்விகள் :**

1. அதிகமான் யாவன் ? அவன் எங்கு அரசு புரிந்து வந் தான் ?
2. அதிகமான் யாரிடம் ஔவையாரைத் தூது அனுப்பினான் ? ஏன் ?
3. தொண்டைமான் ஔவையாருக்கு எதனைக் காண்பித்தனன் ? ஏன் ?
4. ஔவையார் தொண்டைமான் எண்ணத்தை எவ்வாறு மாற் றினார் ?
5. ஔவையார் மொழிகளிலிருந்து எந்த உண்மைகள் வெளி யாயின ?
6. எது பெண்கள் சமூகத்திற்குப் பெருமதிப்புத் தருவதாகும் ?

### பயிற்சி :

1. 'தூதுவர் பண்பு' என்னும் தலைப்புக் கொடுத்து ஒரு கட்டுரை எழுது.
2. அரசர்கள்பொருட்டுத் தூது சென்ற மற்றொருவர் வரலாற்றைக் குறிப்பிடு.
3. ஔவையாரைப்பற்றி நீ அறிந்துள்ளதைச் சிறிது குறிப்பிடு.
4. அதிகமானின் வண்மைக்கும், வன்மைக்கும் உதாரணங் கொடு.

### இலக்கணம் :

## குற்றுகரப் புணர்ச்சி :

**நாடு + ஆண்டான்** என்னும் சொற்கள் சேர்ந்தால், எப்படிச் சேரும் ? **நாடாண்டான்** என்றல்லவா புணரும் ? இச்சேர்க்கையால் என்ன அறிகின்றீர்கள் ? நிலை மொழியீற்றில் உகரம் இருந்து, வருமொழி முதலில் உயிர் எழுத்து வந்தால், குற்றுகரத்தில் இருந்த உகரம் நீங்கி, நின்ற மெய்யோடு வந்த உயிர் சேர்ந்து புணரும் என்பதனை உணர்கின் றீர்கள் அல்லவா ?

(உ-ம்) நாடு + ஆண்டான்—நாடாண்டான்.
நாட் + ஆண்டான்
நா (ட் + ஆ)ண்டான்,

### பயிற்சி :

1. தூதாக, அன்புடைய, பெற்றிருத்தல், மாற்றரசுக்கு—இத்தொடர்களைப் பிரித்து, புணர்ந்தமைக்குக் காரணமும் காட்டு.
2. கற்று அன்னர், வந்து அழை, செய்து அமை, கேட்டு எழுது, மதிப்பு உண்டு, கொடுத்து அதனை—இத்தொடர்களைச் சேர்த்து எழுதி அப்படிச் சேர்த்தமைக்குக் காரணமும் கூறு.

# 12. நீர்ப்பாசனம்

1. 'மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை,' என்பதை நாம் நன்கு உணர்வோம். மழை மக்களுக்கு மிகமிக இன்றியமையாதது என்பதை அறிந்த வள்ளுவர், தம் பொது மறையில் 'வான் சிறப்பு' என்னும் தனி அதிகாரத்தை வகுத்து, பத்துக் குறட்பாக்களில் மழையின் சிறப்பைக் கூறுகிறார். மழை இல்லையானால், ஓரறிவு உயிராகிய பசும்புல்லும் தலை காட்டாது; ஏரால் உழவர் உழுதலைச் செய்யார். மழை உணவுப் பொருள்களை உண்டு பண்ணுதற்கு உதவியாய் இருப்பதோடு நில்லாமல், மற்றக் காரியங்களுக்கும் பயன் படுகிறது. நீரை மிகுதியாகப் பெற்ற கடலுக்கும் மழை தேவையாய் இருக்கிறது என்றால், வேறு என்ன கூறுவது ! கடலில் மழை பொழியவில்லை என்றால், கடல்படு பொருள்களாகிய துப்பும், தரளமும் தோன்ற மாட்டா.

2. இத்தகைய சிறப்பு வாய்ந்த மழை, நம் முன்னோர்கள் காலத்தில் மாதத்திற்கு மூன்று முறை பொழிந்து வந்தது. இதனால், 'மாதம் மும்மாரி பொழிந்தது,' என்று கூறும் வழக்கையும் காணலாம். இந்த மழை நீர் என்றும் தமக்குப் பயன்படும்பொருட்டு நம் முன்னோர் ஏரி, குளம், கிணறு முதலியவற்றை உண்டாக்கி, அவற்றில் நீர் நிரம்புமாறு செய்து வந்தனர். மழை நீர் பூமியில் பொழிந்து, மண்ணில் ஊறிவிடுவதால், அம்மண்ணைத் தோண்டுங் காலத்தில் பூமியிலிருந்து நீர் சுரக்கத் தொடங்கும். அச்சுரப்பு நீரே கிணற்று நீர் எனப்படும். அதனைத்தான் நாயனார் 'தொட்டனைத்து ஊறும் மணற்கேணி,' என்று குறிப்பிட்டுள்ளார். குளங்களும் செய்நீர் நிலைகளேயாகும். பள்ளமான நிலப்பகுதி அமைந்த இடங்களில் மழை நீர் தேங்குதலும்

உண்டு. மலைகளையும் குன்றுகளையும் அடுத்துள்ள சமவெளிகளில் சுற்றிலும் கரைகளை எழுப்பி, மழை நீர் வீண் போகாத படி தேக்கி வைத்தனர். அத்தேக்கமே ஏரி எனப்படும். ஏரைக் கட்டி நிலங்களை உழுதற்கு இந்நீர் பெரிதும் பயன் படுதல் கருதி, இதனை ஏரி எனப் பெயரிட்டு நம் முன்னோர் வழங்கியதை அறிந்து, நாம் அவர்களின் நுண்ணறிவைப் பாராட்ட வேண்டுமல்லவா ?

3. இவ்வாறு அமைந்த நீர் வசதிகளைக் கொண்டுதான் நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சிப் பயிர் பச்சைகளைப் பெருக்கி



கிருஷ்ணா அணை

வந்தனர்; பருகவும் பயன்படுத்தி வந்தனர். மழை பெய்து கொண்டே இருந்தால்தான் நீரைப் பெற முடியும். மழை பெய்யாது தடைபட்ட போது, விளைவு குன்றிப் பஞ்சமும் பசியும் தோன்றி, மக்கள் மாழ்க நேரிடும். இதனைப் பொய்யில் புல

வராம் வள்ளுவப் பெருந்தகையார் எவ்வளவு தெளிவாகக் கூறுகிறார் பாருங்கள்:

"விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து
உள்நின்று உடற்றும் பசி."

என்கிறார். ஆகவே, இம்மழை பொழியுங் காலத்தில் இதன் நீரெல்லாம் வீணே பூமியில் ஓடிக் கடலில் கலந்துவிடாதபடி, ஆறுகளின் குறுக்கே அணைகளைக் கட்டி நீரைத் தடை செய்து விடுகின்றனர். மழை பெய்யுங் காலங்களில் சமவெளிகளில் நீர் ஓடும் இடமே ஆறு எனப்படும். இவ்வாறு ஓடி வரும் ஆற்றினைச் சமவெளிகளை அடுத்து வாழும் மக்கள் ஆழமாக வெட்டி, நெடுகக் கரை எழுப்பி, வேண்டுமிடங்களில் மதகுகளைக் கட்டிச் சிறு சிறு கால்வாய்களின் மூலம் நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சிக்கொள்வர். இந்த வாய்க்கால்களே கிளை நதிகள், சிற்றாறுகள் எனப்படும். பேராறுகளின் இடையேதான் அணைகளைக் கட்டுவர். இவ்வணைக்கட்டுக்கள் வடக்கே தெலுங்கு ஜில்லாக்களில் உள்ள கோதாவிரி, கிருஷ்ணா நதிகளில் கட்டப்பட்டிருப்பதைக் காணலாம். மைசூரில் காவிரியாற்றுக்கு இடையில் கண்ணம்பாடி என்னும் பெயருடன் ஓர் அழகிய அணை கட்டப்பட்டிருக்கிறது. அதனை எவரும் கண்டு களிக்க வேண்டும். தென்னாட்டிலும் பல அணைக் கட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் சிறந்தது மேட்டூர் அணைக்கட்டாகும். இவ்வணைக்கட்டு, சேலத்துக்கு அருகேயுள்ள மேட்டூர் என்னும் இடத்தில் கட்டப்பட்டது. இந்த அணைக்கட்டைக் கட்டி முடிக்க ஐந்து கோடி ரூபாய் செலவாயிற்று. இவ்வணைக்கட்டினின்றும் சிற்சில கால்வாய்களை ஏற்படுத்த, மேலும் இரண்டு கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டது. இதனைக் கேட்கும் போது, இதன் பெருமையை மேலும் மதிக்க வேண்டியவர்களாய் இருக்கிறோம். இந்த அணைக்கட்டினால் இலட்சக்கணக்கான நிலங்கள் நன்கு நீர்

பாய்ச்சப்படுகின்றன. அவை நல்ல விளைவைத் தந்து வருகின்றன.



மேட்டூர் அணை

4. நம் நாட்டில் உழவர்கள் கிணற்றின் அருகேயே ஏற்றங்களை அமைத்து நீர் இறைத்தும், மாடுகளைக்கொண்டு கவலையடித்தும் நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சி வந்தனர்; ஆறு

களைச் சிறு கால்வாய்களாகத் திருப்பி நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சி வந்தனர். இந்நீர்ப்பாசன வசதிகளுக்கும் மழை பெய்யாத காலங்களில் தடை ஏற்படக்கூடும். ஆனால், முன்னே கூறிய அணைக்கட்டுக்களால் நீர் தேக்கப்படுவதனால், மழை மிகுதியும் பெய்யாத காலங்களிலும் நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சி வேளாண்மையைப் பெருக்கலாம். ஏரி, குளம், குட்டை, கேணி இவற்றின் நீர் சூரிய வெப்பத்தால் வற்றி விடுதல் போல, அணை நீர் விரைவில் வற்றாமல், கடல் போலத் தேங்கியிருக்கும். ஆதலால், அணைக்கட்டே நீர்ப்பாசனத்திற்குச் சிறந்த வசதியைப் பெற்றதாகும். அணைக்கட்டினால் பயிர் பச்சைகளுக்கு மட்டுந்தான் பயன் ஏற்படும் என்று கருதிவிடக்கூடாது. அணைக்கட்டுக்களால் மின்சார உற்பத்தியும் நடைபெறுகின்றது. மின்சாரவுதவியினால், தொழிற்சாலைகளுக்குத் தகுந்த மூலப்பொருள் கிடைக்கும் இடங்களில் பல தொழிற்சாலைகள் தோன்ற வசதி ஏற்படுகிறது. அத்தொழிற்சாலைகளால் பல்லாயிர மக்கட்கு வேலை கிடைக்கிறது. இவை அனைத்தும் உண்மை என்பதற்கு மேட்டூர் அணைக்கட்டே போதிய சான்றாகும். நாம் அணியும் மேட்டூர் மல் எனப்படும் ஆடை அங்குள்ள சாலையில் நெய்யப்பட்டு வருவதே.

5. அணைக்கட்டினால் உழவும் தொழிலும் செழித்து ஓங்கி வருகின்றன. உழவும் தொழிலும் நிறைந்த நாடு செழித்து ஓங்கி வளரும் என்பதைக் கூறவும் வேண்டுமோ! இதனால் அன்றோ, நம் பாரதியாரும், "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்!" என்று களிப்புடன் பாடுவாரானார்? இத்தகைய நீர்ப்பாசன வசதிகள் பல மேன்மேலும் பெருக வேண்டும்.

### அருஞ்சொற்பொருள் :

மாநிலம் – பெரிய நிலம், வான் சிறப்பு - மழையின் சிறப்பு, பொது மறை-திருக்குறள், துப்பு – பவழம், தாளம்-முத்து, மாரி - மழை, தொட்டனைத்து - தோண்டிய அளவையுடையது, கேணி–கிணறு, தடாகம்-குளம், மாழ்க-வருந்த, விரிநீர்-கடல், வியன் - விசாலமான, உடற்றும்-வருத்தும். ஐயம் - சந்தேகம், வேளாண்மை - பயிர்த் தொழில், சான்று-சாட்சி.

### கேள்விகள் :

1. மழை இன்றெனின் எவையெவை நிகழும் ?
2. நம் முன்னோர் எங்ஙனம் நீரைப் பெற்று வந்தனர் ?
3. அணைக்கட்டுக்கள் ஏன் கட்டப்படுகின்றன ?
4. மேட்டூர் அணைக்கட்டுப் பெரிய அணைக்கட்டு என்பது எவ்வாறு தெரிகிறது ?
5. அணைக்கட்டுக்களினால் ஏற்படக் கூடிய பயன்கள் யாவை ?

### பயிற்சி :

1. அணைக்கட்டு உள்ள சில இடங்களைக் குறிப்பிடு.
2. 'விண்ணின்று பொய்ப்பின்' என்னும் குறளில் அடங்கிய பொருளைத் தெளிவாக எழுது.
3. நீர் நிலைகளுள் சில ஆறு, ஏரி எனப் பெயர் பெற்றமைக்குரிய காரணங்களை விளக்கி எழுது.

### இலக்கணம் :

## உடம்படு மெய்

'மணி + அழகு' என்பது எப்படிச் சேரும் ? 'மணியழகு' என்று சேரும். 'பல + அரசர்' என்பது, 'பலவரசர்' என்று ஆகும். ஆகவே, இவ்விரு தொடருக்கு நடுவில் எந்தெந்த எழுத்துக்கள் தோன்றி இவ்விரு மொழிகளையும் உடன்படுத்தி வைத்தன? **ய், வ்** என்னும் எழுத்துக்கள் தோன்றியல்லவா ? எனவே, இம்மெய்கள் **உடம்படு மெய்கள்** என்று கூறப்படும்.

### பயிற்சி :

1. கீழ் வரும் தொடர்களைப் பிரித்து, இடையில் எக்காரணங் கொண்டு **ய், வ்** என்னும் உடம்படு மெய்கள் தோன்றின என்பதைக் குறிப்பிடு:—

மழையின்றி, பொழியவில்லை, அருகேயேற்றங்களை, கிளியழகு, பூவழகு, நிலாவொளி, பலவாடுகள், பணியாள், தேவாரம், கோவில், மின்சாரவுதவி, குறுக்கேயணை.

2. கை+எடுத்து, தீ+அணை, எது+ஓடியது, சில+ஓடங்கள், நிலா+ஒளி—இவற்றைச் சேர்த்து, அப்படிச் சேர்த்தமைக்குக் காரணமும் கூறு.

3. ய், வ் என்னும் உடம்படு மெய்கள் வரும்படி தனித்தனி ஐந்தைந்து உதாரணங்களை எழுதிக் காட்டு.

# 13. கூட்டுறவு இயக்கம்

1. உலகில் சிற்சில செயல்கள், தனித்துச் செய்வதைவிட, ஒன்று கூடிச் செய்வதனல் நன்கு நடக்கக் கூடியனவாகவும், பயன் தரத் தக்கனவாகவும் இருக்கின்றன. 'ஒற்றுமையே பலம்,' என்றும், 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு,' என்றும் பைந்தமிழில் வழங்கி வரும் பழமொழியும், இக்கருத்தினை நன்கு வலியுறுத்தும். கூட்டுறவு முறையில் நடத்தப்படும் நடவடிக்கைகளால், கைத்தொழில் சமூகம் முதலியன திருத்தமடைந்து, பயன் பெரிதும் எதிர் பார்க்கக் கூடியதாய்க் காணப்படும்; உணவு நெருக்கடி, பணமுடை, பொருளின் தேவை போன்ற வாழ்க்கைக்கு இன்றியமையாதனவற்றையும் நல்ல முறையில் தீர்த்துக்கொள்ளலாம்.

2. இக்கூட்டுறவு இயக்கத்திற்கு ஆதித் தந்தையார் ஜெர்மனி தேசத்து ரைபீஸன் என்னும் அறிஞரேயாவார். அவர் தம் நாடாகிய ஜெர்மனி 1847-ஆம் ஆண்டில் பஞ்சத்தால் வாடி வதங்கி, உணவு நெருக்கடி ஏற்பட்டுக் குடியானவர்களும் பொது மக்களும் அல்லலுறுவதைக் கண்கூடாகக் கண்டார். குடியானவர்கள் பட்ட இடுக்கண் அவர் உள்ளத்தை வருத்தியது. அவர் அவர்கள் நல்வாழ்வு எய்துதற்கு வழிசெய்ய முயல்வாரானர். அம்முயற்சியின் பயனே கூட்டுறவு இயக்கம்.

அவர் கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்திப் பல அங்கத்தினர் களைச் சேர்த்து, சொற்ப முதலைக்கொண்டு தானியங் களையும், காய்கறி கிழங்கு வகைகளையும் வாங்கி, அங்கத்தினர் களாய் இருப்பவர்கட்கு இலாபம் கருதாது விற்று வந்தார்; கால் நடைகளை வாங்கி ஏழைக் குடியானவர்கட்கு விற்று வந் தார்; கால் நடைகளை வாங்குவதற்குப் பணத்தைக் கடனாகக் கொடுத்துதவச் செல்வர்களை நாடினார். செல்வர்கட்கும் குடியானவர்க்கும் இடையில் சங்கம் உத்தரவாதமுள்ள தெனப் பொறுப்புக் காட்டினார்; பணத்தைச் செல்வந்தரிடம் குறைந்த வட்டிக்கு வாங்கி உதவி வந்தார். இதனால், குடி யானவர்கள் அடைந்த நன்மை அனந்தமாகும். இவ்வாறு பணம் கொடுத்து உதவி வருவது குறித்து 1862-ஆம் ஆண்டு ஒரு சட்டம் வகுக்கப்பட்டது. அச்சட்டம் சங்கத்தில் கடன் பெறுபவர்களின் கூட்டு உத்தரவாதம் என்னும் கூட் டுறவு விதியேயாகும். இக்கூட்டுறவு முறையினால் அளக்க ஒண்ணாதபயன்கள் ஏற்பட்டமையால், உலகெங்கும் இவ்வியக் கம் தோன்றலாயிற்று. ஸாக்ஸனி மாகாணத்தில் டெலிட்ஷ் என்னும் சிறிய பட்டணத்தில் பிறந்த ஷுல்ஸ் என்பவர், பல சங்கங்களை நிறுவினர். ரஷ்யாவிலும், ஆஸ்திரேலியாவிலும், பிரான்ஸிலும், ஜப்பானிலும் எண்ணிறந்த கூட்டுறவுச் சங் கங்கள் எழலாயின.

3. இனி இந்தியாவில் இவ்வியக்கம் தோன்றிய வரலாற் றைப்பற்றிச் சிறிது சிந்திப்போம்: தொன்று தொட்டு நம் நாட் டிலும் கூட்டுறவு முறைகளில் பஞ்சாயத்துக்கள், கொடுக்கல் வாங்கல் முதலியன நடந்து வந்தன. பஞ்சாயத்து முறையால் கிராமங்கள் நன்முறையில் பரிபாலிக்கப்பட்டன. ஆயினும், கொடுக்கல் வாங்கல் முறையில் பல இடையூறுகள் குடியான வர்கட்கு இருந்தே வந்தன. இதனைப் பம்பாய் மாகாணத்தைச் சார்ந்த பூனாவில் நீதிபதியாய் இருந்த சர் வில்லியம் வெட்டர்ன்

**பர்ன்** என்பவர் அறிந்து, ஏழைகளின் கடன் தொல்லையை ஒழிக்க முன் வந்தனர்; இதன்பொருட்டு 1882-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கத்தினருக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தனர். ஆனால், அரசாங்கம் அவருடைய வேண்டுகோளை நிராகரித்துவிட்டது. என்றாலும், இது குறித்துச் சிற்சில ஆராய்ச்சிகள் மட்டும் நடந்து வந்தன. 1901-ஆம் ஆண்டில் ஐக்கிய மாகாணத்தில் பல ஐக்கிய நாணயச் சங்கங்கள் தோன்றின. அவற்றைத் தோற்றுவித்தவர் **சர் அந்தோணி மாக்டோனல்** என்பவர். இவ்வாறு சங்கங்கள் தோன்றி நல்லமுறையில் நடந்து வருவதைக் கவனித்த சர்க்கார், "இத்தகைய சங்கங்களுக்கு அரசாங்கத்தின் ஆதரவும் இருத்தல் நல்லதே ஆகும்," என்பதை உணர்ந்து, அதன்பொருட்டு ஓர் ஆலோசனைக் குழுவினை ஏற்படுத்தி, 1904-ஆம் ஆண்டு சில சட்டதிட்டங்களை ஏற்படுத்தியது. அச்சட்டதிட்டங்களின் அடிப்படை, ஐக்கிய நாணயச் சங்கங்களுக்கு அரசாங்கம் உதவுவதும், கணக்குகளைத் தணிக்கை செய்வதும் ஆகும். பின்பு, பல சங்கங்கள் கிளைக்கத் தொடங்கின.

4. ஐக்கிய நாணயச் சங்கத்தின் தோற்றத்திற்குப் பிறகு பல வகையான சங்கங்களும் உண்டாகத் தொடங்கின. அவற்றை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். அவை, (1) குறைந்த வட்டிக்குக் கடன் கொடுக்கும் சங்கம், (2) உழவுக்குரிய துணைக்கருவிகளை வாங்கியுதவும் சங்கம், (3) கூட்டுறவுப் பண்டகசாலைச் சங்கம், (4) வீடு கட்டிக் கொள்ள உதவி புரியும் சங்கம், (5) தொழிலாளர்கட்கு உதவும் சங்கம் என்பன.

5. இச்சங்கங்களின் பயனை நன்கு உணர்ந்தவர்கள் தென்னிந்தியர்கள் என்றுகூடக் கூறிவிடலாம். இவற்றுள் விவசாயிகட்குக் கடன் கொடுத்து உதவும் ஐக்கிய நாணயச்

சங்கமே பெரிதும் நடைமுறையில் இருந்து வருகின்றது. இச் சங்கத்தில் சேரும் அங்கத்தினர்கள் ஒருவருக்கொருவர் நன்கு தெரிந்தவர்களாய், யோக்கியர்களாய், நல்ல உழைப்பாளி களாய் இருக்க வேண்டும் என்பது முதல் விதியாகும். இந்த நிபந்தனைக்கு உட்படாதவர்களைச் சங்கத்தில் சேர்த்துக் கொண்டால், அவர்களுக்குக் கொடுக்கும் தொகை விழலுக்கு இறைத்த நீர்போலப் பயன் இன்றிப் போகும் அல்லவா ? இந் நிபந்தனைகளை மேற்கொள்வது மிகமிகப் பொருத்தமானதே யாகும். இவ்வாறு பொறுப்பு வாய்ந்த அங்கத்தினர்கள் சங்கத்திலிருந்து கடனாகப் பெறும் தொகையை எதற்கு வாங்குவதாகத் தாம் கொடுத்த மனுவில் தெரிவித்துக் கொண்டார்களோ, அதற்கே அத்தொகை செல வழிக்கப்பட வேண்டும். இதனை உதாரண மூலமாக விளக் கலாம்: ஓர் உழவன் தன் நிலத்தை ஒரு செல்வனிடத்தில் அடகு வைத்திருந்தான் என்று வைத்துக்கொள்வோம். உழ வன் வாங்கிய தொகைக்கு வட்டி செலுத்த முடியாமல், முதலும் வட்டியுமாகச் சேர்ந்து நிலமே தன் கைவசமிருந்து போய்விடும்போல இருப்பதை அறிந்து, நிலத்தை மீட்டுக் கொள்ளப் பண உதவி பெறச் சங்கத்தை நாடுகிறான். அவன் நிலையை அறிந்து சங்கமும் பணம் கொடுத்து உதவுகிறது. அப்படி உதவிய பணம் நிலத்தை மீட்கப் பயன்படுத்தப்படா மல், அவன் மகள் திருமணத்திற்குச் செலவு செய்யப்படு மானால், இது சட்ட விரோதமாகக் கருதப்பட்டது.

6. சங்கத்தில் அங்கத்தினர் பதவி ஏற்பதற்குச் செலுத் தப்படும் நுழைவுக் கட்டணம் சிறிய தொகையேயாகும் : பங்குத் தொகையும் சொற்பமானதே. பணம் குறைந்த வட்டிக்குக் கொடுக்கப்படுவதனால், சிற்சில சங்கங்களில் இலாபமும் ஏற்படுவதுண்டு. அவ்விலாபப் பொருளில் ஒரு சிறு

தொகையைச் சேம நிதிக்கெனவும் பொது நலத்துக்கெனவும் எடுத்துக்கொண்டு, மிகுந்ததைச் சங்கத்தில் பணி புரியும் செயலாளர் கணக்கர் முதலிய சிப்பந்திகட்கு மாத ஊதிய மாகக் கொடுத்து வருவர். இதற்கு மேலும் பணம் மிகுந்து காணப்பட்டால், அங்கத்தினர்களின் பங்குகட்கு ஏற்றபடி பிரித்துத் தருவர்.

7. இச்சங்கத்தால் ஒருவர்க்கொருவர் உதவி புரிந்து கொள்ளும் நல்லியல்பு ஏற்படுவதனுல், இச்சங்கம் நல்ல முறையில் நடக்க நம்மவர்கள் உதவி புரிய வேண்டுவது கடமையும் உரிமையும் ஆகும்.

### அருஞ்சொற்பொருள் :

இடுக்கண்- துன்பம், எய்துதற்கு-அடைவதற்கு, இடையூறு-துன்பம், குழு-கூட்டம், வரைந்தனர்-எழுதினர், தணிக்கை செய்வது-பரி சோதனை செய்வது, கிளைக்க-உண்டாக, நிபந்தனை-சில கட்டுத் திட்டங்கள், விழல்—ஒரு வகைக் கோரை, சேம நிதி-சேர்த்து வைக்கப்பட்ட பொருள்.

### கேள்விகள் :

1. கூட்டுறவால் எவ்வெந்நன்மைகள் ஏற்படும் ?
2. முதல் முதல் கூட்டுறவு இயக்கத்தைத் தோற்றுவித்தவர் யார்?
3. இந்தியாவில் இவ்வியக்கம் எவ்வாறு கிளைக்கலாயிற்று ?
4. ஐந்து வகைச் சங்கங்கள் எவை ?
5. ஐக்கிய நாணயச் சங்கத்தில் ஏற்படுத்தப்பட்ட நிபந்தனைகள் யாவை ?
6. இலாபம் எவ்வாறு செலவு செய்யப்பட்டது ?

### பயிற்சி :

1. பஞ்சாயத்து, சர் அந்தோணி மாக்டோனல்—சிறு குறிப்பு எழுது.
2. 'கூட்டுறவு இயக்கம்' என்னும் பொருள் பற்றித் தமிழ்ச் சங்கத் தில் பேசுவதற்குக் குறித்துக்கொள்ள வேண்டிய குறிப்புக் களைக் குறித்துக் காட்டு.

### இலக்கணம் :

## ண், ள், ல், ன் இவற்றின் முன் தகரம் திரிதல்

காண் + தகு, வாள் + தொழில், கல் + துணை, முன் + தானை— இவற்றைச் சேர்த்துப் பார். இவற்றைச் சேர்த்தால், காண்டகு, வாட்டொழில், கற்றுணை, முன்றானை எனச்சேரும் அல்லவா? இதனால் என்ன அறிகின்றாய்? நிலை மொழியீற்றில் ண், ள் என்னும் மெய்கள் நின்று, வருமொழி முதலில் தகரமெய் வந்தால், தகரம் டகரமாகும். நிலை மொழி ஈற்றில் ல், ன் என்னும் மெய்கள் நின்று, வருமொழி முதலில் தகரம் வந்தால், தகரம் றகரமாகும். இவ்விதிகளை மனத்தில் கொள்.

### பயிற்சி :

1. பொற்றுகள், ஆண்டகை, வாட்டிறன், இவன்றந்தை, சொற்றுணை, நற்றுணை, கற்றாழை—இத்தொடர்களைப் பிரித்து, இவ்வாறு புணர்ந்துள்ளமைக்குக் காரணமும் கூறு.
2. மடல் + தாழை, வாள் + திறன், மண் + தலம், எண் + தோள், வேந்தன் + தொழில், பொன் + தடம்—இவற்றைச் சேர்த்து, அப்படிச் சேர்த்தமைக்குரிய காரணத்தையும் கூறு.

# செய்யுட்பகுதி

## 1. தோத்திரப் பாக்கள்

### தேவாரம்

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை ;
ஆவினுக் கருங்கலம் அரனஞ் சாடுதல் ;
கோவினுக் கருங்கலம் கோட்ட மில்லது ;
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே.

—திருநாவுக்கரசர்

### திவ்வியப் பிரபந்தம்

குலந்தரும்; செல்வந் தந்திடும்; அடியார்
 படுதுய ராயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும்; நீள்விசும் பருளும்;
 அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலந்தரும் ; மற்றும் தந்திடும்; பெற்ற
 தாயினும் ஆயின செய்யும்;
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
 நாராய ணாஎன்னும் நாமம்.

—திருமங்கையாழ்வார்

### திருப்புகழ்

பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே ;
உத்தமா தானசற் குணர்நேயா !
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா !
வித்தகா ! ஞானசத் தினிபாதா !
வெற்றிவே லாயுதப் பெருமாளே !

—அருணகிரி நாதர்

## சகல கலாவல்லி மாலை

பண்ணும் பரதமும் கல்வியும்
தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல்
காயெழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலும்
கனலும்வெங் காலுமன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய்
சகல கலாவல்லியே ! 4

—குமர குருபரர்

## இரட்சணிய யாத்திரிகம்

நன்னெறி புகுத்திடும், நவையின் நீக்கிடும்,
இன்னலை அகற்றிடும், இகல்செ குத்திடும்,
உன்னதத் துய்த்திடும், ஒருங்கு காத்திடும்,
எந்நலத் தையும்தரும் ஏசு நாமமே. 5

—கிருஷ்ணப் பிள்ளை

## நீதி நூல்

அகவிருள் அகல ஞான விளக்கினை அருளி னேற்றிச்
சகலமும் நல்கும் கேள்வித் தனத்தினை நல்கி யாதி
பகவன்தன் வடிவம் காட்டிப் பவமறம் இரண்டும் காட்டிச்
சுகநிலை காட்டுந் தியாகத் தோன்றலை மறவாய் நெஞ்சே! 6

—வேதநாயகம் பிள்ளை

### ஆசிரியர் வரலாறு :

1. திருநாவுக்கரசர் நடு நாட்டில் திருவாமூரில் புகழனர், மாதினி யார் என்னும் இருவர்க்கும் புத்திரராய்ப் பிறந்தார். இவர் பிறந்த காலத்

தில் இவர்க்கு மருள்நீக்கியார் என்பது பெயர். இவர் காலத்து மன்னன் **மகேந்திரவர்ம பல்லவன்.** இவர் காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டு. இவருக்குத் திருநாவுக்கரசர் என்னும் பெயர், சிவபெருமானல் கொடுக்கப்பட்டது. இவருடைய தமக்கையார் பெயர் **திலகவதியார்** என்பது. இப்பாடல் இவர் கல்லையே தெப்பமாகக் கொண்டு கடலில் மிதந்து வந்து கரை ஏறிய போது பாடப்பட்டது.

### அருஞ்சொற்பொருள் :

அருங்கலம்-ஆபரணம், ஆ-பசு, அரன்-சிவபெருமான், அஞ்சு ஆடுதல்-பசுவினிடத்திலிருந்து பெறும்படியான பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்னும் ஐந்தையும் அபிடேகப் பொருளாகக் கொண்டு மூழ்குதல். கோ-அரசன், கோட்டம்-நீதியினின்று தவறுதல். நமச்சிவாய-சிவமந்திரங்களில் சிறந்த மந்திரம்; இதனைப் பஞ்சாட்சர மந்திரம் என்பர். தேவாரம்-கடவுளுக்குச் சூட்டப்பட்ட பாமாலை.

## ஆசிரியர் வரலாறு :

2. திருமங்கையாழ்வார் **நீலர்** என்பாருக்குத் திருமகனர்; திருக்குறையலூரில் கள்ளர் மரபில் தோன்றியவர். இவர் சோழ மன்னரிடத்தில் படைத்தலைவராய் இருந்து, பல வெற்றிகளை தேடித் தந்தமையால், இவர்க்கு **ஆலி நாடு** வெகுமதியாகக் கொடுக்கப்பட்டது. அதனல், இவர் **ஆலி நாடர்** என்றும் பெயர் பெற்றனர். இவர் தம் மனைவியார் காரணமாகச் சிறந்த விஷ்ணு பத்தராய் மாறினர். இவர் பாடியவை **பெரிய திருமொழி** முதலியன. இவர்காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டு.

### அருஞ்சொற்பொருள் :

நிலந்தரஞ்செய்யும் - முற்றும் அழிக்கும், விசும்பு - தேவலோகப் பதவி, பெருநிலம்-மோட்ச உலகம், நாமம்-பெயர், வலம்-வெற்றி, ஓம் நமோ நாராயணய-இது வைஷ்ணவ அஷ்டாக்ஷரமந்திரம் எனப்படும், பிரபந்தம்-நூல், புத்தகம்.

## ஆசிரியர் வரலாறு :

3. அருணகிரி நாதர் திருவண்ணுமலையில் இன்றைக்கு ஏறக்குறைய 500 ஆண்டுகளுக்கு முன் பிரபுட தேவ மகாராஜன் காலத்தில் இருந்தவர்; முருகப்பெருமான் திருவருள் பெற்றுத் திருப்புகழ், கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், திருவகுப்பு முதலிய முருகனைப் பற்றிய பாடல் நூல்களைப் பாடியுள்ளார்.

### அருஞ்சொற்பொருள் :

மா-சிறந்த, முத்தன்-மோட்சத்திற்கு உரியவன், ஆமாறு-ஆகும்படி, சற்குணர்-நல்ல குணமுடையவர். நேயா-அன்பனே, மாமணிக்கிரி-சிறந்த இரத்தினகிரி. வித்தகா-அறிஞனே, ஞானசத்திநிபாதா-பக்குவப்பட்ட அன்பர்களிடத்தில் திருவருளைக் காட்டுவோனே.

### ஆசிரியர் வரலாறு :

4. ஆசிரியர் குமரகுருபர சுவாமிகள், திருநெல்வேலியைச் சார்ந்த ஸ்ரீ வைகுண்டம் என்னும் ஊரில் சண்முக சிகாமணிக் கவிராயர் என்பவருக்குப் பிள்ளையாய்ச் சைவ வேளாள மரபில் இன்றைக்கு முந்நூறு வருடங்களுக்கு முன் பிறந்தார், இளமையில் ஊமையாய் இருந்து பின்பு திருச்செந்தூர் முருகன் திருவருளால் அது நீங்கப் பெற்றுக் கவி பாடும் வன்மையும் அடைந்தார். இவர் காலத்துச் சிற்றரசர் மதுரைத்திருமலை நாயக்கர். இச்சகல கலாவல்லி மாலை, இவர் இந்துஸ்தானி மொழியைப் பேசவேண்டும் என்பதற்காகக் கலைமகளை வேண்டிப் பாடியுதாகும். இவர் பல நூல்களைப் பாடியுள்ளார். அவற்றுள் சில காசிக் கலம்பகம், மதுரைக் கலம்பகம், நீதி நெறி விளக்கம் என்பன.

### அருஞ்சொற்பொருள் :

பண்-இசை, பரதம்-நாட்டியம், தீஞ்சொல்-இனிய சொல், பனுவல்-சாஸ்திரம், விண்-ஆகாயம், புனல்-நீர், கால்-காற்று.

### ஆசிரியர் வரலாறு :

5. கிருஷ்ணப்பிள்ளை பத்தொன்பதாம் நூற்றுண்டுப் புலவர். இவர் முதலில் வைஷ்ணவராய் இருந்து, பின்பு கிறிஸ்தவராய் மாறியவர். இவர் பாளையங்கோட்டையில் பிறந்தவர்; திருநெல்வேலியில் தமிழ் ஆசிரியராய் இருந்தவர். இவர் எழுதிய வேறு நூல்கள் இரட்சணிய மனோகரம், இரட்சணியக் குறள் என்பன.

### அருஞ்சொற்பொருள் :

நெறி-வழி, நவை-குற்றம், இன்னல்-துன்பம், இகல்-பகைமை. செகுத்திடும்-அழித்திடும், உன்னதத்து-உயர்ந்த நிலையில், உய்த்திடும்-கொண்டு சேர்த்திடும்.

### ஆசிரியர் வரலாறு :

6. ஆசிரியர் வேதநாயகம் பிள்ளை. இவர் 19-ஆம் நூற்றுண்டுப் புலவர்; கத்தோலிக்கக் கிறிஸ்தவ மதத்தினர்; மாயூரத்தில் ஜில்லா முனி

சிப்பாய் இருந்தவர்; நல்ல தமிழ் அறிவு பெற்றவர். இவர் எழுதிய நூல்கள் பிரதாப முதலியார் சரித்திரம், பெண்மதி மாலை, சர்வசமய சமரசக் கீர்த்தனை முதலியன.

### அருஞ்சொற்பொருள் :

அகவிருள்-மனவிருள், நல்கும் - கொடுக்கும், பவம்-பாவம் அறம்-புண்ணியம், தியாகத் தோன்றல்—ஆசிரியர்.

### கேள்விகள் :

1. 'அஞ்சு' என்னும் தொகைச்சொல் எவற்றைக் குறிப்பிடுகிறது?
2. 'நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே' என்று கூறுவதால் நாம் செய்ய வேண்டுவது யாது ?
3. நாராயண மந்திரம் எவ்வெவற்றைத் தரும் ?
4. அருணகிரியார் முருகப் பெருமானை வேண்டும் வரம் யாது ?
5. ஏசு நாமத்தின் மகிமை யாது ?
6. கலைமகள் எங்கெங்கு நிறைந்துள்ளாள்?
7. குமரகுருபரர் வேண்டும் வரம் யாது ?
8. இப்பாடல் எப்பொழுது பாடப்பட்டது ?
9. தியாகத் தோன்றல் யார் ?
10. அத்தோன்றல் செய்யும் நன்மைகள் யாவை ?

### பயிற்சி :

1. தேவாரம் பாடிய மூவர் பயர்களைக் குறிப்பிடு.
2. திவ்வியப் பிரபந்தம் என்பது இங்கு எதனைக் குறிக்கும் ?
3. பஞ்சாட்சர மந்திரம், அஷ்டாக்ஷர மந்திரம்—பெயர்க் காரணங்களைப் புலப்படுத்து.
4. 'ஞானசத்தினிபாதம்'—இத்தொடர்க்குப் பொருள் கூறு;
5. இரட்சணிய யாத்திரிகம், தேவாரம்-இவற்றைக் குறித்துச் சிறு குறிப்பு எழுது.
6. குமரகுருபரர் பாடிய சில நூல்களைக் குறிப்பிடு.
7. ஐம்பெரும்பூதங்கள் இன்ன என எழுதிக்காட்டு.
8. வேதநாயகம் பிள்ளை எழுதிய உரைநடை நூற்பெயரைக் கூறு.

# II. நீதிப்பாக்கள்

## 1. திருக்குறள்

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. 1

உளரென்னும் மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர். 2

செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்; அச்செல்வம்
செல்வத்து ளெல்லாம் தலை. 3

அறிவுடையா ரெல்லா முடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர். 4

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை, எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். 5

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்,
வன்மையு ளெல்லாம் தலை. 6

நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு. 7

எண்ணித் துணிக கருமம்; 'துணிந்தபின்
எண்ணுவம்; என்ப திழுக்கு. 8

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். 9

கொக்கொக்க கூம்பும் பருவத்து; மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. 10

தொடங்கற்க வெவ்வினையும் எள்ளற்க முற்றும்
பின்னல் லது. 11

பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல். 12

இதனை யிதனு னிவன்முடிக்கு மென்ருய்ந்
ததனை யவன்கண் விடல். 13

காக்கை கரவாக் கரைந்துண்ணும்; ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள. 14

அச்ச முடையார்க் கரணில்லை; ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 15

வானேக்கி வாழு முலகெல்லாம்; மன்னவன்
கோனேக்கி வாழுங் குடி. 16

ஆபயன் குன்றும், அறுதொழிலோர் நூன்மறப்பர்,
காவலன் காவா னெனின். 17

கடுஞ்சொல்லன் கண்ணில னுயின், நெடுஞ்செல்வம்
நீடின்றி யாங்கே கெடும். 18

கண்ணிற் கணிகலங் கண்ணேட்டம்; அஃதின்றேல்
புண்ணென் றுணரப் படும். 19

எல்லார்க்கு மெல்லாம் நிகழ்பவை, எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் ரெழில். 20

ஆக்க மதர்வினுய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை. 21

குடியென்னுங் குன்ரு விளக்கம், மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும். 22

முயற்சி திருவினை யாக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 23

இன்பம் விழையான், இடும்பை யியல்பென்பான்,
துன்ப முறுத லிலன். 24

தெரிதலும் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. 25

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். 26

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். 27

எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். 28

தூங்குக தூங்கிச் செயற்பால ; தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 29

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. 30

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். 31

அடுத்தது காட்டும் பளிங்குபோல், நெஞ்சங்
கடுத்தது காட்டும் முகம். 32

நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. 33

கற்றருள் கற்ற ரெனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 34

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. 35

உயர்வகலந் திண்மை பெருமையிந் நான்கன்
அமைவர ணென்றுரைக்கும் நூல். 36

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் ; செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு. 37

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. 38

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை எடுத்து. 39
உடுக்கை யிழந்தவன் கைபோல, ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 40
ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை, கடைமுறை
தான்சாந் துயரந் தரும். 41
அழிவந்த செய்யினு மன்பரு ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். 42
கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 43
தொழுதகை யுள்ளும் படையொடுங்கும்; ஒன்னார்
அழுதகண் ணீரு மனைத்து. 44
ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையின் பேதையா ரில். 45
வெண்மை யெனப்படுவ தியாதெனின், 'ஒண்மை
உடையம்யாம்!' என்னுஞ் செருக்கு. 46
இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின். 47
அஞ்சு மறியா னமைவில னீகலான்
தஞ்ச மெளியன் பகைக்கு. 48
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. 49
வாள்போல் பகைவரை யஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 50

—திருவள்ளுவர்

**ஆசிரியர் வரலாறு :**

திருவள்ளுவர் தமிழ் நாட்டில் தலை சிறந்த புலவர். இவர் எழுதியுள்ள நூலான திருக்குறளைப் புகழாதவர் எவரும் இலர். இவர் கி. பி.

இரண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். இவர்க்கு மயிலேயில் ஒரு கோயிலும் உண்டு.

அருஞ்சொற்பொருள் :

1. வேண்டுதல் வேண்டாமை இலான்-கடவுள், இடும்பை-துயர். 2. மாத்திரையர் - அளவுடையர், பயவா - பயன்படாத, களர்-விளைவுக்குரியதல்லாத நிலம். 5. வைத்தூறு - வைக்கோற்போர். 6. தமரா-தம் உறவினராக. 14. அன்ன நீரார் - அத்தன்மையுடையார். 15. அரண்-காவல், பொச்சாப்பு-மறதி. 16. வான்-மழை. 17. அறுதொழிலோர்-வேட்டல், வேட்பித்தல், இரத்தல், ஈதல், ஓதல், ஓதுவித்தல் ஆகிய ஆறு தொழில் புரியும் அந்தணர். 18. கண்ணிலன்-தாட்சணியம் இல்லாதவன். 19. கண்ணேட்டம்-தாட்சணியம். 22. அதர்-வழி, ஆக்கம்-செல்வம், உடையான் உழை - உடையவனிடத்தில். 21. மடி-சோம்பல், மாசு-குற்றம். 23. திருவினை-செல்வத்தை, முயற்றின்மை-சோம்பல், இன்மை-தரித்திரம். 24. விழையான்-விரும்பாதவன், இடும்பை-துன்பம். 25. ஒருதலையா-நிச்சயமாக, அமைச்சு-மந்திரி. 26. கேளார்-பகைவர், வேட்ப-விரும்ப. 27. இளிவந்த-இழிவான செயல்கள். காட்சியவர்-அறிவுடையவர். 29. தூங்காது-சோம்பி இராமல். 30. செறிவு-சேர்க்கை. 31. இகல்-வன்மை. 32. கடுத்தது - கோபமாய் உள்ளதை. 33. முந்து-முன்னே, கிளவா-பேசாத, செறிவு-அடக்கம். 34. செல - கேட்பவர்களுக்கு விளங்கும்படி. 35. உறுபசி-பெரும்பசி, ஓவா-நீங்காத, பிணி-நோய், செறுபகை-அழிக்கும் பகைவர். 36. அரண்-கோட்டைமதில், நூல்-சாஸ்திரம். 37. இல்லாரை-ஏழைகளை. 38. கூற்று-இயமன், உடன்று-கோபங்கொண்டு, ஆற்றல் - வன்மை, படை-சேனை. 39. விழுப்புண்-போரில் மார்பிலும், முகத்திலும் ஏற்கும் புண். 40. உடுக்கை-ஆடை, இடுக்கண் - துன்பம். 41. கேண்மை-நட்பு. 43. இன்னது - துன்பமானது, வினை-செயல். 44. படை-ஆயுதம், ஒன்னுர்-பகைவர், அனைத்து-அத்தகையது. 45. பேதையார்-அறிவீனர். 46. வெண்மை-அறியாமை, ஒண்மையுடையம்-அறிவுடையவர்களாய் இருக்கிறேம். 47. இகல்-மாறுபாடு. 48. அஞ்சும்-அஞ்சுதலும். 49. வில்லேருழவர்-வீரர், சொல்லேருழவர்-புலவர். 50. கேள்-நண்பர்.

**கேள்விகள் :**

1. கடவுள் இயல்பு யாது ?
2. அறிவுடையார் அறிவில்லார் ஆகிய இவ்விருவரின் வேறுபாடு யாது ?
3. சிக்கனமாக வாழ வேண்டுமென்பதை ஆசிரியர் எங்ஙனம் அறிவுறுத்தியுள்ளார் ?
4. கொக்கின் இயல்பும் காக்கையின் இயல்பும் யாவை ?
5. தீய சொல்லால் ஏற்படும் தீங்குகள் எவை ?
6. முயற்சி, முயற்சியின்மைகளால் ஏற்படும் நிலைகள் எவை ?
7. பேசும் முறை யாது ?
8. எவன் வினைக்குச் செல்லுதல் வேண்டும் ?
9. அரசனிடம் எப்படி ஒழுகுதல் வேண்டும் ?
10. நாடு எவ்வாறு இருக்க வேண்டும் ?
11. படையின் இலக்கணம் யாது ?
12. ஏன் பகைவரை நம்புதல் கூடாது ?
13. வில்லேர் உழவர், சொல்லேருழவர் யார் ?
14. யாரைக் கண்டு அஞ்சுதல் வேண்டும் ?
15. வெண்மை எனப்படுவது யாது ?

**பயிற்சி :**

1. கல்லாதவர், வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை,இனத்தியல்ப தாகும் அறிவு, கோல் நோக்கி வாழும் குடி, முகம் கடுத்தது காட்டும், நல்ல நட்பு-இவற்றிற்குக் கொடுக்கப்பட்ட உவமைகளை எடுத்துக் காட்டு.
2. அறுதொழில், அரசனுக்குரிய நால்வகை இயல்பு, மூன்றன் செறிவு—இங்குக் கூறப்பட்ட தொகைச் சொற்களுக்கு விளக்கம் கூறு.
3. 1. 'தம்மிற்பெரியார்', 2. 'குடி என்னும்', 3. 'இடுக்கண்படினும்', 4. 'தூங்குக தூங்கி', 5. 'அஞ்சுமறியான்' - இந்த முதலையுடைய குறட்பாக்களை எழுதிப் பதவுரையும் எழுது.

## 2. நீதி வெண்பா

### பிறப்பிடத்தால் பெருமை குறையாதவை

தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா-தாமழல்மற்
றெங்கே பிறந்தாலும் எள்ளாரே ; நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என் ? 1

### அன்பால் பகைவரிடமும் அவாவின அடையலாம்.

பகைசேரும் எண்ணுன்கு பற்கொண்டே நன்னு
வகைசேர் சுவையருந்து மாபோல், —தொகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித் தவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில். 2

### பாம்பினும் கொடியர் துட்டர்.

துர்ச்சனரும் பாம்பும் துலையொக்கி னும்பாம்பு
துர்ச்சனரை ஒக்குமோ ? தோகையே !—துர்ச்சனர்தாம்
எந்தவிதத் தாலும் இணங்காரே ; பாம்புமணி
மந்திரத்தால் ஆமே வசம். 3

### தனித்துண்ணல் தாழ்வானது.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லென்றிவரோ
டின்புறத்தான் உண்டல் இனிதாமே ;—அன்புறவே
தக்கவரை இன்றித் தனித்துண்டல், தான்கவர்மீன்
கொக்கருந்தல் என்றே குறி. 4

### சபைக்கு அழகு கற்றவனே.

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும்நூல்
வல்லான் ஒருவனையே மானுவரோ ?—அல்லாரும்
எண்ணிலா வான்மீன் இலகிடினும், வானகத்தோர்
வெண்ணிலா ஆமோ ? விளம்பு. 5

## ஆசிரியர் வரலாறு :

இந்நூல் ஆசிரியர் யார் என்பது அறுதியிட்டு உறுதியாகக் கூறு தற்கு இல்லை. நீதி முறைகள் வெண்பாவால் பாடப்பட்டிருத்தலின், இந் நூல் **நீதி வெண்பா** எனப் பெயர் பெற்றது.

## அருஞ்சொற்பொருள்:

1. சவரம்-சாமரம், எள்ளார் - இழிவாகக் கருத மாட்டார், மரு-மணம். 3. துலை-தராசு, தோகையே-மயில் போலும் சாயலுடைய பெண்ணே, துர்ச்சனர் - துஷ்டர். 4. தென்புலத்தார் - பிதுர்க்கள், விருந்து-புதியவராய் வந்தவர், ஒக்கல்-உறவினர். 5. மானுவரோ-ஒப்பாவரோ, அல்-இரவில், ஆரும்-(வானில்) பொருந்தும், வான்மீன்-ஆகாயத்திலுள்ள நட்சத்திரம், இலகிடினும்-ஒளி விட்டு விளங்கி னும், விளம்பு-சொல்.

## கேள்விகள் :

1. உலகோர் எவ்வெவற்றை எள்ளார் ?
2. நல்லோர் எப்படி நடந்துகொள்வர் ?
3. துர்ச்சனரும் பாம்பும் எம்முறையில் ஒப்பாவர் ? எம்முறையில் வேறுவர் ?
4. நாம் எவ்வெவர்க்குப் பங்கிட்டு உண்ண வேண்டும் ?
5. தனித்து உண்பது எதைப் போன்றது ?
6. யார் கற்றவர்க்கு ஒப்பாவார் ?
7. வான் மீன்கள் எதற்கு ஒப்பாகா ? ஏன் ?

## பயிற்சி:

1. தாமரை, பொன், முத்து, சவரம், கோரோசனை, பால், தேன், பட்டு, புனுகு, சவ்வாது, நெருப்பு ஆகிய இவற்றின் பிறப் பிடத்தைக் குறிப்பிடு.
2. முதற்பாட்டின் கருத்தை எழுது.
3. 'நல்லவர் பகைவரிடம் அன்பு காட்டித் தம் தொழிலை முடித்துக் கொள்ள வேண்டும்,' என்பதற்குரிய உவமையை எழுது.

4. கற்ருர், கல்லார்—இவர்களுக்கு உவமைகளாகக் காட்டப்பட்ட பொருள்களைக் கூறு.

5. பிரித்து எழுது:—சவ்வாதாமழல், மற்றெங்கே, நன்ளு, எண்ணுன்கு, எண்ணிலா, வெண்ணிலா.

## 3. இனிது நாற்பது

ஏவது மாரு இளங்கிளைமை முன்னினிதே ;
நாளும் நவைபோகான் கற்றல் மிகஇனிதே ;
ஏருடையான் வேளாண்மை தான்இனி தாங்கினிதே
தேரிற்கொள் நட்புத் திசைக்கு. 1

சலவரைச் சாரா விடுதல் இனிதே ;
புலவர்தம் வாய்மொழி போற்றல் இனிதே ;
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாம்
தகுதியால் வாழ்தல் இனிது. 2

பிறன்கைப் பொருள்வெளவான் வாழ்தல் இனிதே ;
அறம்புரிந் தல்லவை நீக்கல் இனிதே ;
மறந்தேயும் மாணு மயரிகண் சேராத்
திறந்தெரிந்து வாழ்தல் இனிது. 3

ஆற்ருனை ஆற்றென் றலையாமை முன்னினிதே ;
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே ;
ஆக்கம் அழியினும் அல்லவை கூருத்
தேர்ச்சியில் தேர்வினிய தில். 4

நன்றிப் பயன்தூக்கி வாழ்தல் நனிஇனிதே ;
மன்றிற் கொடும்பா டுரையாத மாண்பினிதே;
'அன்றறிவார் யார்?'என் றடைக்கலம் வெளவாத
நன்றியில் நன்கினிய தில். 5

—பூதஞ்சேந்தனுர்

## ஆசிரியர் வரலாறு :

**இனிது நாற்பது** என்னும் நூலைப் பாடியவர் **பூதஞ்சேந்தனார்** என்பவர். இவர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் விளங்கிய புலவர்; மதுரையில் வாழ்ந்தவர். மக்கள் மேற்கொள்ள வேண்டிய இனிய குணங்களை ஒவ்வொரு வெண்பாவிலும் அமைத்து நாற்பது பாடல்களைப் பாடி இருத்தலின், இந்நூல் **இனிது நாற்பது** எனப் பெயர் பெற்றது.

## அருஞ்சொற்பொருள் :

1. ஏவது - கட்டளை இடுவதை, மாறு - செய்ய மறுக்காத, இளங்கிளைமை-சிறுவர், நவை போகான்-வீணே கழிக்காதவனாய். 2. சலவர்-வஞ்சகர், மலர் தலை ஞாலத்து - பரந்த உலகத்தில். 3. வௌவான் - கவர்ந்துகொள்ளாதவனாய், அல்லவை-தீயவற்றை, மாணா-நற்குண நற்செய்கையில்லாத, மயரிகண்-அறிவில்லாதவனிடத்தில், 4. ஆற்றானை-ஒன்றும் செய்யாதானை, அலையாமை-வருத்தாதிருத்தல், கூற்றம்-இயமன், ஆக்கம்-செல்வம். 5. தூக்கி-ஆராய்ந்து, நனி-மிகவும், மன்றில் - நியாய சபையில், கொடும்பாடு - மாறுபாடாக, மாண்பு-மாட்சிமை, அடைக்கலம்-அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருள், வௌவாத-கவர்ந்துகொள்ளாத.

## கேள்விகள் :

1. நாம் எப்படிக் கற்றல் வேண்டும் ?
2. உலகில் எவ்வாறு வாழ்தல் இனிது ?
3. நாம் எந்தெந்தத் திறம் தெரிந்து வாழ வேண்டும் ?
4. எதனை நாம் மனத்தில் கொண்டு வாழ வேண்டும் ?
5. எதனைக் கவர்தல் கூடாது ?

## பயிற்சி :

1. இனிய குணங்களை எல்லாம் எடுத்துக் காட்டு.
2. பிரித்துக் காட்டு:—
   முன்னினிது, இனிதாங்கினிதே, தேரிற்கொள் நட்பு, மன்னுயிர்க்கெல்லாம்.

## 4. இன்னா நாற்பது

கொடுங்கோல் மறமன்னர் கீழ்வாழ்தல் இன்னா;
நெடுநீர் புணையின்றி நீந்துதல் இன்னா;
கடுமொழி யாளர் தொடர்பின்னா; இன்னா
தடுமாறி வாழ்தல் உயிர்க்கு. 1

பொருளுணர்வார் இல்வழிப் பாட்டுரைத்தல் இன்னா;
இருள்கூர் சிறுநெறி தாம்தனிப்போக் கின்னா;
அருளில்லார் தம்கண் செலவின்னா; இன்னா
பொருளில்லார் வண்மை புரிவு. 2

ஆன்றவிந்த சான்றோருள் பேதை புகல்இன்னா;
மான்றிருண்ட போழ்தின் வழங்கல் பெரிதின்னா;
நோன்றவிந்து வாழாதார் நோன்பின்னா; ஆங்கின்னா
ஈன்றாளை ஓம்பா விடல். 3

பெரியாரொ டியாத்த தொடர்விடுதல் இன்னா;
'அரியவை செய்தும்' எனஉரைத்தல் இன்னா;
பரியார்க்குத் தாமுற்ற கூற்றின்னா; இன்னா
பெரியார்க்குத் தீய செயல். 4

நெடுமரம் நீள்கோட் டுயர்பாய்தல் இன்னா;
கடுஞ்சின வேழத் தெதிர்சேறல் இன்னா;
ஒடுங்கி யரவுறையும் இல்லின்னா; இன்னா
கடும்புலி வாழும் அதர். 5

—கபிலர்

### ஆசிரியர் வரலாறு :

**'இன்னா நாற்பது'** என்பது மக்களுக்குத் தீமை தரும் குணங்கள் இன்னின்ன என ஒவ்வொரு வெண்பாவிலும் கூறப்பட்ட நாற்பது வெண் பாவால் முடிந்த ஒரு நூல். அதனாலேதான் இந்நூல் இப்பெயர் பெற்றது. இந்நூலாசிரியர் **கபிலர்**; அந்தண குலத்தவர். கி.பி. 2-ஆம் நூற்றாண்டுப் புலவர்.

### அருஞ்சொற்பொருள் :

1. மற மன்னர்-கோபமிக்க அரசர், இன்னு-தீது, புணை-தெப்பம். 2. கூர்-மிகுந்த, நெறி-வழியே, செலவு-போதல், வண்மை புரிவு-தருமம் செய்தல். 3. ஆன்று - கல்வி கேள்விகளால் நிறைந்து, அவிந்த-அடங்கிய, சான்றோருள்-அறிஞர்களிடையே, பேதை-அறிவற்றவன், மான்று-மயங்கி, வழங்கல்-போவது, நோன்று-தவம் செய்து, ஈன்றாளை-தாயை, ஓம்பாவிடல்-காப்பாற்றாமல் விட்டுவிடுதல். 4. யாத்த-சேர்த்திருந்த, தொடர்-நட்பு, அரியவை - செய்ய முடியாதனவாகிய அருமையான காரியங்களை, பரியார்-இரக்கம் காட்டாதவர், உற்ற கூற்று-அடைந்த துன்ப மொழிகள். 5. கோடு-கிளை, சினம்-கோபம், வேழம் - யானை, சேறல் - செல்லுதல், உறையும் - வாழும், அதர்-வழி.

### கேள்விகள் :

1. யார் தொடர்பை விடுதல் வேண்டும் ?
2. யார் தொடர்பைக் கொள்ளுதல் வேண்டும் ?
3. யாரிடத்தில் செல்லுதல் கூடாது ?
4. எந்நெறிகளில் செல்லுதல் கூடாது ?

### பயிற்சி :

1. இன்னாதனவற்றைத் தொகுத்து எழுது.
2. இப்பாடற்பகுதியில் சிறுவர் விளையாட்டாகச் செய்யும் இரு செயல்களைக் குறிப்பிடு.

## 5. கோவிந்த சதகம்

### கொடுத்தாற் குறை வாராது.

எடுத்தாலும் ஊறும் இறைத்தாலும்
    ஊறும் இடைநடுவே
தடுத்தால் தடைபடு மோமணற்
    கேணித்தண் ணீரதுபோல்

அடுத்தாரை வாழ்விக்கச் செல்வமுண்
டானவர் அன்புடனே
கொடுத்தாற் குறைவரு மோ?அச்சு
தாநந்த கோவிந்தனே! 1

## பொல்லாக் குணத்துக்கு மருந்து இல்லை.

உணத்தக்க நன்மருந் தாற்பிணி
போமென் றுலகிலுள்ளோர்
பணத்துக்குக் கொண்டு பரிகரிப்
பார்விடம் பாய்ந்துசெத்த
பிணத்துக்கும் பச்சிலை உண்டு;புல்
லோர்க்குப் பிறக்கும்பொல்லாக்
குணத்துக்கு நன்மருந் தேதச்சு
தாநந்த கோவிந்தனே! 2

## பொற்குடத்துக்குப் பொட்டழகேன்?

சடத்துக் கழகென்பர் தான்கற்ற
கல்வி; தகுமதல்லால்,
இடத்தக்க பூடணம் தானணி
யாவிடில் ஏசுவரோ?
புடத்துட் படத்தங்கக் கட்டி
யுருக்கிப் புதுக்கியபொற்
குடத்துக்குப் பொட்டழ கேன்?அச்சு
தாநந்த கோவிந்தனே! 3

## கங்கையில் மூழ்கினாலும் காக்கை அன்னமாகாது.

ஒளித்தாலும் துர்க்குணம் போமோ?
குருவுப தேசமந்த்ரம்
அளித்தாலும் புல்லர்நல் லோராவ
ரோ?சென் றடுத்தடுத்துக்

களித்தா யிரந்தரம் காகம்
முழுகிக்கங் காநதியில்
குளித்தாலும் அன்னமொவ் வாதச்சு
தாநந்த கோவிந்தனே ! 4

## கொடிக்குக் காய் கனமா ?

அடித்தமு தூட்டி வளர்த்திடும்
தாய்தன் அகமெலிவாய்
மிடித்திடி னும்பெற்ற பிள்ளை
களைக்கை விடநினையாள் ;
பொடித்தெழும் பிஞ்சு திரளாயும்
பாரம் பொறுக்கும்படர்
கொடிக்கென்ன காய்கன மோ ?அச்சு
தாநந்த கோவிந்தனே ! 5

### ஆசிரியர் வரலாறு :

**'சதகம்'** என்பது நூறு பாடல்கள் அடங்கிய ஒரு வகை நூல். இதில் காணப்படும் பாடல்தோறும் 'கோவிந்தனே' என்று முடிதலின், இது **கோவிந்த சதகம்** என்று பெயர் பெற்றது. இதனை இயற்றியவர் **வெண்மணி நாராயண பாரதியார்** என்பவர். இவரைப்பற்றிய ஏனைய வரலாறுகளை அறிந்துகொள்ளக்கூடிய சாதனங்கள் இல்லை.

### அருஞ்சொற்பொருள்:

1. தடுத்தால்-தடைபடுத்தினுல், கேணி-கிணறு, அச்சுதன்-அழிவில்லாதவன். 2. பிணி-நோய், பரிகரிப்பர்-நீக்குவர், சடம்-உடம்பு, பூடணம்-நகை. 4. புல்லர்-அற்பர். 5. மிடித்திடினும்-ஏழையாய்ப் போனுலும்.

### கேள்விகள்:

1. மணற்கேணியின் இயல்பு யாது ?
2. எவர் செல்வம் குறையாது ?

3. எதற்கு மருந்தில்லை ? எவற்றிற்கு மருந்துண்டு ?
4. உடலுக்குப் பூஷணம் எது ?
5. எக்குடத்திற்குப் பொட்டு வேண்டா ?
6. புல்லர் இயல்பு யாது ?
7. செடிக்குக் காய் கனமாகாது என்னும் உவமை, எதை விளக்கக் கூறப்பட்டுள்ளது ?

பயிற்சி:

1. புடத்துட்பட, அச்சுதாநந்தன்—பிரித்துக் காட்டு.
2. 'ஏழைகட்கு உதவினல் செல்வம் குறையாது,' என்பதை உவமை கூறி விளக்கு.
3. 'புல்லர் குணம் மாருது' என்பதை விளக்கக் காட்டப்பட்ட இரண்டு உவமைகளை எடுத்து எழுது.
4. 'காக்கை கங்கையில் குளித்தாலும் அன்னமாகாது,' என்னும் உவமையால் விளக்கப்பட்ட உவமேயத்தை எழுது.

# III. கதைப் பாக்கள்

## 1. காகம் நாகத்தைக் கொன்ற கதை

கோடுறு சினையில் காகம் கூடுவைத் தனேக காலம்
பேடொடு கூடி வாழும் பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம் பொன்றங் கதுபெறு முட்டை எல்லாம்
நாடியே குடித்துப் போட, நலிந்துளம் மெலிந்து வாடி 1

தன்னுயிர்ப் பாங்க ஞன சம்புகன் அருகு போயங்(கு)
'என்னசெய் குவன்நான் ?' என்ன, 'இதைக்கொலல் [அரிதோ ? நீபோய்
மன்னவன் தேவி ஆடும் மஞ்சனச் சாலை புக்குப்
பொன்னணி கொண்டு வந்து, போடுக பொந்தில்,' என்ன 2

காகம்அப் படியே செய்யக் காவலன் ஏவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை ஈர்ந்தனர்; ஈரும் போதில்
நாகமங் கிருந்து சீற, நறுக்கினர் இருதுண் டாக;
ஆகையால், உபாயத் தாகா தில்லையென அறையும் பின்னும். 3

பஞ்சதந்திரப் பாடல்] [வீரமார்த்தாண்ட தேவர்

### ஆசிரியர் வரலாறு:

இப்பாடல்கள் **பஞ்சதந்திரம்** என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. ஆசிரியர் பெயர் வீரமார்த்தாண்ட தேவர் என்பது மட்டும் தெரிகின்றதேயொழிய, அவரைப்பற்றிய வேறு குறிப்பு யாதொன்றும் தெரிந்தபாடில்லை.

### அருஞ்சொற்பொருள் :

1. கோடுறுசினை-நீண்ட மரக்கிளை, நலிந்து-வாட்டமுற்று. 2. பாங்கன்-தோழன், சம்புகன்-நரி, ஆடும்-குளிக்கும், மஞ்சனச்சாலை-குளியலறை; அணி-நகை, 3. ஈர்ந்தனர்-அறுத்தனர், அறையும்-சொல்லும்.

### கேள்விகள்:

1. காகம் எங்கு வாழ்ந்து வந்தது ?
2. காகம் இட்ட முட்டைகள் என்னவாயின ?
3. 'என்ன செய்குவன் நான் ?'—சந்தர்ப்பம் யாது ?

### பயிற்சி:

1. இக்கதையைச் சுருக்கி எழுது.
2. இதிலிருந்து அறிந்துகொண்ட நீதியை எடுத்துக் காட்டு.

## 2. உண்மையுள்ள வேலையாள்

நாளாக நாளாக நம்மிடத்தே கண்ணனுக்குப்
பற்று மிகுந்துவரப் பார்க்கின்றேன்; கண்ணனால்
பெற்றுவரும் நன்மையெலாம் பேசி முடியாது.
கண்ணை இமையிரண்டும் காப்பதுபோல் என்குடும்பம்

வண்ணமுறக் காக்கின்ருன் ; வாய்முணுத்தல் கண்டறியேன்.
வீடு பெருக்குகிருன் ; வீதிசுத்த மாக்குகிருன் ;
தாதியர்செய் குற்றமெலாம் தட்டி அடக்குகிருன் ;
மக்களுக்கு வாத்தி, வளர்ப்புத்தாய், வைத்தியனுய்

ஒக்கநயம் காட்டுகின்ருன் ; ஒன்றும் குறைவின்றிப்
பண்டமெலாம் சேர்த்துவைத்துப் பால்வாங்கி, மோர்வாங்கிப்
பெண்டுகளைத் தாய்போலப் பிரியமுற ஆதரித்து,
நண்பனுய், மந்திரியாய், நல்லா சிரியனுமாய்ப்

பண்பிலே தெய்வமாய்ப் பார்வையிலே சேவகனுய்,
எங்கிருந்தோ வந்தான்! 'இடைச்சாதி' என்றுசொன்னுன்.
இங்கிவனை யான்பெறவே என்னதவம் செய்துவிட்டேன் !
கண்ணன் எனதகத்தே கால்வைத்த நாள்முதலாய்,
எண்ணம் விசாரம் எதுவு மவன்பொறுப்பாய்ச்
செல்வம், இளமாண்பு, சீர்சிறப்பு, நற்கீர்த்தி,

கல்வி, அறிவு, கவிதை, சிவயோகம்,
தெளிவே வடிவாம் சிவஞானம் என்றுசொலும்
ஒளிசேர் நலமனைத்தும் ஓங்கிவரு கின்றனகாண்!
கண்ணனைநான் ஆட்கொண்டேன் கண்கொண்டேன்
[கண்டுகொண்டேன்.

—பாரதியார்

## ஆசிரியர் வரலாறு :

ஆசிரியர் சுப்பிரமணிய பாரதியார் எட்டையபுரத்தில் அந்தணமரபில் பிறந்தவர். இவர் நல்ல கவிகளைப் பாடும் வன்மையை இளமையிலேயே பெற்றவர். இவர் தமிழ் ஆசிரியராகவும், பத்திரிகையாசிரியராகவும் இருந்தவர். இவர் இருபதாம் நூற்ருண்டுப் புலவர். சென்னைத் திருவல்லிக்

கேணியில் உயிர் நீங்கியவர். இவர் பாடிய பாடல்கள் பல. அவற்றுள் சில கண்ணன் பாட்டு, பாப்பாப் பாட்டு, பாஞ்சாலிசபதம், முரசு பாட்டு என்பன. இப்பகுதி கண்ணன் பாட்டிலிருந்து எடுக்கப்பட்டது.

**அருஞ்சொற்பொருள்:**

வண்ணம்-அழகு, உற-பொருந்த, தாதியர் - தோழிமார். வாத்தி-ஆசிரியர், பண்பு-குணம், அகம்-வீடு, கவிதை-பாட்டு ,சிவயோகம்-சிவனைத் தியானித்திருத்தல், சிவ ஞானம்-சிவனையடையும் அறிவு, கண்-அறிவு.

**கேள்விகள் :**

1. கண்ணன் வேலையில் அமர்ந்த பின் வீட்டை எப்படிக் கவனித்துக்கொண்டான் ?
2. கண்ணன் வீட்டில் உள்ளவருக்கு எவ்வெவ்வாறு இருந்து வந்தான் ?
3. கண்ணனால் பாரதியார் பெற்ற நலன்கள் யாவை ?

**பயிற்சி :**

1. 'கண்ணை இமையிரண்டும் காப்பதுபோல்' இந்த உவமைப் பொருத்தத்தை விளக்கு.
2. 'கண்ணன் ஒரு நல்ல வேலையாள்' என்பதைத் தலைப்பாகக் கொண்டு ஒரு கட்டுரை எழுது.
3. இப்பாடத்திலிருந்து வேலையாள் நடந்துகொள்ள வேண்டிய முறைகளை எடுத்துக் காட்டு.

## 3. எலிப்பெண்

பருந்தெடுத்த பெண்ணெலியும்
　　பருத்தின்வாய் தப்பியங்கே
இருந்தமுனி கரத்தில்விழ,
　　ஏதெனவே நோக்கியவன்,
அருந்தவத்தால் பெண்பிள்ளை
　　யாக்கிமனை யாள்கையில்
'பொருந்தவளர்' எனக்கொடுத்தான் ;
　　பூவையுமங் கதைவளர்த்தாள். 1

அந்தமின்னைப் பலவானுக்
களித்திடுவோம் எனமுனிவன்
சிந்தைசில எண்ணிக்கொடு
செங்கதிரோன் தனையழைத்தே,
'இந்தமின்னை நீகொள்,' என,
இரவியறிந் தெனைமறைக்கும்
முந்தியமே கம்பலவான்!
முனிவ!அவன் கைக்கொடென, 2

மேகத்தை யழைத்'திவளை
விரும்புகநீ' எனமுனிவன்
தாகத்தோ டுரைக்கஅவன்
தானுமறிந் தெனைத்துகளாய்
மாகத்தில் அடிக்குமந்த
வாயுபக வான்பலவான்;
மோகத்தோ டவற்களித்தல்
முனிவ!நன் றென்றலுமே 3

வாயுவையு மழைத் 'திவளை
மணம்புணர்க நீ'என்று
நேயமுடன் இருடிசொல,
நிறைந்திடுமா ருதமறிந்தே,
'தூயவனே! எனைமறைக்கும்
துங்கவரை யேபலவான்;
சேயிழையை அவற்கருளிச்
செய்க'எனச் செப்பிடவே 4

பஞ்சதந்திரப் பாடல்

மலையரையன் தனையழைத்து,
'மங்கைமணம் புணர்க'என,
குலவரையு மறிந்துகொண்டே
குறுமுனிவன் தனைநோக்கி,
'நிலவரையே யெனையறுக்க
நினைக்குமந்த மூடிகமே
பலமுடைய ததற்களித்தல்
பண்பாகும்' எனக்கூற 5

எலியரசன் தனையழைத்தே,
'இவளைமணம் புணர்க'என,
'நலதிவளென் வளையில்வர
நாடின்மணம் புணர்வன்' என,
எலிமகளைத் தவமுனிவன்
எலியரசன் விருப்பம்போல்
எலியுருவ மாக்கிவிட்டான்;
இசைந்தவனும் கொடுபோனன். 6

பஞ்சதந்திரப் பாடல்] [வீரமார்த்தாண்ட தேவர்

ஆசிரியர் வரலாறு :

இந்நூலாசிரியர் வரலாறு முன்னர்க் கூறப்பட்டுள்ளது.

அருசொற்பொருள் :

1. பூவை- திருமகள் போலும் அழகுடைய முனிவர் மனைவி. 2. மின்-மின்னல் போலும் ஒளியுடையபெண், அளித்திடுவோம்-திருமணம் செய்து கொடுப்போம், சிந்தை - மனத்தில், செங்கதிரோன் - சூரியன், இரவி - சூரியன். 3. தாகத்தோடு - விருப்பத்தோடு, துகளாய்-தூளாய், மாகத்தில்-ஆகாயத்தில், வாயு-காற்று. 4. இருடி-முனி, மாருதம் - காற்று, தூயவனே - பரிசுத்தமான முனிவனே. துங்கவரை - உயரிய மலை.

சேயிழை - நல்ல நகையணிந்த பெண். 5. அரையன் - அரசன், குலவரை-மேன்மை பொருந்திய மலை, மூடிகம்-எலி, பண்பு-முறைமை.

**கேள்விகள்:**

1. எலி எப்படிப் பெண்ணுருப் பெற்றது ?
2. யார் யார் எலிப்பெண்ணை மணக்க மறுத்தனர் ?
3. இவ்வாறு மறுத்தவர் எவ்வெக்காரணம் காட்டினர் ?
4. கடைசியில் எலிப்பெண்ணை மணந்தது எது ? அஃது எப்படி மணந்தது ?

பயிற்சி :

1. இப்பாடல்களில் அமைந்த கதையைச் சுருக்கி எழுது.
2. இக்கதையால் அறியும் நீதியை எடுத்துக் காட்டு.

# IV. பல்சுவைப் பாக்கள்

## வேற்றுமை வேண்டா.

மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ ?
காற்றும் சிலரை நீக்கி வீசுமோ ?
மாநிலம் சுமக்க மாட்டேன் என்னுமோ ?
திருவும் வறுமையும் செய்தவப் பேறும்,
சாவதும் வேறிலை தரணி யோர்க்கே;
குலமும் ஒன்றே; குடியும் ஒன்றே;
இறப்பும் ஒன்றே; பிறப்பும் ஒன்றே;
வழிபடு தெய்வமும் ஒன்றே; ஆதலால்,
முன்னோ ருரைத்த முறைதவ றுமல்,
எந்நா ளாயினும் இரப்பவர்க் கிட்டுப்
புலையும் கொலையும் களவும் தவிர்ந்து,
நிலைபெற அறத்தில் நிற்பதை அறிந்து,

ஆணும் பெண்ணும் அல்லதை யுணர்ந்து,
பேணி யுரைப்பது பிழையெனப் படாது,
சிறப்பும் சீலமும் அல்லது
பிறப்புநலந் தருமோ? பேதை யீரே! 1

—கபிலர்

## அம்மானை

தென்புலியூர் அம்பலவா! தில்லைச்சிற் றம்பலத்தே
வெம்புலியொன் றெந்நாளும் மேவுங்காண் அம்மானை;
வெம்புலியொன் றெந்நாளும் மேவுமே யாமாகில்,
அம்பலத்தை விட்டே அகலாதோ அம்மானை!
ஆட்டைவிட்டு வேங்கை அகலுமோ அம்மானை! 2

—இரட்டையர்

## ஏசல்

நாட்டுக்குள் இரந்தும்பசிக் காற்றமாட்டாமல்—வாரி
நஞ்சையெல்லாம் உண்டானுங்கள் நாதன்அல்லோடி!
மாட்டுப்பிற கேதிரிந்தும் சோற்றுக்கில்லாமல்—வெறும்
மண்ணையுண்டான் உங்கள்முகில் வண்ணன்அல்லோடி! 3

—முக்கூடற்பள்ளு

## நாட்டுச் சிறப்பு

செந்நெற் கதிர்பெருத்துச் செழித்து வளர்கிறதும்
கன்னல் கொழுத்துக் காட்டை மணப்பதுவும்
வன்புலி யும்பசுவும் மருவியே வாழ்கிறதும்
காடை கவுதாரி காட்டுப்புருக் கூவுவதும்
பேடை மயில்கூடிப் பிரிய மடைகிறதும்
புன்னை பலாச்சோலை பொருந்தி நிறைந்திடவும்

சந்தனச் சோலைகளும் சாதிமல்லி பூத்திடவும்
மந்தாரை கோங்கு மல்லிகைப்பூச் சாலைகளும்
தாமரைப் பொய்கைகளும் தடாகமுள்ள ஏரிகளும்
வாமமுறும் கானுறும் வம்புகளும் என்சொல்வேன்! 4

## கைத்தொழில்

மண்ணெ டுத்துக் குடங்கள்செய் வீரே;
மரத்தை வெட்டி மனைசெய்கு வீரே;
உண்ணக் காய்கனி தந்திடு வீரே;
உழுது நன்செய் பயிரிடு வீரே;
எண்ணெய் பானெய் கொணர்ந்திடு வீரே;
இழையை நூற்றுநல் லாடைநெய் வீரே;
விண்ணி னின்றெமை வானவர் காப்பார்;
மேவிப் பார்மிசைக் காப்பவர் நீரே. 5

—பாரதியார்

## சுதந்தரம்

மீன்கடலே எழுந்தாலும் விண்சுடரே விழுந்தாலும்
மான்மலைகள் சாய்ந்தாலும் மண்கம்ப மானாலும்
ஊன்கொந்திக் கண்டதுண்டம் ஒன்னலர்கள் செய்தாலும்
வான்மருவ நேர்ந்தாலும் மறப்பதன்று சுதந்தரமே. 6

—திரு. வி. க.

### ஆசிரியர் வரலாறு :

1. **கபிலர்**, சங்ககாலப் புலவர்களுள் ஒருவர்; அந்தணமரபினர்; பாரியின் சிறந்த நண்பர்; பரணரும் இவருக்குரிய நண்பராவர். இதனால், **கபிலபரணர்** என்னும் தொடரும் வழங்கப் பெறுகிறது. இவர் பல தனிப்பாடல்களைப் பாடியுள்ளார்; தனித்தனி நூல்களையும் பாடியுள்ளார். இன்னா நாற்பது என்னும் நூலைப் பாடியவரும் இவரே.

### அருஞ்சொற்பொருள் :

மாரி-மழை, வரைந்து-நீக்கி, மா-பெரிய, திரு–செல்வம், வறுமை-தரித்திரம், பேறு-பாக்கியம், தரணியோர்-பூமியில் உள்ளோர், இரப்பவர்-யாசகம் செய்பவர், புலே–புலால் புசித்தல். அல்லதை-தவிர, பேணி-போற்றி, சீலமும்-ஒழுக்கமும், பேதையீர்-அறிவீனர்களே.

### கேள்விகள்:

1. உலகில் எல்லாருக்கும் பொதுப்பட உதவும் இயற்கைப் பொருள்கள் எவை ?
2. எவை எவை எல்லாருக்கும் ஒன்ருகவே விளங்குகின்றன ?

### பயிற்சி :

1. இப்பாடற்பொருளைத் தொகுத்து எழுது.
2. இப்பாடல் கூற வந்த கருத்து இன்னதென்பதைப் புலப்படுத்து.

### ஆசிரியர் வரலாறு :

2. **இரட்டையர்:** இவர்கள் இளஞ்சூரியர், முது சூரியர் என்றும் கூறப்படுவார்கள். இவர்களுள் ஒருவர் நொண்டி; மற்றவர் குருடர். குருடர் நொண்டியைச் சுமப்பர். இவர்கள் ஊரூராகச் சென்று பாடல் பாடிப் பிழைத்து வந்தார்கள். இவர்கள் இருவரும் சேர்ந்தே பாடுவர். ஒரு பாட்டில் முன்னடிகள் ஒருவராலும் பின்னடிகள் மற்றொருவராலும் பாடப்பட்டு இருக்கும். இவர்கள் காலம் கி. பி. 15-ஆம் நூற்றுண்டு. இவர்கள் தில்லைக் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம், ஏகாம்பரநாதர் உலா ஆகிய மூன்று நூல்களையும், பல தனிப்பாடல்களையும் பாடியுள்ளார்கள்.

### அருஞ்சொற்பொருள் :

தென்புலியூர்-சிதம்பரம், அம்பலவா-பொற்சபையில் நடனமிடும் நடராசனே, தில்லை-சிதம்பரம், சிற்றம்பலம்-சிதம்பரத்தில் நடராசர் நடனம் செய்யும் சபை, வெம்புலி-கொடிய புலி (புலிக் காலையுடைய

வியாக்கிரபாத முனிவர்), மேவும்-பொருந்தியிருக்கும், ஆட்டை-ஆட்டத்தை (ஆடு என்னும் விலங்கை), அம்மானை - பெண்கள் ஆடும் ஆட்ட வகைகளுள் ஒன்று, ஒருவர் ஒரு கேள்வி கேட்க, மற்றொருவர் அதற்கு விடை கூறும் முறையில் அமைந்திருக்கும். இது கலம்பகத்தில் ஓர் உறுப்பு.

## ஆசிரியர் வரலாறு :

3. முக்கூடற்பள்ளு ஆசிரியர் வரலாறு ஒழுங்காகக் கிடைத்திலது. பள்ளு என்பது ஒரு வகைத் தமிழ் நூல். இது உழவர், உழத்தியர் செயல்களான நாற்று நடுதல், அறுவடை செய்தல் முதலியனவற்றை முறையாக அழகுறச் சொல்லும் நூல். முக்கூடல் மூன்று நதிகள் சங்கமமாகும் இடம். இது திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள அழகர் க்ஷேத்திரம்.

## அருஞ்சொற்பொருள் :

ஏசல்—ஒருவரை யொருவர் தாழ்வாகப் பேசுதல், இரந்தும்-பிச்சை யெடுத்தும், நஞ்சை-விஷத்தை, உங்கள் நாதன்-உங்கள் தெய்வமான சிவபெருமான், முகில் வண்ணன்-மேக நிறம் பொருந்திய திருமால். இப்பாடல் சைவ சமயப் பெண் ஒருத்தியும், வைணவ சமயப் பெண்ணொருத்தியும் ஏசிக்கொள்ளும் முறையில் பாடப் பட்டுள்ளது.

## அருஞ்சொற்பொருள்:

கன்னல்-கரும்பு, மருவி -கலந்து, வாமம்-அழகு. உறும்-பொருந்திய, வம்பு-புதுமை, வாசனை.

## ஆசிரியர் வரலாறு :

5. பாரதியார் வரலாறு முன்பு கூறப்பட்டுள்ளது.

## அருஞ்சொற்பொருள் :

மனை-வீடு,நன்செய்-நல்ல நிலம் (நெல், கரும்பு, கோதுமை வளரும் நிலம்) விண்ணில்-தெய்வ லோகத்தில், வானவர்-தேவர். பார்மிசை-பூமியில்.

## ஆசிரியர் வரலாறு :

6. இப்பாடலைப் பாடியவர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார். இவர் திருவாரூரில் சைவ வேளாள மரபில் பிறந்தவர். தமிழ் மொழிக்கும் சைவ சமயத்திற்கும் தொழிலாளர் உலகத்திற்குந் தொண்டு செய்து வந்தவர். இவர் நல்ல சொற்பொழிவாளர். இவர் எழுதிய உரைநடை நூல்களுக்கும் பாடல் நூல்களுக்கும் அளவில்லை. உரைநடை நூல்களுள் சில பெண்ணின் பெருமை, என்கடன் பணிசெய்து கிடப்பது என்பன, முருகன் அருள் வேட்டல், நாட்டுப் பாடல் முதலியன இவர் இயற்றிய செய்யுட்கள்.

## அருஞ்சொற்பொருள்:

விண் சுடர்-ஆகாயத்தில் எழும் சந்திர சூரியர், மால்-பெரிய, மண் கம்பம்-பூமி அதிர்ச்சி, ஊன்-தசை, ஒன்னலர்-பகைவர், வான்-தேவ லோகம், மருவ-சேர.

## கேள்விகள் :

1. மண்ணில் காப்பவரும் விண்ணில் காப்பவரும் யாவர் ?
2. தொழிலாளிகள் எவ்வெத்தொழிலைச் செய்து முடிக்க வேண்டும் ?
3. எது அம்பலத்தை விட்டு ஏகாது ? ஏன்?
4. வெம்புலி என்றது எதனை ?
5. இரு பெண்டிர் எங்ஙனம் ஏசிக்கொண்டனர் ?
6. நாட்டுச் சிறப்புக்கள் எவை ?
7. ஒரு நாடு அழிவதற்கு முன் தோன்றக்கூடிய உற்பாதங்கள் எவை ?
8. எதனை மறக்க இயலாது ?
9. பகைவர் செய்யும் செயல் யாது ?

**பயிற்சி:**

1. அம்மானை, ஏசல், பள்ளு இவற்றைப் பற்றிச் சிறு குறிப்பு எழுது.
2. வியாக்கிரபாதரோடு நிற்கும் மற்றொரு முனிவர் பெயரைக் குறிப்பிடு.
3. 'ஆட்டை விட்டு வேங்கை அகலுமோ?' இதற்கு இரு பொருள் கூறு.
4. நஞ்சையுண்டான்—இதில் அடங்கிய கதையினை எழுது.
5. நாட்டு வளத்தைக் குறித்து ஒரு கட்டுரை எழுது.



# குமுத வாசகம்

## மூன்றும் படிவம்

(பொதுப் பகுதி)




ஆசிரியர்
**வித்துவான், பாலூர். கண்ணப்ப முதலியார்**
தமிழ் விரிவுரையாளர்
நியூகாலேஜ், இராயப்பேட்டை, சென்னை.

வெளியிட்டவர் :

**டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ்**

சென்னை-1.

 1954 [விலை ரு. 1—0—0

# பொருளடக்கம்

## (பொதுப் பகுதி)

### உரைநடைப் பகுதி



### செய்யுட் பகுதி




# 1. திருமுகப்பாசுரம்

1. திருமுகம் தீட்டுதற்குத் தனித்திறமை வேண்டற்பாலது என்பது மேற்கு நாட்டவர் வற்புறுத்திக்கூறும் முறைகளுள் ஒன்று. அது எம்முறையில் எழுதப் பெறுதல் வேண்டும் என்பதன்பொருட்டுச் சில முறைகளைக் கற்பித்து மொழிதலும் உண்டு. "ஒரு புறத்தில் 'இன்னவரிடமிருந்து இக்கடிதம் வருகின்றது ; இன்னாருக்கு இது விடுக்கப்படுகிறது; என்னும் குறிப்பும், இவற்றின் பின் சொல்லக் கருதிய கருத்துக்களை நேர்பட எழுதுதல் என்னும் முறையும் அமைய வேண்டும்," என அறைவர். 'இவை யாவும் ஏதோ இக்கால நவ நாகரிக முறைக்கேற்ப அமைந்த முறை போலும்!' என்று நீங்கள் எண்ணலாம். இவை யாவும் நம் செந்தமிழ் நாட்டவர் நன்கு உணர்ந்து உலகிற்கு உணர்த்தியவைகளே என்பதை நாம் உணரும்போது, நம்மை நாமே பெருமைப் படுத்திப் பேசிக்கொள்ளாமல் இருக்க இயலாது. இதனை வற்புறுத்திக் காட்டக்கூடிய சான்றுகள் பல இருப்பினும், ஈண்டு ஓர் எடுத்துக் காட்டினை மட்டும் காண்க.

2. கூடல் மாநகரக் குழகர் புரிந்த ஆடல்கள் அறுபத்து நான்கு. அவற்றுள் ஒன்று **திருமுகங்கொடுத்த திருவிளையாடல்.** மதுரைமா நகரின்கண் **பாணபத்திரர்** என்னும் யாழ் இசையில் வல்ல பாடகர் ஒருவர் இருந்தார். அவர் தம் இன்னிசைப் பணியைக்கொண்டு இறைவர் திருச்செவியினை இன்ப வெள்ளத்தில் ஆழச் செய்து வந்தார். இவ்விசையில்

ஈடுபட்ட இறைவர், தம் அன்பர் பாணபத்திரர் துன்பம் உருதிருக்கத் தென்னவன் சேம நிதியினின்று தினமும் பல அணிகலன்களைக் கொணர்ந்து அவர் முன் வைத்து வந்தார். அவ்வாறு கொணரப்பட்ட அணிகலங்களுள் சில பொன்னு லும், சில மணியாலும் செய்யப்பட்டவை. அத்தகைய நகைகளைக் கைக்கொண்ட பத்திரர், தாமே துய்க்க எண்ண மற்றவராய், அவற்றைக்கொண்டு தம் வறுமைப் பிணியையும் உற்ருர் உறவினர்கட்குற்ற துன்பங்களையும் நீக்கி வந்தார். ‘செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்,’ என்னும் நீதி வாக்கியத்தினை நன்கு உணர்ந்தவர் ஆதலின், இம்முறையினை அவர் மேற்கொண்டது இன்பம் தரும் செயலே அன்ருே ?

3. இஃதிவ்வாறு சின்னுள் நிகழ ஒரு நாள், தினப்படி இறைவரால் ஈயப்பட்டு வந்த ஆபரணங்கள் ஈயப் பெருமல் நின்று போயின. அது குறித்துப் பாணபத்திரர் வாட்ட முற்றுத் தம் வீடு திரும்பினுர். அவருடன் அவரைச் சார்ந் திருந்த உறவினரும் வாட்டமுற்றனர். அன்று இரவு கவலை யுடன் உறங்கினுர் கானப் புலவர். இவ்வாறு துன்பத்துடன் துயில் கொண்டிருந்த பாணர் தம் கனவில் பரமர் தோன்றி, ‘அன்ப, இதுகாறும் பஞ்சவன் அறியா வண்ணம் அவன் பண்டாரத்தினின்றும் கொணர்ந்த அணிகலன்களை நினக்கு ஈந்து வந்தனம். இதனை அவன் அறிந்தால், நிதியைக் காப் பவர்மீது கோபங் கொள்வன். எம்மால் அவர்க்குத் தண்ட மும் கிடைக்கும். ‘பழியோரிடம் பாவமோரிடம்,’ என்பது போல, அவர்கள் எம்மாலும் உன்னுலும் ஏன் அலக்கண் அடைதல் வேண்டும் ? யாம் ஒரு கடிதம் எழுதித் தருகின் ருேம். அதனைச் சேரநாட்டு மன்னனுய்த் திகழும் சேரமான் பெருமாள் நாயனுரிடம் தருக. அவன் உனக்கு வேண்டும் பொருள் உதவியினைப் பழுதுரு வண்ணம் ஈவான். அதனைக்

கொண்டு நீயும் நின் உறவினரும் இனிது வாழலாம்,'' என்றனர்.

4. பாணபத்திரர் கண் விழித்து எழுந்தார். தாம் கண்டது கனவோ, நனவோ, என்று சிந்தித்தார்; சுற்றுமுற்றும் தம் படுக்கையைப் பார்த்தார்; அங்கு ஓர் ஓலை நறுக்குக் கிடந்ததைக் கண்ணுற்ருர். அந்த நறுக்கில் சில செந்தமிழ்ச் சொற்களால் ஒரு செய்யுள் எழுதப்பட்டிருந்தது. அதனை அவர் கையில் எடுத்தார்; கண்ணில் ஒற்றினர்; சிரமேல் கொண்டார்; மார்பகம் சேர்த்தார். அம்மம்ம! அவர் அப்போது அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

5. இவ்வாறு முடங்கலைக் கண்டு மனம் மகிழ்ந்த பத்திரர்; அம்முடங்கலில் பொறிக்கப்பட்ட பாவினைக் கண்டார். அது,

'மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழி ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்,
பருவக் கொண்மூஉப் படியெனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி, ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க:
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்,
தன்போ லென்பா லன்பன்; தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்;
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.'

என்பது. இப்பாட்டின் பொருள், "சிற்பியர் ஓவியர் அறிவுத் திறனெலாம் நிறைந்த மதில்களையுடைய நான்மாடக் கூட

லாகிய நகரில் விளங்கும் பால் போலும் வெண்மையான நிறத்தினைப் பெற்ற மென்மையான சிறகுகளையுடைய அன்னப் பறவைகள் பயிலும் சோலைகளைக் கொண்ட மதுரைமா நகரில், நிலை பெற்ற சோமசுந்தரப் பெருமானுகிய யாம் கூறும் மொழிகளைப் பருவகாலத்து மேகத்தைப்போலப் புலவர்கட்கு உரிமையோடு பொருள் உதவி செய்து புகழுடன் விளங்கும் ஒளி நிறைந்த பூரண சந்திரன் போலத் திகழும் வெண்கொற்றக் குடையின்கீழ் அமர்ந்து போரில் சிறக்கும் குதிரையினை நடத்தும் சேரமானே, நீ காண்பாயாக: இதனைக் கொணருபவன் முறைப்படி யாழ் இசையில் வல்லவன்; பாணபத்திரன் என்னும் பெயரினன். நீ எம்பால் அன்பு கொண்டிருப்பது போலவே, அவனும் எம்பால் அன்பு கொண்டவன்; நின்னைக் காண இப்பொழுது வருகின்றனன். அவனுக்குப் பெருமை மிக்க பொருளினைத் தந்து எம்பால் மீண்டும் வருமாறு அனுப்பிவிடுக," என்பதாம்.

6. இசைப்பாணராகிய பாணபத்திரர், எப்போது பொழுது புலரும் என்று காத்துக்கொண்டிருந்தார். வானத்தில் விளங்கிய தாரகைகள் மறைய, புள்ளினங்கள் ஒலிக்க, அரசர் அரண்மனைகளிலும் ஆலயங்களிலும் மங்கல பேரிகைகள் முழங்க, சங்கங்கள் ஓசை எழுப்பப் பொழுதும் புலர்ந்தது. பாணபத்திரர் தமக்கு இறைவர் நல்கிய திருப்பாடல் தீட்டப்பட்ட ஓலை நறுக்கினை ஒரு பட்டாடையில் சுற்றினர்; நேரே சேரமான் வாழ்ந்த மலை நாட்டை நோக்கிப் புறப்பட்டார். இக்காலத்தைப் போல அக்காலத்தில் போக்கு வரவிற்குரிய சாதனங்கள் இருந்திருக்க மாட்டா அல்லவா? காரியமே கண்ணுகக் கருதிய பாணபத்திரர், மெய் வருத்தம் பாராதும், பசி நோக்காதும், உறக்கம் கொள்ளாதும், செவ்வியருமையையும் பாராதும் நடந்தே சென்றுர்; இவ்வாறு சென்று சேரர் பெரு

மானைச் சந்தித்தார்; திருமுகத்தை நீட்டினார். சேரரும் திரு முகத்தைக் கண்டு பரமானந்தம் கொண்டார். "இறைவர் என் மாட்டு இத்துணைப் பேரருள் காட்டி முடங்கலினைத் தீட்டினரே! யான் பெற்ற பேறு யார் பெற முடியும்!" என்று கூறி உவகைக் கடலில் மூழ்கினார். பாணபத்திரரையும் நன்முறையில் முகமன் கூறி வரவேற்றார்; அவர்க்கு உண்டியும் உறையுளும் ஈந்து உபசரித்தார்; அவரை விட்டுப் பிரிந்திருக்க மனம் கொண்டிலர் என்றாலும், இறைவர் கட்டளை உடனே அனுப்பி வைக்க வேண்டும் என்பதனால், அதற்கு அஞ்சிப் பாணபத்திரர் அவர் அடங்கும் அளவுக்கு இருநிதிகளை ஈந்து வழி கூட்டி அனுப்பினர். பாணபத்திரரும் பிரியா விடை பெற்றுப் பிரிந்து, பெருஞ்செல்வத்துடன் ஆலவாய்ப் பதியினை அணுகினர்; கொண்டு வந்த பொருளினைத் தாமே துய்க்காமல், கேளிரும் கிளைஞரும் மகிழ அவர்கட்கும் ஈந்து, இனிது வாழ் வாரானார். முன் போலத் தம் இசைத் தொண்டினை இறைவர்க்கு முப்போதுஞ் செய்து மகிழ்ந்து வந்தார்.

### அருஞ்சொற்பொருள்

திருமுகம் - கடிதம், தீட்டுதற்கு - எழுதுதற்கு, அறைவர் - கூறுவர், நவம் - புதுமை, கூடல் மாநகர் - மதுரையாகிய பெரிய நகரம், குழகர் - சுந்தரேசப்பெருமான், யாழ் - வீணை, பண்டாரம் - பொக்கிஷம், பணி, கலம் - ஆபரணம், துய்க்க - அனுபவிக்க, கேளிர் - நண்பர், கிளைஞர் - உறவினர், பஞ்சவன் - பாண்டியன், அலக்கண் - துன்பம், முடங்கல் - கடிதம், மதிமலி - அறிவுக்கூறு நிறைந்த, புரிசை - மதில், பொழில் - சோலை, ஆலவாய் - மதுரை, மாற்றம்-மொழி, கொண்மூ - மேகம், குரு - ஒளி, மாமதி - பூரண சந்திரன், செருமா - போர்க் குதிரை, உகைக்கும் - நடத்தும், பாசுரம் - பாடல், மாண் - மாட்சிமை, ஈரம் - அன்பு.

### கேள்விகள்

1. திருமுகம் எழுதப்பட வேண்டிய முறை யாது ?
2. பாணபத்திரர் எதனுல் வறுமையால் வாடாதிருந்தனர் ?
3. ஆலவாய்ப் பெருமானுர் ஏன் திருமுகப்பாசுரம் தீட்டியருளினுர்?
4. திருமுகப் பாரசுத்தின் திரண்ட பொருள் யாது ?
5. பாணபத்திரர் தம் வறுமைதீரப் பொருளை எவ்வாறு பெற்ருர் ?

### பயிற்சி

1. பாணபத்திரர் திருமுகப் பாசுரத்தைக் கண்டபோது உற்ற நிலையை விளக்கு ?
2. திருமுகப்பாசுரத்தில் அமைந்த நயத்தினைப் புலப்படுத்து.
3. ஆலவாய், மாடக்கூடல் என்னும் பெயர்கட்குரிய காரணங்களைக் கேட்டு அறி.
4. இவ்வரலாறு அடங்கிய நூலையும், அதன் ஆசிரியரையும் குறிப்பிடு.

### இலக்கணம்

## சொல்லுக்கு முதலிலும், ஈற்றிலும் வரும் எழுத்துக்கள்

தமிழ் மொழியில் பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும், **க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங,** ஆகியபத்து உயிர்மெய் எழுத்துக்களும், இவற்றின் வர்க்கங்களும் மொழிக்கு முன்னே வரும். மற்றைய உயிர்மெய்யெழுத்துக்களும் வர்க்கங்களும் மொழிக்கு முன் வரமாட்டா. அப்படி வரும் சொற்கள் காணப்பட்டால், அவை தமிழ் மொழிகள் அல்ல என்பதை உணர்க.

**(உ-ம்)** அவன், ஆடு, இவன், ஈரம், உரல், ஊரன், எவன், ஏது, ஐந்து, ஒன்று, ஓர், ஔவையார், கடவுள், சங்கு, தவளை, நகம், படகு, மரம், வண்டி, யவனர், ஞமலி, (நாய்) ஙனம் (விதம்)

**குறிப்பு :—க, ச, த, ந, ப, ம** என்னும் உயிர்மெய் எழுத்துக்கள் மட்டும் தமக்குரிய முழுவர்க்க எழுத்துக்களையும் முதலாக நிற்க மொழிக்கு முதலாகும்; வகரத்தில் எட்டு எழுத்துக்களும், யகரத்தில் ஆறு எழுத்துக்களும், ஞகரத்தில் நான்கு எழுத்துக்களும் மட்டும்

மொழிக்கு முதலில் வரும். ஙகரம் முச்சுட்டுடனும், எகரவினாவுடனும் மட்டுந்தான் மொழிக்கு முதலில் வரும்.

மொழிக்கு ஈற்றில், எகரம் நீங்கலாக ஏனைய பதினொர் எழுத்துக்களும் **ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள்** ஆகிய பதினோரு மெய்யெழுத்துக்களும் மட்டும் வரும். ஏனைய மெய்யெழுத்துக்கள் வருமாயின், அவை தமிழ் மொழிகள் அல்ல என அறிக.

(உ-ம்) **பல, பலா, கிளி, தீ, வரவு, பூ, சே, தலை, நொ, நோ, கௌ,**-உயிர் எழுத்துக்கள் பதினொன்றும் மொழிக்கு ஈற்றில் வந்தன.

| | |
|---|---|
| உரிஞ், கண், வெரிந், மரம், தேன், நெய், வேர், பல், தெவ், வாழ், கேள் | மெய் பதினொன்றும் மொழிக்கு ஈற்றில் வந்துள்ளன. |

**பயிற்சி**

1. இப்பாடத்திலிருந்து மொழிக்கு ஈறுகும் எழுத்துக்களுள் சிலவற்றிற்கு உதாரணம் எடுத்துக் காட்டு.
2. இப்பாடத்தின் ஆறுவது பாராவிலிருந்து மொழிக்கு முதலாய் வந்துள்ள எழுத்துக்களுள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் உதாரணம் எடுத்தெழுது.

# 2. நீர்ப்பாசனம்

1. ஒப்புயர்வற்ற பெருந்தமிழ்ப் புலவராகிய தண்டமிழ் ஆசிரியராம் திருவள்ளுவர், 'நீரின் றமையாது உலகு,' என்று கூறியுள்ளார். பல சான்றோருடைய கருத்தும் இதுவேயாகும். இந்நீர், நாட்டில் இடையறுது இருப்பதற்குரிய பொறுப்பு அரசர்களையே சார்ந்திடும். அரசர்களின் செங்கோன்மையே நீர் குறைவின்றிப் பெருக்கெடுத்து ஓடத் துணை செய்வது.

"கோன்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்;
கோள்நிலை திரியின் மாரி வறங்கூரும்."

என்று அரசன் செங்கோன்மையினின்று வழுவாது அரசு புரிய வேண்டும் என்பதை அழகுபடக் கூறிச் சென்றுர்

கூலவாணிகச் சீத்தலைச் சாத்தனார். கம்பரும், தயரதன் செங்கோல் ஆட்சியின் செம்மையைக் கூறுகையில் நீர்மேல் வைத்தே நிலை நாட்டுபவராய், “வெள்ளமும் பறவையும் ஒரு வழி ஓட நின்றவன்,” என்று கூறிப் போந்தார், ஆகவே, இத்துணை இன்றியமையாத நீரின் வசதிகட்கு நம் நாட்டுத் தமிழ் மன்னர்கள் எம்முறையில் ஏற்பாடுகள் செய்து வந்தார்கள் என்பதை அறிய வேண்டுவது நம் கடமை அன்றோ ?

2. நம் நாட்டில் ஆதியில் ஆறுகளைத் தவிர்த்து இயற்கை நீர் நிலைகள் இல்லை. நாளடைவிலேதான் ஏரிகளும், கிணறுகளும், குளங்களும், கால்வாய்களும் வெட்டப்பட்டன. சுரப்பினால் இன்னோரன்ன செயற்கை நீர் நிலைகள் தண்ணீரைப் பெற்று வந்தாலும், ஆற்று நீராலும் குளங்களும் ஏரிகளும் நீரைப் பெற்று வந்தன. **மாங்குடி மருதனார்** பாடியுள்ள **மதுரைக் காஞ்சி** என்னும் நூலில், பல பெரிய குளங்கள் வைகையாற்று நீர்வளத்தால் தண்ணீரைப் பெற்று விளங்கினவெனக் குறிப்பிட்டுள்ளார். இக்குளங்களே வயல்கட்கு நீர் ஊட்டிப் பயிர் பச்சைகளை வளர்ப்பனவாயின. இராமநாதபுர மாவட்டத்திலும் இன்னோரன்ன பல பெரிய நீர் நிலைகள் இருப்பதை இப்போதும் காணலாம். ஆனால், அவை வைகையாற்றிலிருந்து வரும் நீரைப் பெறும் வாய்க்கால்கள் இப்போது இல்லாமையால், வரண்டு கிடக்கின்றன. கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கின **ஜடாவர்ம ஸ்ரீவல்லபனின்** குருவித்துறைக் கல்வெட்டி[illegible] கல்லணைகளும் வாய்க்கால்களும் பலதுறைகளில் நீர் [illegible]களுடன் நிறைந்திருந்தன என்பது தெரிகிறது.

3. சோழ மன்னர்கள் ஆட்சியிலும் பல தடாகங்கள் வெட்டப்பட்டன. காவிரியாற்றினின்றும் காவிரியின் கிளையினின்றும் நீர்ப்பாசனத்திற்காகப் பல கால்வாய்கள் உண்டாக்

கப்பட்டன. கரிகாற்சோழனுக்கு முன்பே **வெண்ணாறும் அரிசிலாறும்** இருந்திருக்கின்றன. ஆளுடைய அரசும், ஆளுடைய பிள்ளையாரும் தம் தேவாரத்தில் **பழங்காவிரி** என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து **புதுக்காவிரி** பின்னால் தோன்றியது என்பதை நன்கு யூகித்து அறியலாம்.

4. இப்பிரிவுக்குக் காரணம் காவிரி நதியின் போக்கில் ஏற்பட்ட மாறுதலேயாகும். இக்குறிப்பு பல கல்வெட்டுக்களினாலும் வலுயுறுத்தப்படுகிறது. மேலும், நாட்டின் நீர்ப்பாசனத்தின்பொருட்டுக் காவிரியாற்றின் நீர் ஓட்டத்தில் சில மாறுதல்கள் செய்யப்பட்டன என்பதும் உறுதியாகின்றது.

5. கரிகாலன் காவிரியாற்றில் சிற்சில சமயங்களில் நீர்ப்பெருக் கெடுத்து நாட்டை அழிக்காமல் இருக்கக் காவிரியாற்றின் இரு மருங்கினும் உயரிய கரைகளை எழுப்பியிருந்ததாக நாம் அறிகிறோம்.

6. கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் அரசு புரிந்த **முதலாம் பராந்தகச் சோழன்** காலத்தில் **வீரசோழன் ஆறு** என்னும் பெயருடன் ஒரு வாய்க்கால் ஏற்படுத்தப்பட்டது. **கீர்த்தி மார்த்தாண்டன், உய்யக்கொண்டான், முடிகொண்டான்** கால்வாய்களும் இதற்கு முன்னால் வெட்டப்பட்டவைகளே. இவை யாவும் கி. பி. பத்து, பதினோராம் நூற்றாண்டுகளில் கிளைத்தனவென்பதைக் கல்வெட்டுக்களால் அறியலாம்.

7. பல்லவ மன்னர்களும் நீர்ப் பாசனத்தில் தம் கருத்தைச் செலுத்தியிருப்பதாக அறிகிறோம். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் அரசு செலுத்திய **முதலாம் மகேந்திரவர்ம பல்லவன்,** பாலாற்றினின்றும் ஒரு வாய்க்காலை அமைத்ததாக அறிகிறோம். அதற்குப் **பிடுகு வாய்க்கால்,** என்பது பெயர். **'பெரும்பிடுகு'** என்பது மகேந்திரவர்ம பல்ல

வன் பெயர்களுள் ஒன்றும். அப்பல்லவ மன்னனே செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள **மகேந்திரவாடி** என்னும் ஊரில் **மகேந்திர தடாகம்** என்ற பெயருடன் ஒரு குளம் வெட்டியதாகவும் சொல்லப்படுகிறது. ஆனல், அக்குளம் இப்பொழுது பழுதுற்றுக் கிடக்கிறது.

8. பல்லவர் காலத்தில் நீர்ப்பாசனத்திற்காக ஏற்பட்ட குளங்களும் ஏரிகளும் பலவாகும். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை **வைரமேகன் தடாகம், பரமேஸ்வரன் தடாகம், திரையன்** ஏரி, **சித்திரமேகன் தடாகம்** என்பன. இந்த ஏரி குளங்களைப் பாதுகாத்துவர வேண்டிய பொறுப்பு முழுவதும், சில குடும்பத்தினர்க்கு உரியதாயிருந்தது. அவர்கள் ஏரி குளங்களை அடிக்கடி ஆழமாகச் செய்து, அவ்வாறு ஆழமாக்கும்போது எடுக்கப்படும் மண்ணைக் கரையைப் பலப்படுத்துவதற்குப் பயன்படுத்தி வந்தார்கள். அப்படிச் செய்து வந்ததற்கு ஊதியமாக அவர்கட்கு வரியிலா நிலங்கள் வழங்கப்பட்டன. வரப்புயர்ந்தால், நீர் உயரும்; நீர் உயர்ந்தால், நெல் உயரும்; நெல் உயர்ந்தால், குடி உயரும் ; குடி உயர்ந்தால் கோன் உயர்வான் அல்லவா ?

9. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் **உய்யக்கொண்டான் திருமலை** என்னும் ஊர் ஒன்று உளது. அங்கு **வைரமேகன் வாய்க்கால்** எனப் பெயரிய ஒரு வாய்க்கால் இருந்தது. அது **தந்திவர்ம பல்லவன்** காலத்தில் ஏற்படுத்தப்பட்டது. அதே மாவட்டத்தைச் சார்ந்த **ஆலம்பாக்கம்** என்னும் கிராமத்தில் ஒரு பெரிய குளம் ஏற்படுத்தப்பட்டது. அது **மேற்பிடுகு ஏரி** என்பது. அது இப்பொழுதும் அங்கு உள்ளது. திருச்சிராப்பள்ளிக்குப் பன்னிரண்டு கல் தொலைவில் திருவெள்ளறை என்னும்கிராமத்தில் ஒருகேணியுள்ளது. அது **மேற்பிடுகு பெருங்கிணறு** என்னும் பெயருடன் திகழ்கிறது.

அது **கம்பன் அரையன்** என்பவனுல் கட்டப்பட்டதாக அக் கிணற்றுக் கல்வெட்டு கூறுகிறது. இவை யாவும் கி. பி. 9-ஆம் நூற்ருண்டில் எழுந்தவையாகும்.

10. இன்னேரன்ன செயற்கை நீர் நிலைகளை ஏற்படுத் தப் பெரும்பொருளை நம் அரசர்கள் செலவிட்டிருப்பதை இவ் வேற்பாடுகளின் மூலம் நன்கு அறியலாம். இவ்வேற்பாட்டால் விளைவுக்குப் பயனில்லை என்று ஒதுக்கப்பட்டிருந்த நிலங்கள் யாவும், விளைவுக்குரியனவாயின. எல்லாவற்றையும் அரசாங் கமே செய்து முடித்தல் இயலாத செயல். ஆதலால், சில தனிப் பட்ட குடும்பத்தினரும் கிணறுகள், வாய்க்கால்கள், ஏரிகள், குளங்கள் வெட்டிக்கொண்டனர். அப்படி வெட்டி விளைவை மிகுதிப்படுத்தியதற்காக அவர்கட்குரிய புலங்களை வரியின்றி அனுபவிக்க அரசர் கட்டளையிட்டிருந்தனர். இச்செய்திகளை கி. பி. 13-ஆம் நூற்ருண்டில் தோன்றிய ஒரு **ஹொய்சள** மன்னன் கல்வெட்டால் நன்கு அறியலாம். இவ்வாறு வரியின்றி அனுபவிக்க விடப்பட்ட நிலங்கள் **சர்வமானிய நிலங்கள்** எனப்பட்டன. தண்ணீர் வசதியின்பொருட்டுத் தெலுங்கு நாட்டு மன்னர்களும், கன்னட தேசத்துக் காவலர்களும் தத் தம் நாடுகளில் தக்க ஏற்பாடுகளைச் செய்து வந்தனர் என் பதையும் யூகித்து அறிந்துகொள்ள வேண்டும்.

### அருஞ்சொற்பொருள்

கோன் - அரசன், கோள்-கிரகம், வறங்கூரும்-வறட்சி மிகும், தடா கம்-குளம், ஆளுடைய அரசு-திருநாவுக்கரசர், ஆளுடைய பிள்ளை யார்-திருஞான சம்பந்தர், அல்லல்-துயர், மருங்கு-பக்கம், உரம்-வன்மை, ஊதியம்-வருவாய்,கேணி-கிணறு, காவலர்-அரசர்.

### கேள்விகள்

1. எப்பொழுது மழை பொழிவதற்குத் தடை ஏற்படும் ?
2. கரிகாலனுக்கு முன்பு வெட்டப்பட்ட ஆறுகள் எவை ?

3. கரிகாற் சோழன் செய்த செயல் யாது ?
4. பல்லவர் காலத்து உண்டான நீர்நிலைகள் எவை ?
5. நீர்நிலைகளை நன்முறையில் கவனித்து வந்தவர்கள் பெற்ற நன்மை யாது ?

## பயிற்சி

1. பெரும்பிடுகு, மதுரைக் காஞ்சி, கம்பன் அரையன்—குறிப்பு எழுது.
2. சீத்தலைச் சாத்தனுர் எழுதிய நூலைக் குறிப்பிடு.
3. ஹொய்சள மன்னன் கல்வெட்டால் உணரக்கூடியவற்றைக் குறிப்பிடு.

## இலக்கணம்

## பகுபதவுறுப்புக்கள்

பகுபதவுறுப்புக்கள் ஆறு. அவை **பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி,** விகாரம் என்பவை.

பகுதி, பகுபதத்தின் முதலில் நிற்கும்.

(உ-ம்) கூனன் = **கூன்** + அன்; கூன்—பகுதி.

விகுதி, பகுபதத்தின் ஈற்றின் நிற்கும்.

(உ-ம்) கூனன் = கூன் + **அன்**; அன்—விகுதி.

இடைநிலை, பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் வரும்.

(உ-ம்) உண்டான் = உண் + **ட்** + ஆன்; ட்-இடைநிலை.

சாரியை, இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையில் வரும்.

(உ-ம்) உண்டனன் = உண் + ட் + **அன்** + **அன்** சாரியை.

சந்தி, பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையில் வரும்.

(உ-ம்) படித்தனன் = படி + **த்** + த் + அன் + அன்; த்-சந்தி.

விகாரம் என்பது, பகுபதத்தின் முதலிலும், இடையிலும், எழுத்து வேறுபட்டோ மிகுந்தோ வரும் உறுப்பாகும்.

(உ-ம்) வந்தான் = வா + த் + த் + ஆன். இங்கு '**வா**' என்னும் பகுதி வ எனக் குறுகி நின்றது. குறுக்கல் விகாரம்; **த்** என்னும் சந்தி **ந்** எனத் திரிந்தது திரிதல் விகாரம்.

# 3. நூல் நிலையம்

1. நாம் ஒவ்வொருவரும் கல்வியிற்சிறந்து, அறிவாளர் களாகத் திகழ வேண்டும். திறந்த அறிவுடையவர்கள் இல்லாத நாடு ஒரு போதும் முன்னேறாது. நம் பாரத நாட்டில் பழங் காலத்திலிருந்த புலவர் சிகாமணிகளுள் பலர் கல்வியைப் பற்றிச் சிறப்பித்துக் கூறியுள்ளனர். சிறந்த ஒருவன் எந் நாட்டினராலும் போற்றப்படுவான்; அரசர்களினும் மேம் பாடுடையவனாகக் கருதப்படுவான். அதனாலன்றோ, பழந் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர்,

'மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்,
மன்னனில் கற்றோன் சிறப்புடையன்;-மன்னற்குத்
தன்தேயம் அல்லால் சிறப்பில்லை; கற்றோற்குச்
சென்றஇட மெல்லாஞ் சிறப்பு.'

என்று கல்வியறிவுடையவன் மன்னர்களைவிட மாண்புடை வன் என்பதை அழகாகப் பாடி, உலக மக்களுக்கு அறி வுறுத்தியிருக்கிறார். ஒருவன் எத்தகைய செல்வத்திற் சிறந்த சீமானாயிருந்தாலும், கல்வியறிவு இல்லையேல், உலக மாந்தரால், தாழ்வானவனாகக் கருதப்படுகின்றான். கல்வியானது ஒருவனுடைய ஏழு பிறப்பிற்கும் தோன்றாத் துணையாய் இருந்து, அவனைப் பல இடுக்கண்களினின்றும் காப்பாற்றுகின்றது. ஒருவனுக்குக் கண்கள் எவ்வளவு இன்றியமையாதனவாய் இருக்கின்றனவோ, அவ்வளவு கல்வியும் உறுதுணையாய் இருந்து, அவனது வாழ்க்கையை நல்வாழ்க்கையாக மிளிரச் செய்கிறது. இது குறித்தன்றோ நம் தெய்வப்புலவர் திருவள்ளுவ நாயனாரும்,

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு."

என்றும்,

"கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

என்றும் கூறியுள்ளார்? ஆகையால், ஒருவனுக்குக் கண்கள் இருந்தாலும், அவன் கல்வியறிவில்லாதவனுயிருந்தால், அவனுடைய கண்கள் ஞானவொளி வீசும் கண்களாயிராமல், புண்ணாகிய ஊனக் கண்களாயிருக்கும். ஆகவே, அறிவுள்ள மானிடர்களுள் ஒவ்வொருவருக்கும் கல்வி இன்றியமையாதது. சுருங்கக் கூறின், மனித வாழ்க்கைக்கே திறவு கோலாயிருப்பது கல்வி என்றே உறுதியாகக் கூறலாம்.

2. இத்தகைய கல்வியை நாம் எவ்வாறு பெறல் கூடும்? கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும் சிறிது அளவிலேதான் இக்கல்வியைப் பெறக்கூடும். பின்பு சிறந்த அறிஞர் பலருடைய நூல்களையும் படித்து, அறிவாகிய சுடரை நன்றாகக் கொழுந்து விட்டு ஒளிரச் செய்ய வேண்டும். இத்தகைய நன்னோக்கங்கொண்டே கருணையுள்ள துரைத்தனத்தார் நகரங்களில் நூல் நிலையங்களை ஏற்படுத்திக் கண்காணித்து வருகின்றனர்.

3. நூல் நிலையம் என்பது, மேனாட்டு கீழ் நாட்டு அறிஞர்களால் பல்வேறு மொழிகளில் எழுதப்பெற்ற பல பொருள்கள் பொதிந்த புத்தகங்கள் பல சேமித்து வைக்கப்பட்ட இடம். அங்கு பல நாட்டுப் பத்திரிகைகளும் வரவழைக்கப்படுகின்றன. மக்கள் அனைவரும் ஒன்று கூடி, அவ்விடங்களுக்குச் சென்று, அவரவர் விரும்பும் புத்தகத்தை

யும், பத்திரிகையையும் பெற்று வாசிக்கலாம். இதற்காக எவ்விதக் கட்டணமும் செலுத்த வேண்டுவதில்லை. அவ்விடத்தில் விலை உயர்ந்த புத்தகங்களும் ஏராளமாக உண்டு. அத்தகைய புத்தகங்களை வாங்கிப் படிக்க இயலாத ஏழை மக்களும் புத்தகசாலைகளுக்குச் சென்று, அவர்கள் விரும்பும் புத்தகங்களைப் படித்துக்கொள்ளலாம். சிற்சில இடங்களில் இவ்வித நூல் நிலையங்களைத் தவிர, வாசக சாலைகளும் இருக்கின்றன. அவை நன்முறையில் நடைபெறச் சிலர் அங்கத்தினர்களாகச் சேர்ந்து ஒவ்வொரு திங்களும் பணத்தைச் சந்தாவாகச் செலுத்தி வருவர்; சிலர் பணத்திற்குப் பதிலாகத் தம்மிடமிருக்கும் பயனுடைய புத்தகங்களை இலவசமாக அனுப்புவர்; ஆயிரக்கணக்கான ரூபாய்களையும் சிலர் மூலதானமாக அவ்வாசக சாலைகளுக்கு ஏற்படுத்தியிருக்கின்றனர். பண்டைய தமிழ்ப் புலவர்களுட் சிலர், புத்தக வடிவில் வெளிவாராத பல ஓலைச் சுவடிகளையும் இத்தகைய வாசகசாலைகளுக்குக் கொடுத்து, பழங்காலத் தமிழ் மக்களின் நடையுடை பாவனைகளை மக்கள் அறியுமாறு அச்சிட்டு உதவத் தூண்டியும் வருகிறார்கள்.

4. இத்தகைய நூல் நிலையங்கட்கும், வாசக சாலைகட்கும் படிக்க வருபவர்கள் கேட்பனவற்றை எடுத்துக் கொடுப்பதற்குப் பல குமாஸ்தாக்கள் அமைக்கப்படுவார்கள். அவர்களுக்கெல்லாம் அதிகாரியாக ஒருவர் நியமிக்கப்படுவார். அவர் நூல் நிலையத் தலைவர் (**Librarian**) என வழங்கப்படுவார். அவருக்குத் துணை புரிய வேறொருவரும் இருப்பார். அவ்விருவருடைய் மேற்பார்வையில் ஒவ்வொரு நூல்நிலையமும் நடைபெற்று வருகின்றது. அவ்விடங்களிலுள்ள புத்தகங்களுக்கும், பத்திரிகைகளுக்கும் அகராதி வரிசையில் எண்களைக் குறிப்பிட்டு, அவைகளை ஒரு குறிப்புப் புத்தகத்தில்

குறித்துக்கொள்வார்கள். இதனுல், எந்தப் புத்தகங்கள் எடுத்துச் செல்லப்பட்டன? எந்தப் புத்தகங்கள் உள்ளே இருக்கின்றன? என்பனவற்றை எளிதில் அறிந்து கொள்ளக் கூடும். குமாஸ்தாக்களில் சிலர், வெளியே எடுத்துச் செல்லும் நூல்களையும், திருப்பிக் கொடுக்கப்படுகின்ற புத்தகங்களையும் குறிப்புப் புத்தகத்தில் பதிவு செய்துகொள்வார்கள். சில வாசகசாலைகளின் அதிகாரிகள், எந்தப் புத்தகத்தையும்



வீட்டிற்கு எடுத்துக்கொண்டு போய்ப் படித்து முடித்ததும், மீண்டும் கொண்டுவந்து சேர்ப்பதற்குத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்திருக்கிருர்கள். இ த ற் கெ ன நியமிக்கப்பட்டிருக்கும் குமாஸ்தா, புத்தகம் அல்லது பத்திரிகையின் பெயரையும், எடுத்துச் செல்பவரின் பெயரையும், தவணை நாளையும் பதிவுப் புத்தகத்தில் குறித்து, அவரிடம் கையெழுத்து வாங்கிக் கொண்ட பிறகுதான், அவைகளைக் கொடுப்பார். அவைகளை எடுத்துச் செல்பவர், படித்து முடித்த புத்தகத்தை அக்

குமாஸ்தாவிடம் சேர்த்து, 'திருப்பித் தரப்பட்டது' என்று பதிவுப் புத்தகத்தில் எழுதுமாறு செய்துவிட வேண்டுவது மிக இன்றியமையாதது. ஏனென்ருல், பதிவுப் புத்தகத்தில் குறிக்கப்படாவிட்டால், அப்புத்தகம் எடுத்துச் சென்றவர் பெயரிலேயே குறிக்கப்பட்டிருக்கும்.

5. நூல் நிலையங்களிலுள்ள தலைமை அதிகாரி முதல், பணியாட்கள் வரையில் உள்ள அனைவரும், படிக்க வருபவர்களிடம் மிகவும் அன்பாகவும், மரியாதையோடும் நடந்து கொள்ளல் வேண்டும். அல்லாவிடில், அந்நூல் நிலையங்கள் பெயரளவில் இருக்குமேயொழிய, மக்களுக்கு எவ்வித அறிவையும் அளிக்க வல்லன ஆகா. இவ்வித ஏற்பாடுகளைக் கொண்டுதான் இக்காலத்தில் நூல் நிலையங்களும், வாசகசாலைகளும் நடத்தப்பட்டு வருகின்றன.

6. இத்தகைய நூல் நிலையங்களாலும், வாசகசாலைகளாலும் உண்டாகும் நன்மைகள் பல. அனேக புத்தகங்களை வாசிப்பது, ஒருவர் அறிவு வளர்ச்சியடைந்து நாட்டிற்கே ஒப்பற்றவராய் விளங்க ஏதுவாய் இருக்கின்றது. பத்திரிகைகளைப் படிப்பதனுல் உலகிலுள்ள பல்வேறு நாட்டுச் செய்திகளை அறியலாம். முதியவர் முதல் இளைஞர் ஈருகவும் செல்வர் முதல் ஏழையர் ஈருகவும் உள்ள அனைவரும் பல நூல்களையும் படித்து, தம் கல்வியறிவைப் பெருக்கிக் கொள்ளுகின்றனர். பல தொழில் முறைகளைக் கற்பிக்கக்கூடிய பல மொழிகளில் எழுதப்பெற்ற அனேக புத்தகங்கள் நூல் நிலையங்களில் நிரம்பியிருப்பதால், எம்மொழியில் யார் யார் எந்தெந்தத் தொழில்களைப் பயின்றிருக்கிருர்களோ, அம்மொழியில் அந்தந்தத் தொழில்களைப் பற்றி எழுதியுள்ள புத்தகங்களனைத்தையும் படித்துத் தங்கள் தங்கள் தொழில் முறைகளை மேன்மேலும் விருத்தி செய்துகொள்ளுவதற்கும் நூல்

நிலையங்கள் பயன்படுகின்றன. இள வாலிபர்களும், பெண்களும் தங்கள் கல்லூரிகளில் படித்த விருப்பமுள்ள பாடங்களை மேன்மேலும் விருத்தி செய்துகொள்ளவும் நூல் நிலையங்கள் துணை புரிகின்றன. அருநூல்களைப் பெருவிலை கொடுத்து வாங்கிப் படிக்க வசதியில்லாத வறிஞனும், தான் விரும்பும் புத்தகங்களிலுள்ள அருமையான கருத்துக்களை வாசித்து, மனனம் செய்து, அறிஞனாய் விளங்குவதற்கு ஏதுவாக இருப்பதும் நூல் நிலையமே. ஒருவனுக்குச் சாஸ்திரங்களிலோ, இலக்கிய இலக்கணங்களிலோ, உடற்பயிற்சியிலோ, தொழில் முறைகளிலோ ஏதேனும் சந்தேகம் தோன்றினால், அவன் பிறருடைய உதவியின்றித் தன்னிச்சையாக நூல் நிலையத்திற்குச் சென்று படித்துத் தன் ஐயத்தைப் போக்கிக்கொள்ளலாம். கற்றறியா மூடனும் ஒரு புத்தகசாலையில் நுழைந்து விட்டானானால், புத்தகங்கள் வரிசைப் படுத்திப் பிரோக்களில் அடுக்கி வைத்திருக்கும் வனப்பினையும், அமைதி நிலவிய அவ்விடத்தில் பலர் அமர்ந்து வாசிப்பதையும் பார்த்தவுடன், தானும் படிக்க வேண்டுமென்னும் பேரவாத் தன் மதியில் தோன்ற, படிக்க முயலுவானே ஒழிய, திருடனைப்போல விழித்துக் கொண்டு அதனை விட்டு நீங்குவதற்குத் துணியான். மக்களின் கல்வியறிவு ஓங்கி வளர்வதற்கும், நடை உடைபாவனைகள் தலை சிறந்து விளங்குவதற்கும், உலகில் நடைபெறும் அரசியல் விஷயங்களை அறிதற்கும், இன்னும் பல நன்மைகள் உண்டாவதற்கும் இந்நூல் நிலையங்கள் பெருந் துணையாயிருக்கின்றன; மேலும், நாட்டின் நாகரிகம் முன்னேறவும் துணை புரிகின்றன.

7. இத்தகைய பயன்களைத் தரத்தகுந்த நூல் நிலையங்கள் நம் நாட்டில் மிகக் குறைவாய் இருக்கின்றன. நகரங்களில் பல பகுதிகளிலும் வாசகசாலைகளையும் நூல்

நிலையங்களையும் அமைத்து, ஏழை மக்களின் கல்வி அறிவைப் பெருகச்செய்ய வேண்டிப் பல பணக்காரர்கள் நன்கொடைகள் வழங்க வேண்டும். அரசாங்கத்தாரும் அவ்வப்போது ஆங்காங்கே நூல் நிலையங்களை ஏற்படுத்தி, வேண்டும் பண உதவி செய்தல் வேண்டும். அப்பொழுதுதான் நூல் நிலையங்கள் பல தோன்றும்; நாட்டிலிருக்கும் அறியாமை என்னும் இருள் நீங்கும். வருங்காலத்தில் நம் தமிழ் நாடு பொருளாதாரத்திலும், நாகரிகத்திலும், கல்வியறிவிலும் மேனாட்டைவிடச் சிறப்புற்று விளங்க வேண்டுமானால், தமிழ் மக்களாகிய அனைவரும் தங்கள் தங்கள் சத்திக்கேற்ப, மக்கள் நடமாடும் முக்கியமான வீதிதோறும், குக்கிராமந் தோறும் வாசகசாலைகளை அமைப்பதற்கேற்ற பொருளுதவி செய்து, அவைகளை விருத்தியாக்குவதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருக்கப் பெருமுயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுவது இன்றியமையாதது.

### அருஞ்சொற்பொருள்

ஏழுபிறப்பு-மக்கள், தேவர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம், இடுக்கண்-துன்பம், உறுதுணை-பேருதவி, ஊனக்கண்-குற்றமுடைய கண், நூல்—புத்தகம், பணி-வேலை, வனப்பு-அழகு, ஐயம்-சந்தேகம்.

### கேள்விகள்

1. கற்றவனுக்கும் அரசனுக்கும் உள்ள வேறுபாடு யாது?
2. கல்வியறிவைப் பெறும் வழிகள் எவை?
3. நூல் நிலையம் அமைந்திருப்பதால் ஏற்படும் நன்மைகள் யாவை?
4. நூல் நிலையம் நடத்தப்படும் முறைகள் யாவை?
5. பொதுமக்கள் அறிவைப் பெருக்க வழி யாது?

### பயிற்சி

1. நம்நாட்டில் பல்லாண்டுகட்கு முன்பே நூல் நிலையம் இருந்தது என்பதற்கு ஒரு சான்று கூறு.
2. நூல் நிலையத்திற்குச் சென்று படிக்காதவர்களும் நூல்களைப் பெற்றுப் படிக்கச் செய்யவேண்டிய முறைகள் எவையேனும் இருப்பின் அவற்றைக் குறிப்பிடு.
3. உன் பள்ளிக்கூட நூல் நிலையம் நடைபெறும் முறையினையும் அதனுல் நீ அடைந்த பலனையும் குறித்து ஒரு கட்டுரை எழுது.

### இலக்கணம்

## காலங்காட்டும் இடைநிலைகள்

வினைப்பகுபதங்களில் காலத்தைக் காட்டும் எழுத்துக்கள் **இடைநிலைகள்** எனப்படும். இறந்தகாலத்தைக் காட்டும் இடைநிலைகள் **த், ட், ற், இன்** என்பன; நிகழ்காலம் காட்டும் இடை நிலைகள், **கிறு, கின்று, ஆநின்று** என்பன ; எதிர்காலம் காட்டும் இடைநிலைகள் **ப், வ்** என்பன.

| | |
|---|---|
| (உ-ம்) செய்தான் = செய் + **த்** + ஆன்<br>உண்டான் = உண் + **ட்** + ஆன்<br>கற்ருன் = கல் + **ற்** + ஆன்<br>பேசினன் = பேசு + **இன்** + ஆன் | இறந்தகால இடைநிலைகள் |
| செய்கிருன் = செய் + **கிறு** + ஆன்<br>செய்கின்ருன் = செய் + **கின்று** + ஆன்<br>செய்யா நின்ருன் = செய் + **ஆநின்று** + ஆன் | நிகழ்கால இடைநிலைகள் |
| செய்வான் = செய் + **வ்** + ஆன்<br>உண்பான் = உண் + **ப்** + ஆன் | எதிர்கால இடைநிலைகள் |

### பயிற்சி

1. இப்பாடப் பகுதியில் முதல் பாராவில் உள்ள பகுபதங்கட்கு உறுப்பிலக்கணம் கூறு.
2. இருக்கின்றன, வருவார், கொடுப்பார், ஓடினர், வருகின்ருன்— உறுப்பு இலக்கணம் கூறு.

# 4. நல்ல தீர்ப்பு

1. இத்தாலி தேசத்தின் தலைமைப் பட்டினமாகிய வெனிஸ் நகரத்தில் ஒரு பெரிய கிறிஸ்தவ தனவந்தன் வாழ்ந்து வந்தான். அவன் பெயர் **அந்தோனியோ** என்பது. அவன் ஒரு வியாபாரி; வெளி நாடுகளுக்கு மரக்கலங்களின் மூலம் சரக்குகளை அனுப்பி விற்றுப் பெருவாரியான நிதிகளைத் திரட்டி வந்தான்; "திரைகடல் ஓடியும் திரவியந் தேடு," என்னும் முதுமொழிக்கு ஏற்பப் பெரும்பொருளைச் சேர்த்து வந்தான்; ஏழை எளியவர்கட்கு வட்டியின்றிப் பணம் கொடுத்து அவர்கட்குப் பெருந்துணைவனாயும் விளங்கினான். இதனால், வெனிஸ் நகரத்தில் இருந்த பலரும் அவனை விரும்பி வந்தனர். இத்தகைய நற்குணம் படைத்த அந்தோனியோவுக்குப் நண்பர் பலர் இருந்தனர். அவர்கள் **பசானியோ, கிராஷியானோ, லொரன்ஸோ** முதலியவர் ஆவர். அவர்களுள் பசானியோ மட்டும் அந்தோனியோவுக்கு நெருங்கிய உயிரனைய நண்பனாவான்.

2. வெனிஸ் நகரிலே ஒரு யூதனும் வாழ்ந்து வந்தான். அவன் பெயர் **ஷைலக்கு** என்பது. அவன் சிறிதும் ஈவு இரக்கம் இன்றி அதிக வட்டிக்குப் பணத்தைக் கொடுத்துச் செல்வத்தைக் குவித்து வந்தான். இதனால், வெனிஸ் நகர மக்கள் அவனை வெறுத்தார்கள். அந்தோனியோவும் ஷைலக்கைப் பெரிதும் வெறுத்து வந்தான்; தான் நேரே கண்டு விட்டால், அவனைத் தன் வாய்க்கு வந்தபடி திட்டியும் இருக்கிறான். இதற்குக் காரணம், ஷைலக்கு அதிகமான வட்டியினைப் பெற்று ஏழை எளியவர்களை வதைத்ததேயாகும். இதனால், ஷைலக்கு அந்தோனியோவினிடம் உள்ளூறப் பகை கொண்டு இருந்தான்; பழிக்குப் பழி வாங்கக் கருதிக் கொண்டிருந்தான்.

3. இங்ஙனம் இவ்விருவரும் ஒருவர்க்கொருவர் நேர் மாறான குணத்துடன் வெனிஸ் நகரில் வாழ்ந்து வருகையில், ஒரு நாள் பசானியோ தன் நண்பனான அந்தோனியோவை அணுகி, "ஆருயிர் நண்ப, நான் மணமாகா இளைஞன் என்பது நீ அறியாததன்று. நான் இப்பொழுது திருமணத்திற்கு வேண்டிய ஆயத்தம் செய்கிறேன். **பெல்மாண்டு** நகரில் ஒரு மாது இருக்கிறாள். அவள் அழகில் மிகுந்தவள்; செல்வத்தில் சிறந்தவள். அவளை நான் மணக்க முயல்கிறேன். பெல்மாண்டுக்குப் போகவும் எனக்குரிய ஆடை அலங்காரங்களைச் செய்துகொள்ளவும் எனக்குப் பணம் தேவையாய் இருக்கிறது. ஆகவே, எனக்கு இப்போது பண உதவி புரிவாயாக,'' என்று வேண்டிக்கொண்டனன்.

4. அந்தோனியோவினிடம் அச்சமயத்தில் பணம் இல்லை. எல்லாம் சரக்குகளாக மாற்றப்பட்டுக் கப்பல்களில் ஏற்றப்பட்டு வெளி நாடுகளுக்குச் சென்றிருந்தன. அவை விற்கப்பட்டு வந்த பிறகே அவன் கையில் பணம் ஏராளமாக இருக்கும். என்றாலும், அந்தோனியோ எவ்வாறேனும் பசானியோவின் எண்ணத்தை நிறைவேற்ற வேண்டுமென்ற தீர்மானம் கொண்டவனாய், "நண்ப, உனக்கு உதவக்கூடிய பொருள் என்னிடம் இல்லை என்பதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டா. நீ ஷைலக்கினிடம் வட்டிக்குப் பணம் பெற்றுக்கொள். அப்பணத்திற்கு நானே ஈடாய் இருந்து பத்திரத்தில் கையொப்பம் இடுவதாகவும் சொல். அவன் தடையின்றிக் கொடுப்பான். அதனைப் பெற்று உன் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்,'' என்றனன். பிறகு இருவரும் ஷைலக்கை நாடிச் சென்றனர்.

5. பசானியோ மட்டும் ஷைலக்கை அண்டினன். அந்தோனியோ சிறிது சேய்மைக்கண் நின்றுவிட்டனன்.

பசானியோ ஷைலக்கைத் தனக்குத் தேவையான மூவாயிரம் டக்கட்டுப் பணம் வட்டிக்குத் தருமாறு கேட்டனன் ; அத ேைடு அந்தோனியோவும் பத்திரத்தில் கையொப்பம் இடுவ தாகவும் கூறினன். ஷைலக்கு, "ஆ! அந்தோனியோவா கையொப்பம் இடுவார் !" என்று குதூகலப்பட்டுக் கொண் டிருக்கையில் அந்தோனியோவும் ஷைலக்கை அண்மினன். ஷைலக்கு அந்தோனியாவைப் பார்த்து, "ஐய, பணம் வட் டிக்குத் தருமாறு பாசனியோ கேட்கிறுர். எனக்கு வட்டி ஒன்றும் வேண்டா. பத்திரத்தில் குறிப்பிட்ட தேதியில் பணத்தைத் திருப்பிக்கொடாவிட்டால், நான் உமது இருத யத்திலிருந்து ஒரு பவுண்டு தசையை மட்டும் அறுத்து எடுத் துக்கொள்ளலாம் என்பதை மட்டும் குறித்து எழுதிக்கொடுத் தால் அதுவே எனக்குப் போதுமானது. பின் பணத்தைத் தரத் தடையேதும் இல்லே," என்றனன்.

6. அந்தோனியோ, "அப்படியே எழுதிக் கொடுக்கி றேன். நீ பணம் கொடு," என்று கூறினன். பசானியோ இவ்வாறு கடுமையான நிபந்தனேக்குட்பட்டுப் பணத்தைப் பெற விரும்பவில்லே. ஆனல், அந்தோனியோ, "அப்படி எழுதிக் கொடுப்பதால் ஆபத்து ஒன்றும் ஏற்பட்டு விடாது. எனக்கு இன்னும் சில தினங்களில் பணம் கைக்கு வந்து சேரும். அதனுல், குறிப்பிட்ட நாட்களுக்கு முன்பே பணத் தைத் திருப்பிக் கொடுத்துவிடுவோம்," என்று கூற, ஒருவாறு பசானியோ பணத்தைப் பெற ஒவ்வினன். அந்தோ னியோ, ஷைலக்கு எண்ணப்படி கையொப்பம் இட்டுத் தொகையைப் பெற்றுப் பசானியோவுக்கு ஈந்தான்.

7. பசானியோ, பெல்மாண்டிற்குத் தன்னேடு கிராஷி யானேவையும் அழைத்துக்கொண்டு சென்ருன். போர்ஷியா என்னும் அவன் காதலி, அவ்விருவரையும் வரவேற்ருள்.

8. போர்ஷியா பேரழகு படைத்தவள்; சிறந்த செல்வந்தர் திருமகள். இவ்விரண்டு காரணங்களால் அவளை மணக்க எல்லாரும் விரும்பினர். ஆயினும், 'பகுத்தறிவும், பண்பாடும் உடையவனே இவளை மணந்து வாழ வேண்டும்,' என்று எண்ணிய அவள் தந்தையார், பொன்னாலும், வெள்ளியாலும்; ஈயத்தாலும் மூன்று பேழைகளைச் செய்து, அவற்றுள் ஒன்றில் போர்ஷியாவின் படத்தை வைத்து, யார் போர்ஷியாவின் படம் உள்ள பெட்டகத்தினைத் தேர்ந்தெடுக்கின்றனரோ, அவரே அவளை மணக்க வேண்டுமென்ற நிபந்தனையை ஏற்படுத்தியிருந்தனர். இந்த நிபந்தனைக்குட்பட்ட மன்னர் பலர் முயன்றனர். எவரும் தம் முயற்சியில் வெற்றி பெறவில்லை. ஆனால், பசானியோ, நிபந்தனைகளை நன்கு உணர்ந்து, மூன்று பேழைகளையும் நன்கு உற்று நோக்கி, வெளித்தோற்றத்திற்கு இடங்கொடாமல், போர்ஷியாவின் படம் ஈயப்பெட்டியிலே தான் இருக்க வேண்டும் என்று யூகித்தவனாய், அப்பெட்டிக்குரிய திறவுகோலையே வேண்டி, அப்பேழையினைத் திறந்தான். அவன் உள்ளம் உவக்கும் முறையில் அப்பெட்டியில் போர்ஷியாவின் படம் இருக்கக் கண்டான். போர்ஷியாவும் மனம் மகிழ்ந்தாள். எல்லாரும் இன்பம் அடைந்தனர். போர்ஷியா பசானியோவிற்கு உரியவளானாள். அவ்விருவரும் இங்ஙனம் ஒன்றுபட்டது போலவே கிராஷியானோவும், நெரிஸா என்னும் போர்ஷியாவின் தோழியும் மனம் ஒத்து ஒருவர்மீதொருவர் காதல் கொண்டனர். இந்தக் குதூகலமான சமயத்தில் ஓர் ஆள் தன் கையில் ஒரு முடங்கலுடன் வந்து அதைப் பசானியோவின் கையில் ஈந்தனன்.

9. பசானியோ கடிதத்தினைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினான். படிக்கும்போதே அவன் வதனத்தில் துக்கக் குறிகள் தோன்றலாயின. அதன் காரணம் யாது என்று

போர்ஷியா வற்புறுத்தி வேண்ட, பசானியோ, 'இந்தக் கடிதம் என் ஆருயிர் நண்பனுன அந்தோனியோவினிட மிருந்து வந்துள்ளது அந் நண்பன் அனுப்பிய சரக்குகள் நிறைந்த கப்பல்கள் உவரியில் மூழ்கியதால், அவன் பெரிய நட்டத் திற்கு ஆளாகிவிட்டான் ; எனக்காக, ஷைலக்கினிடம் தன்னையே ஈடாகக் காட்டிப் பணம் தந்திருப்பதால், அதனைத் திருப்பிக் கொடுக்க இயலாத காரணத்தால், ஷைலக்கிடம் எழுதிக் கொடுத்த பத்திரத்தின்படி அவன் இறப்பது உறுதி. அதனுல், எப்படியும் தன்னை வந்து பார்த்துவிட்டுப் போமாறு எழுதியிருக்கிருன்,' என நவின்ருன்.

10. போர்ஷியா உடனே பசானியோவை ஷைலக்கிற் குக் கொடுக்க வேண்டிய பணத்தைப் போலப் பத்து மடங்கு எடுத்துக்கொண்டு சென்று ஷைலக்கினிடம் கொடுத்து, நண்பனை மீட்டு வருமாறு அனுப்பினள். பசானியோ பணப் பையுடன் கிராஷியானேவை அழைத்துக்கொண்டு வெனிஸ் நகரம் சென்றனன்.

11. இதற்கிடையில் போர்ஷியா சும்மா இருந்திலள்; தன் உறவினரான கீர்த்தி வாய்ந்த வழக்கறிஞர் **பெல் லாரியோ** என்பவருக்கு ஒரு கடிதம் எழுதித் தனக்கு வழக் கறிஞர் அணியும் உடையினைத் தந்து அனுப்புமாறு வேண்டி, இவ் வழக்கினை எவ்வாறு தீர்ப்பது என்பதற்குரிய ஆலோ சனையையும் எழுதி அனுப்புமாறு கேட்டுக்கொண்டாள். அவரும் அவ்வாறே வழக்கறிஞர் உடையினைக் கொடுத்து, வழக்கை நடத்த வேண்டிய ஆலோசனையையும் எழுதி அனுப்பினர் ; அவற்றுடன் வெனிஸ் நகரத் தலைவருக்கும் ஒரு கடிதம் எழுதி, அதில் அக்கடிதம் கொண்டு வருபவரைக் கொண்டே வழக்கினை நடத்த ஏற்பாடு செய்யும்படி குறிப்பிட் டிருந்தனர்.

12. போர்ஷியா தன் பணி மகளாக நெரிஸாவையும் அழைத்துக்கொண்டு, தான் வழக்கறிஞர் போலவும், தன் பணிமகள் தன் குமாஸ்தாவைப் போலவும் வேடம் பூண்டு வெனிஸ் நகர நீதி மன்றத்தை அடைந்தனள்.

13. நீதி மன்றத்தில் அந்தோனியோ, பசானியோ, ஷைலக்கு, வெனிஸ் நகரத் தலைவர் முதலிய பலர் நிறைந்திருந்தனர். பசானியோ ஷைலக்கினிடம் அவன் கொடுத்த பணத்தைவிட மும்மடங்கு கொடுக்க முன் வந்தான். ஷைலக்கு வாங்க மறுத்துவிட்டான்.

14. மாறு வேடம் பூண்டு வழக்கறிஞராய்க் காட்சி யளித்த போர்ஷியா, விசாரணை நடத்தத் தொடங்கினாள். போர்ஷியா வழக்கினை நன்கு விசாரித்துக்கொண்டு, "அந்தோனியோ பணம் செலுத்த இயலாது இருக்கின்றாரோ ?" என்று வினவினாள். உடனே பசானியோ, "இதோ! பணம் ஆயத்தமாய் இருக்கிறது! வாங்கிய பணத்தைப் போல மும்மடங்கு கொடுக்கவும் சித்தமாய் இருக்கிறேன் !" என்று கூறினான். உடனே போர்ஷியா ஷைலக்கை நோக்கி, "ஐயா, பணத்தைப் பெற்றுக்கொள்வதுதானே ? இதில் என்ன தடை ?' என்று கேட்டனள். ஷைலக்கு, தனக்குப் பணம் வேண்டா என்றும், பத்திரத்தில் எழுதியுள்ளபடி ஒரு பவுண்டு தசையே வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினான்.

15. போர்ஷியா ஷைலக்கைப் பார்த்து, "ஐயா, சிறிது இரக்கம் காட்டவேண்டும். இவ்வளவு கொடுமையாய் இருத்தல் கூடாது. பத்திரத்தில் உள்ளபடி இருதயத்திலிருந்து ஒரு பவுண்டு தசை கேட்பது முறைதான். இருந்தாலும், உயிருக்கு ஆபத்தான செயலில் அல்லவா நீர் ஈடுபடுகிறீர் ? ஆகவே, சிறிது மனம் இளக வேண்டும்!" என்று வேண்டினாள். எவ்வளவு சொல்லியும் ஷைலக்கு கேட்கவில்லை;

தனக்குப் பத்திரப்படி அந்தோனியோவின் ஒரு பவுண்டு இருதய மாமிசமே தேவை என்று மேலும் வற்புறுத்தினன். அப்போதும் போர்ஷியா ஷைலக்கை நோக்கி, "தசையை நிறுக்கத் துலக்கோலினைக் கொணர்ந்தீரோ?" என்றனள். ஷைலக்கு மிகுந்த களிப்புடன், "ஆஹா! கொண்டு வந்துள்ளேன்!" என்று கூறி, உடனே தராசினை எடுத்துக் காட்டினன்.



16. "சரி, இரத்தம் சிந்தாதிருக்கப் பார்த்துக்கொள்ள உம் பக்கலில் ஒரு மருத்துவரை வைத்துக்கொள்ளும்," என்று போர்ஷியா கேட்டுக்கொண்டனள். உடனே ஷைலக்கு போர்ஷியாவைப் பார்த்து, "அப்படி ஒன்றும் பத்திரத்தில் குறிப்பிடப்படவில்லையே. ஆகவே, பத்திரத்தில் உள்ளபடி தீர்ப்புக் கொடுங்கள்," என்று கத்தினன்.

17. போர்ஷியா ஷைலக்கைப் பார்த்து, "ஐயா, பத்திரத்தின்படி நீர் ஒரு பவுண்டு தசையினைப் பெற உமக்கு உரிமையுண்டு. அந்தோனியாவின் இதயத்தினின்றும்

அறுத்து எடுத்துக்கொள்ளலாம்,” என்று கூறித் தன் வாயினை மூடுதற்கு முன், ஷைலக்கு விரைந்து அந்தோனி யோவின் இருதயத்தின் அருகே கூர்ங்கத்தியுடன் சென்றான். நீதி மன்றம் முழுவதும் ஒலியடங்கி இரக்கக் குறியுடன் காணப் பட்டது. அந்தச் சமயத்தில் போர்ஷியா ஷைலக்கைப் பார்த்து, “ ஐயா, உம் பத்திரத்தில் ஒரு பவுண்டுக்கு மேல் சிறிது குறைவாகவோ, மிகுதியாகவோ தசையினை அறுத்து எடுத்துக் கொள்ளலாம் என்பது குறிப்பிடப்படவில்லை. இரத்தம் சிந்தாமல் அறுக்கலாம் என்பதும் குறிப்பிடப் பட்டிலது. ஆகவே, நீர் அறுத்து எடுக்கையில் கிறிஸ்தவன் இரத்தம் ஒரு துளி கீழே சிந்துதல் கூடாது. சரியாக ஒரு பவுண்டு நிறையுள்ள தசையையே எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த நிபந்தனைகளைத் தவறினால், நீர் பெருங் குற்றத்திற்கு ஆளாவீர்,” என்றனள்.

18. ‘கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதுபோல’ ஷைலக்கு இந்த மொழிகளைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனான். தான் கொணர்ந்த நிறைகோலினையும் கத்தியை யும் கீழே நழுவவிட்டு, “நீதிபதி அவர்களே, நான் கொடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுங்கள்! நான் சென்று விடுகிறேன்!” என்று கெஞ்சிக் கேட்டனன். பசானியோ, தன் பணப்பையை நீட்டி, “ஐயா, இதோ! எடுத்துக்கொள் ளுங்கள்!” என்று கூறினன். போர்ஷியா பணத்தைக் கொடாதவாறு பசானியோவைத் தடுத்துவிட்டாள். ஷைலக் கைப் பார்த்து, “ஐயா, நீர் ஒரு கிறிஸ்தவன் உயிரைக் கொல்ல எண்ணங் கொண்டதால், உம்மைத் தூக்கில் இட வேண்டும். ஆனால், வெனிஸ் நகரத்தலைவர் இரக்கம் காட்டினால், அத் தண்டனையினின்று நீர் தப்பலாம். இப்போது தண்டனை யாதெனில், நீர் யாரைக் கொல்ல எண்ணமிட்டீரோ, அவருக்கு உம் சொத்தில் பாதி சேர்ந்துவிட வேண்டும்.

மற்றொரு பாதி அரசாங்கத்தைச் சேரவேண்டும்," என்று தீர்ப்பு அளித்தாள். நகரத்தலைவர் ஷைலக்கிற்கு உயிர்ப் பிச்சை ஈந்தார். அந்தோனியா தனக்கு அளிக்கும் செல்வத்தினை **லொரன்ஸோ** என்னும் கிறிஸ்தவனைக் காதலித்து வாழும் **ஜெஸிக்கா** என்னும் ஷைலக்கின் மகளுக்கே கொடுத்துவிடும்படி கூறிவிட்டான். ஷைலக்கு இந்த ஏற்பாட்டின்படி கையொப்பம் இடுவதாகக் கூறிவிட்டு வெளி ஏறினான். நீதிமன்றமும் கலைந்தது.

19. பசானியோ தன் நண்பனை அந்தோனியோவின் உயிரைமீட்ட நீதிபதிக்குத் தான் கொணர்ந்த பணத்தினைப் பரிசாக அளிக்க விரும்பி, அதனை ஏற்குமாறு வேண்டினான். ஆனால், நீதிபதியாய் வந்த போர்ஷியா அதனை ஏற்க மறுத்து அவன் கையில் அணிந்திருந்த மோதிரத்தினைத் தருமாறு கேட்டனள். அம்மோதிரம் போர்ஷியாவினால் பெல்மாண்டில் கொடுக்கப்பட்டது. உயிர் உள்ள வரையில் அது பசானியோவின் விரலிலிருந்து, எக்காரணம் கொண்டும் கழற்றப்படாதிருக்க வேண்டும் என்ற நிபந்தனையுடன் அவன் விரலில் அணியப்பட்டது. அத்தகைய ஆழியினை அவன் எப்படி அளிக்க முடியும்? ஆகவே, அவன் கொடுக்க மறுத்தான். போர்ஷியா "அது தவிர வேறு ஒன்றும் வேண்டா" என்று கூறி விட்டுப் புறப்பட்டு விட்டனள். ஆனால், அந்தோனியாவின் வற்புறுத்தலின்மேல், அம்மோதிரம் நீதிபதிக்குக் கொடுக்கப்பட்டது. அவ்வாறே கிராஷியானோவின் மோதிரத்தினையும் நெரிஸா பெற்றுக் கொண்டாள்.

20. போர்ஷியாவும் நெரிஸாவும் வெகு விரைவில் பெல்மாண்டு நகரை அடைந்து, தம் கணவன்மார்களையும் அந்தோனியோவையும் எதிர்கொண்டழைக்கக் காத்திருந்தனர். சிறிது நேரத்திற்கெல்லாம், அந்தோனியோவும் பசானியோ

வும் மற்றும் பலரும் வந்து சேர்ந்தனர். விருந்து தயார் செய்யப்பட்டிருந்தது. பசானியோ தான் சென்று தன் நண்பனை மீட்டு வந்த செய்திகளைப் பற்றிக் கூறி அந்தோனியோவையும் போர்ஷியாவுக்கு அறிமுகப்படுத்தினன்.

21. இவ்வாறு இவர்கள் மகிழ்வோடு இருக்கையில் நெரிஸாவும் கிராஷியானோவும் சிறிது சச்சரவு செய்துகொண்டு இருந்தனர். அச்சச்சரவுக்குக் காரணத்தை அறிந்தபோது கிராஷியானோ, தனக்கு நெரிஸா அளித்த ஆழியினை நீதிபதியின் குமாஸ்தாவிற்குக் கொடுத்துவிட்டு வெற்று விரலினனாய் இருப்பதே என்பது தெரிய வந்தது. உடனே போர்ஷியாவும் பசானியோவின் விரலில் மோதிரம் இல்லாமையை உணர்ந்து வினவிய போது, அவனும் தன் நண்பன் உயிரைக் காத்த நீதிபதிக்குப் பரிசாக அளித்துவிட்டதாகக் கூற, அவளும் சிறிது நேரம் வேடிக்கையாகப் பசானியோவிடம் சிறிது வருத்தம் கொண்டவள் போல நடந்துகொண்டாள். அப்போது அந்தோனியோ எல்லாம் தன்பொருட்டு நிகழ்ந்த நிகழ்ச்சிதானே என்று கூறி வருந்தியதும், போர்ஷியாவும் நெரிஸாவும் உள்ளே சென்று, நீதி மன்றத்தில் அணிந்திருந்த உடைகளுடன் வெளியே வந்து, அவர்கள் பெற்ற கணையாழிகளைக்காட்டி, "இவைகள்தாமோ நீங்கள் நீதிபதிக்கும், குமாஸ்தாவிற்கும் ஈந்தவை?" என்று கேட்க, "ஆம்! ஆம்!" என்று பசானியோவும் கிராஷியானோவும் ஆரவாரம் செய்தனர். பின்பு போர்ஷியா மோதிரத்தைப் பசானியோவின் விரலில் அணிந்து, "இனியேனும் எக்காரணம் கொண்டும் இதனைக் கழற்ற வேண்டா," என்று கூறினள். நெரிஸாவும் அவ்வாறே கூறிக் கிராஷியானோவிடம் மோதிரத்தைக் கொடுத்தனள். அப்போதுதான் போர்ஷியாவே மாற்றுடையில் வந்து வழக்கினை நேர்மையாகத் தீர்த்து வைத்தாள் என்பது புலனாயிற்று.

போர்ஷியாவின் மாளிகை ஒரே குதூகலமாய் இருந்தது. இந்த நேரத்தில் அந்தோனியோவிற்கு முன்னர் கடலில் மூழ்கிப் போனதாகத் தெரியவந்த கப்பல்கள் இப்போது கரையினை அடைந்து அந்தோனியோவிற்கு நட்டத்தைச் செய்யவில்லை என்ற நற்செய்தியும் வந்து சேர்ந்தது. இதைக் கேட்டதும் எல்லாரும் சொல்ல ஒண்ணு ஆனந்தத்தில் அழுந் தினர். பின்பு யாவரும் இன்பமாக விருந்துண்டு இன்புறலா யினர்.

### அருஞ்சொற்பொருள்

நிதி-செல்வம், திரை-அலை, அண்மினன்-நெருங்கினன், மரக்கலம்-கப்பல், கூற்று-மொழி, பேழை-பெட்டி, வதனம்-முகம், உவரி-கடல், ஆழி-மோதிரம், நவின்ருன்-கூறினன், வழக்கறிஞர்-வக்கீல், பண்பாடு-குணம், உவக்கும்-மகிழும், துலை-தராசு, நீதி மன்றம்-நியாயசபை

### கேள்விகள்

1. அந்தோனியோவும் ஷைலக்கும் ஏன் ஒருவர் மீதொருவர் வெறுப்புக்கொண்டிருந்தனர் ?
2. பசானியோ எப்படிப் போர்ஷியாவை மணக்க நேர்ந்தது ?
3. போர்ஷியா ஏன் மாறுவேடம் பூண்டு நீதி மன்றம் அடைந்தாள்?
4. இப்பாடம் எதனல் 'நல்ல தீர்ப்பு' என்னும் பெயர் பெற்றது ?
5. பெல்மாண்டில் நடந்த விருந்தில் ஏன் சிறிது குழப்பம் ஏற் பட்டது ?

### பயிற்சி

அந்தோனியோவும் பசானியோவும் உத்தம நண்பர்கள் என்பதை விளக்கி ஒரு சிறு கட்டுரை எழுது.

### இலக்கணம்

#### போலி

ஒருசொல்லில் ஓர் எழுத்து நிற்கவேண்டிய இடத்தில் மற்றோர் எழுத்து நின்றும் பொருள் வேறுபடாமல், தொன்று தொட்டு வழங்கப் பட்டு வருவதைப் போலி என்பர். இப்போலி மூன்று வகைப்படும். அவை முதற்போலி, இடைப்போலி, கடைப்போலி என்பன.

(உ-ம்) வைத்தியன் = வைத்யன்
அய்யம் = ஐயம்
அவ்வை = ஔவை
பவுத்தர் = பௌத்தர்
} முதற்போலி

பித்து = பிச்சு
நீந்தினன் = நீஞ்சினன்
} இடைப்போலி

மரம் = மரன்
பந்தல் = பந்தர்
} கடைப்போலி

**பயிற்சி**

1. கீழ் வருவனவற்றில் போலிச்சொற்களை எடுத்து எழுதி, இன்ன போலி எனவும் கூறு:-சைத்தியம், அய்யா, சவுக்கியம், கௌவை, அஞ்சு, ஞண்டு, நயம், வைச்ச, சாம்பர், அரைஞாண், வண்டு.

2. ஐந்து போலி மொழிகளை உதாரணமாகக் காட்டு.

# 5. சாக்கலெட்டும் பிஸ்கட்டும் செய்தல்

1. சாக்கலெட்டையும், பிஸ்கட்டையும் விரும்பாத சிறுவர் சிறுமியர் இலர். ஏன்? பெரியவர்களுங்கூட இவ்விரண்டை மிக விரும்புகின்றனர். இந்த உணவுப் பொருளால் மேனாடு அடையும் வருவாய் மிகுதியாகும். மேனாடுகள் பிஸ்கட்டையும் சாக்கலெட்டையும் செய்து, அவற்றை இந்தியாவில் இறக்குமதி செய்து, பல துறையில் பணத்தைக் கொண்டு செல்கின்றன. இதனால், நம் இந்தியா, பொருளைப் பெருவாரியாக மேல் நாட்டவருக்கு ஈந்து வருகிறது. இவ்வாறு பொருளைப் பறிகொடுப்பதைப் பொறாத நம் காந்தியடிகளார், வெளி நாட்டுப் பொருள்கள் இந்தியாவுக்கு வருதல் கூடாது எனப் புரட்சி செய்யத் தொடங்கினர். "நம்

இந்தியா தேசம், இயற்கையில் நல்ல தட்ப வெப்பம் நிறைந் தது. இங்கு நீர்வசதி குறைவுறு வண்ணம் ஜீவ நதிகளான கங்கை, யமுனா, கிருஷ்ணா, காவேரி போன்றவை பாய்ந்து கொண்டிருக்கின்றன. மக்கட்பெருக்கத்திலும் இ ந் தி ய மக்கள் தொகையே மிகுதியாகும். உலக முழுமையும் உள்ள மக்கள் தொகையில் ஐந்தில் ஒரு பகுதி கொண்டது இந்தியா. தேவையான பொருள்களைத் தருதற்கு வானோங்கிய மரஞ் செறிந்த காடுகளும், பரந்த வயல்களும் நிறைந்திருக்கின்றன. இன்னோரன்ன வசதிகளைப் பெற்ற நாம், நம் தேவையை நாடிப் பிற நாட்டாரை எதிர் பார்த்தல் சிறிதும் அடாது, அடாது." என்று வற்புறுத்திக் கூறி வந்தார். மேலும், அவர், "குடிசைத் தொழில்களின் மூலம் பல தொழில்களைச் செய்து செய் பொருள்களைப் பெருக்கி பொருளாதார நிலையை உயர்த்தலாம்,' என அறிவித்துக் கொண்டு வந்தார்; இப்படி அறிவித்து வந்ததோடு நில்லாமல், அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் இயக்கத்தையும் ஆரம்பித்தார். அந்த உணர்ச் சியின் பயனாகத்தான் காந்தியடிகளார் ஆஸ்ரமமாகிய வார்தா வில் பல கைத்தொழில் முறைகள் ஆரம்பிக்கப்பட்டு, நடை பெறுகின்றன. தொழில் கற்பவருக்குத் தக்க பயிற்சியும் அளிக்கப்படுகிறது. அப்பயிற்சியின் பயனாலேதான் தோல் பதனிடுதல், பூட்ஸ் செய்தல், காகிதம் செய்தல், தேனீ வளர்த் தல், சோப்புச் செய்தல் முதலிய தொழில்கள் நடைபெற்று வருகின்றன. நம் சென்னை இராஜ்யத்தில், செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த வாலாஜாபாது இந்துமத பாடசாலை யிலும், சிறு சிறு குடிசைக் கைத்தொழில்கள் இளஞ்சிறார் களுக்குக் கற்பிக்கப்பட்டு வருகின்றன. ஆகவே, குடிசைக் கைத்தொழிலின் மூலம் நமக்குத் தேவையான பொருள்களை நாமே தயார் செய்துகொள்ளலாம். அத்தொழில் முறைப்படி தயார் செய்யக்கூடிய உணவுப் பொருள்கள் பலவாகும்.

வாழைப்பழத் தோலிலிருந்து **ஜாம்** எனப்படும் ஓர் இனிப்புப் பொருளைத் தயார் செய்யலாம். பிண்ணாக்கினின்று சாக்கலெட்டுச் செய்யலாம். கேழ்வரகினின்று பிஸ்கட்டுச் செய்யலாம்.

2. பிண்ணாக்கையும் கேழ்வரகையும் நாம் மிகவும் இழிந்த பொருளாக (ஒரு வேளையில்லாவிட்டாலும் மற்றொரு வேளை) கருதுகிறோம். இந்தப் பிண்ணாக்கும் கேழ்வரகுமே, வெளி நாடுகளுக்கு—அதாவது கடல் கடந்து செல்லக்கூடிய நாடுகளுக்கு—ஏற்றுமதி செய்யப்பட்டு, அங்கு இவற்றுடன் கூட்ட வேண்டிய பொருள்கள் கூட்டப்பட்டு சாக்கலெட்டு, பிஸ்கட்டு என்னும் பெயர் பெற்று, நல்ல மூடிகளால் பகட்டாக மூடப்பட்டு, இங்கு அனுப்பப்படுகின்றன. நம்மிடமிருந்து போன பொருளின் மதிப்புக் காற்பங்கானால், அப்பொருள் வேறு உருவில் வரும்போது முழுப்பங்கையும், அதற்கு மேலும் ஒரு பங்கையும் பெறும் மதிப்புடன் நாமே வாங்கிக்கொள்ளும் பெருமையையும் பெறுகின்றன. என்னே! நம் அறியாமையும், மேற்கு நாட்டவருடைய அறிவுடைமையும்! நாம் ஏன் அந்த மூலப்பொருள்களைக்கொண்டு பொருள்களைச் செய்து அவற்றின் பயனை நுகரலாகாது ?

3. பிண்ணாக்கு என்றால் நாம் என்ன எண்ணிக்கொண்டிருக்கிறோம் ? "இது மனித சமூகத்திற்குரிய உணவுப் பொருளன்று ; விலங்கினத்துள் மாட்டுக்குரிய ஆகாரப் பொருள்," என்று ஒதுக்கிவிடுகிறோம். ஆம், இந்தப் பிண்ணாக்குப் பிண்ணாக்கு வடிவில் இருக்கையில் மன்பதைகட்குத் தேவையில்லைதான். இதனைப் பக்குவப்படுத்தி மக்கள் இனத்திற்கும் பயன் அளிக்கத் தக்க முறையில் செய்தால், எத்துணை நலன் ஏற்படும் ? நம் இந்திய நாட்டுப் பொருள் வெளி நாட்டுக்குச் செல்லுமா ?

4. இதோ! உங்கள் கருத்தை இங்கே கசெலுத்திப் பிண்ணுக்கு, சாக்கலெட்டு ஆகும் விதத்தினைச் சிறிது கவனி யுங்கள். பிண்ணுக்கு இன்னது என்பது உங்களுக்கு நன்கு தெரியும். இப்பிண்ணுக்கு எள், தேங்காய், மணிலாக் கொட்டை, பருத்திக்கொட்டை ஆகிய இந்நான்கினின்றும் நமக்குக் கிடைக்கின்றது. இப்பொருள்களை நன்கு செக்கி லிட்டு ஆட்டி எடுத்தபோது, இப்பொருள்களின் கசிவு போக எஞ்சி நிற்பதே பிண்ணுக்காகும். இப்பிண்ணுக்குகளில்



மக்களுக்கு நல்ல உரத்தையும் வளர்ச்சியையும் தரவல்ல வன்மை பொருந்தியிருக்கின்றது. இவற்றை இரசாயன முறைப்படி பரிசோதித்துப் பார்த்தபோது, இவற்றில் புரோட் டீன், கொழுப்பு, பசைமா என்னும் மூன்று பொருள்களும் அமைந்திருப்பதை விஞ்ஞானிகள் கண்டார்கள்; இம்மூன்றும் மக்கள் உணவுக்கேற்ப அமைந்துள்ளனவெனவும் கூறுகின் றூர்கள். எள்ளுப் பிண்ணுக்கினுல் செந்நீர்ப் பெருக்கும், செந்நீர் ஓட்டமும் உடலுக்கு ஏற்படும் என்பது அறிஞர்

களின் துணிபாகும். தேங்காய்ப் பிண்ணுக்கு உடலில் கொழுப்பைப் பெருகச் செய்யும். மணிலாக்கொட்டைப் பிண்ணுக்குக்கு மெய்யின்கண் அமைந்த தசை நார்களை இறுகச் செய்யும் இயல்பு உண்டு. பருத்திக் கொட்டைப் பிண்ணுக்குக்கு மக்களின் உடற்கூற்றின் கட்டுக்களை நன் முறையில் காப்பாற்றி வளரச் செய்யும் ஆற்றல் உண்டு. பார்த்தீர்களா, பிண்ணுக்கின் குணநலங்களை. இத்தகைய பிண்ணுக்கில் சாக்கலெட்டுச் செய்யப்பட்டால், வாய்க்கும் சுவை ஏற்படும், பொருள் வருவாயும் மிகும் அல்லவா ?

5. பிண்ணுக்கை நன்கு பொடியாக்கித் தண்ணீரில் ஊற வைக்கவேண்டும் ; பின்பு நன்கு கழுவித் தூய்மை யாக்க வேண்டும். அதன் பின், வேகத்தக்க அளவுப்படி தண்ணீரை ஊற்றி, அடுப்பில் ஏற்றிக் கொதிக்க வைக்க வேண்டும். இப்படிச் செய்வதால், தண்ணீர் வற்றிப் போகும். எண்ணெய்ப் பசை இருந்தாலும் அது நீங்கிப் போக, அதனை வெயிலில் வைத்துப் பொடி செய்யவேண்டும். அப்பொடியைக் கண்ணாடிக் குப்பிகளில் இட்டு வைத்துக் கொள்ள வேண்டும்.

6. இவ்வாறு தயாரிக்கப்பட்ட பிண்ணுக்குப் பொடி யுடன் நன்கு சலித்து எடுத்துத் தூய்மை செய்யப்பட்ட கேழ் வரகு மாவு, மரிக்கன் மாவு என்னும் இரண்டு மாவையும் சம அளவு உடன் கூட்டிக்கொள்ள வேண்டும். பின்பு சர்க்கரை யைப் பாகு போலக் காய்ச்சிக்கொள்ள வேண்டும். அப் பாகில், இந்த மூன்று வகை மாவும் கலந்த கலப்புமாவைக் கொட்டிக் கிளறவேண்டும். அதன் பின்பு நெய் தடவப்பட்ட ஒரு தட்டில் ஊற்றி ஆற வைக்க வேண்டும். ஆறினவுடன் சிறு துண்டுகளாக அறுத்துக்கொள்ள வேண்டும். இதுவே சாக்கலெட்டு எனப்படும். இந்த மாவுடனும், சர்க்கரைப்

பாகுடனும் கொக்கோவையும் சேர்த்துவிட்டால் கொக்கோ மணமும் இருக்கும்; நிறமும் வந்துவிடும். பின்பு நிறநிறமான காகிதங்களில் சுற்றி வாணிபம் செய்ய வேண்டுவதுதான்.

7. பிண்ணுக்கு மாவுடன் முக்காற்பாகம் கோதுமை மாவைக் கூட்டினால், பிஸ்கட்டுச் செய்ய வசதி ஏற்படும். பிண்ணுக்கினால் இவ்வளவு பலன் இருப்பதனாலேதான் மேல் நாட்டவர் இதனைத் தம் நாட்டிற்குக் கலம் கலமாக ஏற்றுமதி



செய்துகொண்டு செல்கின்றனர். பின்பு இதன் உருவை மாற்றி நமக்கே அனுப்பிப் பணமாக்கிக் கொள்ளுகின்றனர். 1937-ஆம் ஆண்டு கணக்குப்படி நம் நாட்டிலிருந்து 154

இலட்சம் ரூபாய் மதிப்புடைய பிண்ணுக்கைக் கொண்டு போயினர் என்ருல், அவை எத்தனை கோடி பெறுமான பிஸ் கட்டும், சாக்கலெட்டுமாக மாறி இருக்கும் என்பதைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள் !

8. ஆகவே, இனியாகிலும், நம் நாட்டில் இந்தப் பிண் ணுக்குப் பொருளை அசட்டை செய்யாமல், குடிசைக் கைத் தொழில் திட்டத்தின் கீழ்ப் பயன்படுத்திப் பல விதமான பிஸ் கட்டு, சாக்கலெட்டு, கேக்கு முதலியவற்றைச் செய்து நம் இந்தியாவின் பொருளாதாரத்தைப் பெருக்குவோமாக. வேலை இல்லாதவர்களை இத்தகைய வேலையில் ஈடுபடுத்தி அவர்களை யும் உய்யுமாறு செய்வோமாக. உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோமாக.

### அருஞ்சொற்பொருள்

துறை-வழி, தட்பம்-குளிர்ச்சி, வரை-மலை, செய்-நிலம், நுகர—அனுபவிக்க, மன்பதைக் - மக்கட்சமூகம், ஆற்றல் - வல்லமை, தூய்மை—சுத்தம், உய்யுமாறு-பிழைக்கும்படி.

### கேள்விகள்

1. மூலப்பொருள்கள் கிடைத்தற்குரிய வசதிகள் இந்தியாவில் உண்டு என்பது எப்படித் தெரிகிறது ?
2. இந்தியாவில் எது குறித்துப் புரட்சி செய்தனர் ?
3. பிண்ணுக்கு எவ்வெப்பொருள்களிலிருந்து கிடைக்கின்றது ?
4. பிண்ணுக்கில் அமைந்துள்ள பொருள்கள் எவை ?
5. பிண்ணுக்கைக் கொண்டு சாக்கலெட் செய்யும் முறை யாது ?
6. பிஸ்கட்டுச் செய்யவேண்டுமானுல் எம்முறையில் செய்யலாம் ?

### பயிற்சி

1. குடிசைத் தொழில்களாக மேற்கொள்ளக் கூடிய சில தொழில் களைக் குறிப்பிடு.
2. ஜீவநதிகள், தட்பவெப்பம், பொருளாதாரம், இன்னேரன்ன —இத்தொடர்களை வாக்கியத்தில் அமை.
3. 'தொழிற் கல்வி' என்னும் தலைப்புத்தந்து ஒரு கட்டுரை எழுது.

## இலக்கணம்

### வினைமுற்று

தொழில் முற்றுப் பெற்றதைக் காட்டுவது **வினை முற்று**. இவ் வினைமுற்று பல வகைப்படும். இங்கு ஏவல் வினை முற்று, வியங் கோள் வினைமுற்று, 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினை முற்று ஆகிய மூன்றையும் மட்டும் பார்ப்போம்.

ஏவல் வினைமுற்று கட்டளைப் பொருளில் வரும்.

(உ-ம்) கந்தா, **படி**.<br>
முருகா, **வா**, } ஏவல் வினை முற்று.

வேண்டல், விதித்தல், வைதல் வாழ்த்தல் என்னும் பொருளில் வருவது வியங்கோள் வினைமுற்று.

| (உ-ம்) | | |
|---|---|---|
| இராமா, தருக. | = வேண்டல் | வியங்கோள் வினைமுற்று |
| கிருஷ்ணு, செய்க. | = விதித்தல் | |
| பேயே, ஒழிக. | = வைதல் | |
| வேலா, வாழ்க. | = வாழ்த்தல் | |

நடக்**கும்** செழிக்**கும்** என்று வரும் வினைமுற்று செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்றும். இது ஆண்பால், பெண்பால், ஒன்றன் பால், பலவின்பால் என்னும் நான்கு பாலிலும் வரும்.

| (உ-ம்) | |
|---|---|
| இராமன், செய்யும். | 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினை முற்று. |
| வள்ளி, படிக்கும். | |
| அது, வரும், | |
| அவை, போகும். | |

#### பயிற்சி

1. ஏவல் வினை, வியங்கோள், வினை 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைகட்குத் தனித்தனி மும்மூன்று உதாரணம் கொடு.
2. இப்பாடத்தின் இரண்டாவது பாராவில் வந்துள்ள வினை முற்றுக்களை எடுத்து எழுதி, அவற்றை ஏவல் வினையாகவும், வியங்கோள் வினையாகவும் மாற்றி எழுது.

# 6. பாவலரும் நாவலரும்

1. நம் தாய் மொழியாகிய தமிழ் மொழியே பல மொழிகளுக்குள்ளே மிகவும் சிறந்த மொழியாகச் சான்றோர் பலரால் கருதப்பட்டு வருகின்றது. தமிழ் நாட்டில் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே மண்டலாதிபதிகள் பலர் தமிழ் மொழியின் இன்ப ரசத்தைப் பருகவேண்டி, ஆங்காங்கே சங்கங்களைத் தோற்றுவித்து, இலக்கிய இலக்கணங்களில் வல்லுநராயிருந்த புலவர் அனைவரையும் ஒன்று சேர்த்துத் தமிழை ஆராய்ந்து இன்புற்றார்கள். அச் சங்கங்களே தலைச் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்னும் முச்சங்கங்களாகும். பல கவிஞர்கள் தமிழ் மொழியை இறைவனுடன் ஒப்பிட்டுப் பல பாக்களைப் பாடி யிருக்கின்றனராதலால், தமிழின் தனிச் சிறப்பு குன்றின்மேலிட்ட விளக்கெனத் தெற்றென விளங்கா நிற்கின்றது. பல நாட்டுப் பேரறிஞர்களும் தமிழ் மொழியின் மீது அன்புகொண்டு, இலக்கிய இலக்கணங்களையும் இதிகாசங்களையும் ஐயம் நீங்கக் கற்று, பேரின்பமாகிய தமிழின்பத்தைத் துய்த்தார்கள். அத்தகையவர்களுக்குச் சான்றாக **ஜி. யூ. போப்பையர், வீரமாமுனிவர், கால்டுவெல்** முதலிய அறிஞர்களைக் காட்டலாம்.

2. தமிழ் என்னும் பதத்திற்கு, அழகு, இனிமை என்பன பொருளாகும். ‘தமிழ் தழீஇய சாயலவர்’, ‘வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே’ என்னும் தொடர்களில் முறையே இப்பொருள்கள் மிளிர்தலைக் காண்க. தமிழ் மொழியைப் பேணி, தமிழைத் தெய்வமாகப் போற்றி, பல இன் சுவைப் பாக்களைப் பாடி மகிழ்ச்சியுற்ற சமீப காலப் புலவர்கள் பலர். அத்தகைய பாவலர்களில் திரிசிரபுரம் **மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை** அவர்களும் ஒருவர். அவர் கவிப் புலமையில் தனிப்பெரு வல்லுநராய் விளங்கினார்.

அவரது காலத்திலிருந்த மாபெரும் புலவர்களும், மாணுக்கர்களும் அவரைப் பிற்காலக் கம்பர் என்ற பட்டமளித்து,



தமிழ்த் தெய்வமாகப் போற்றி வந்தார்கள். அவர்கள் திருவாவடுதுறை ஆதீன வித்துவானுய், மகா சந்நிதானத்தின் பேரன்பிற்குப் பாத்திரரா யிருந்தார். விண்மதி எவ்வாறு விண் மீண்களால் சூழப்பட்டு, தனிப் பெருந்தண்ணெளியால் ஒளி விட்டுத் துலங்குகின்றதோ, அதுபோலப் பிள்ளை அவர்களும் எப்பொழுதும் மாணுக்கர்களின் குழுவின் நடுவேயிருந்து ஒப்பற்ற நாயகமாய் விளங்கினர். அவர் படித்தறியாத் தமிழ்ப் புத்தகங்களே இல்லை யென்று கூறினல், அன்னர் தமிழ் அறிவை என்னென்று புகழ்வது! அவர் மணற்கேணியினின் றும் நீர் சுரப்பதுபோன்று நினைக்கும் போதெல்லாம் கவி பாடும் வன்மை பெற்றுத் திகழ்ந்தார். அவரைப் பெயரிட்டு வழங்கவும் கூசி, அவரது புலமைப் பெருக்கை மதித்துப்

புலவர்களும் திருவாவடுதுறை ஆதீன மடத்தின் மகா சந்நி தானமும் மற்றுமுள்ளோரும் 'பிள்ளையவர்கள்' என்றே வழங்கி வந்தார்கள்.

3. பிள்ளை அவர்கள் புராணங்கள், அந்தாதிகள், கலம் பகங்கள், பிள்ளைத்தமிழ், மாலைகள் முதலியவைகளைப் பிறர் வியக்கத் தகுந்த முறையில் பாடியுள்ளார்கள். அவை யாவும் சொல் நயம், பொருள் இன்பம் முதலியன சிறக்க் அமையப் பெற்றிருக்கின்றன. அவர் சைவராதலால், அவரது நெற்றி யில் திருநீற்றுப் பொலிவும் மார்பிலே அக்க மணி மாலையும் எப்பொழுதும் விளங்கின. அமைதியான நடக்கைக்கும், பண்பட்ட வாழ்க்கைக்கும், குன்று ஊக்கத்திற்கும் எடுத்துக் காட்டாய் விளங்கியவர் நம் பிள்ளை அவர்களே. அவருடைய மாணுக்கர் பலர் தமிழ் நாடெங்கும் பரவியிருந்தனர். அவர் களில் முக்கியமானவர்களாகக் குறிப்பிடத் தக்கவர்கள் **திரு. தியாகராய செட்டியார் அவர்களும், மகாமகோபாத் தியாய தாட்சிணுத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமி நாதையரவர்களும்** ஆவார்கள்.

4. மகாவித்துவான் பிள்ளையவர்கள் செல்லும் இடங் களுக்கெல்லாம் தம் மாணுக்கர்களுடன் ஏறுபோல் பீடுநடை யுடன் நடந்து சொல்லுவது வழக்கம். ஒரு சமயம் தமிழ் வளர்ந்த நான்மாடக் கூடலாகிய மதுரையம்பதியையும் அங்கு வீற்றிருக்கின்ற சோமசுந்தரக் கடவுளையும் கண்டு வணங்கத் தம் மாணுக்கர்களுடன் அந்நகரத்திற்குச்சென்றூர். அவரையும், அவர் மாணுக்கர் குழுவினையும் கண்ட மதுரை மக்களும், புலவர்களும் இரவியைக்கண்ட தாமரை போல அகமும் முக மும் மலர்ந்து, மகிழ்ச்சியுடன் வரவேற்று, அவரை நன்கு உபசரித்தார்கள். மதுரை மாநகரில் திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் வந்திருப்

பதையறிந்த புலவர்களும், அவர் தங்கியிருந்த இடத்திற்குச் சென்று, அவரைக் கண்டு அளவளாவிய வண்ணமிருந்தார் கள். எல்லா வருணத்தினரும், கல்வி கேள்விகளிற் சிறந்த பண்டிதர்களும், நாள்தோறும் பிள்ளையவர்களைக் கண்டு அவரது இனிய உரையாடலைக் கேட்டு, மனமகிழ்ச்சியுற்று, தங்கள் தங்கள் இருப்பிடம் செல்வது வழக்கமாயிருந்தது. பிள்ளையவர்களின் அன்புபொதிந்த சொற்கள் அங்குள்ளாரனை வரின் உள்ளத்தையும் வசீகரித்து, காந்தம் போலப் பிணித்து இழுத்தன. ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் சோமசுந்தரக் கடவுள் நான்கு மாடவீதிகளிலும் திருவுலா வருவார். அச்சமயம் பிள்ளையவர்கள் தம் மாணவ குழாத் துடன் சுந்தரேஸ்வரரையும், மீனாட்சியம்மையாரையும் கண்டு களித்து, தேவாரத் திருமுறைகளை ஓதித் தம் இருப் பிடம் மீள்வார்.

5. பிள்ளையவர்கள் மதுரையில் இருக்கும் வரையில் ஒவ்வோர் இரவும் தம்முடன் வந்து கேட்பவர்கள் மனங் கோணாமல், அவர்கள் விருப்பின்படி சலிப்பும் அலுப்புமில் லாமல் செய்யுட்களைப் பாடிப்பாடி வழங்கி வந்தார். பொழுது புலர்ந்ததும் மதுரை நகரத்திற்கே அணிகலனாயிருக்கும் வைகையாற்றில் குளியலை முடித்துக்கொண்டு, சோமசுந்தரக் கடவுளைத் தரிசிப்பார். அவருடன் அவர் மாணாக்கர்களும் சென்று வைகை யாற்றில் குளிப்பது வழக்கம். பிள்ளையவர் களின் இனிய உரையாடலைப் பன்முறை கேட்டு மயங்கிய வித்துவான்களும், புலவர்களுங்கூட அவருடன் வைகையாற் றிற்குச் செல்வார்கள். அப்பொழுதும் பிள்ளையவர்கள் சிலேடையாகச் சில தொடர்களையும் செய்யுட்களையும் கூறி, அவர்களை மகிழச் செய்வார். அது போழ்து வைகையாற்றில் குளிக்கும் ஒவ்வொருவர் கண்களும் பிள்ளையவர்களை நோக்கிய வண்ணம் இருக்கும்.

6. பிள்ளையவர்கள் மதுரை மாநகரத்தில் வீற்றிருந்த காலம், பனி மிகுந்த மார்கழி மாதமாய் இருந்தது. ஒரு நாள் பிள்ளையவர்கள் தம் மாணவர்களுடனும், பிற நாட்டுப் புலவர்களுடனும் வைகையாற்றிற்குக் குளிக்கச் சென்றார். அங்குச் சென்றதும், மாணாக்கர்களுட் சிலரும் புலவர்களுட் சிலருமாகப் பிள்ளையவர்களுக்கு அணித்தாகக் குளித்துக் கொண்டும், அவரது வாயினின்றும் வரும் நகைச்சுவை ததும்பும் செய்யுட்களையும் சொற்களையும் சொற்றொடர்களையும் கேட்டுக் கொண்டும், ஆனந்தமாகத் தங்கள் உடம்பின்மேல் நீரை இறைத்துக்கொண்டும், அவரது இன்முகம் நோக்கிய வாறு இருந்தார்கள். மற்றவர்களில் சிலர் ஆற்றங்கரையின் ஓரத்தில் நாநா பக்கமும் பரவிக் குளித்துக்கொண்டும், ஈர ஆடைகளை உலர்த்திக்கொண்டும், தங்கள் ஆசிரியரின் வாக்கு வன்மை, செய்யுள் நயம், தெய்வீகக் குணங்கள் முதலியவைகளைப்பற்றி உரையாடி அவரைப் போற்றிக் கொண்டுமிருந்தார்கள். வெளியது உடீஇ, திருநீறு, திருமண் அணிந்து, ஐந்தெழுத்தும் எட்டெழுத்தும் அறைபவராய்ப் பலர் இருந்தனர்.

7. பிள்ளையவர்கள் குளித்துக்கொண்டிருக்கும் இடத் திற்கருகில் இருந்த புலவர்களுள் **ஆறுமுக நாவலர்** என்னும் மாபெரும்புலவரும் ஒருவர் ஆவார். இவர் யாழ்ப்பாணத்தி லிருந்து அங்கயற்கண்ணியையும் ஆலவாய் அவிர்சடைக் கடவுளையும் கண்டு வணங்க வந்திருந்தனர். பிள்ளையவர் களைக் காணும் சந்தர்ப்பமும் இவருக்குக் கிட்டியது. இவர் சைவவேளாள வகுப்பைச் சேர்ந்தவர், தமிழை ஆர்வத் துடன் கற்றவர்; இலக்கிய இலக்கணங்களில் ஈடுமெடுப்பும் அற்றவர்; உரைநடை எழுதுவதில் மிகவும் வல்லுநர். இவர் பல தமிழ் நூல்களைப் பதிப்பித்தவர்; அவைகளில் திருக் குறள், பரிமேலழகர் உரை, பெரிய புராணம், வில்லி பாரதம்,

திருக்கோவையார்உரை என்பவை குறிப்பிடத் தக்கவை. இவர் வாக்கு வன்மையில் தலை சிறந்து விளங்கினர். இவரது



நாவன்மையை யாழ்ப்பாண மக்களும், பிற வித்துவான்களும் புகழ்ந்து, இவரை **'நாவலர்'** என்றே வழங்கி வந்தார்கள். இவர் உழைப்பின் பயனால் இன்றும் தில்லைச் சிதம்பரத்தின் கண்ணே இரு கல்விச்சாலைகள் இவர் பெயரால் நன்முறையில் நடந்து வருகின்றன.

8. இத்தகைய நாவலர் பிள்ளையவர்களின் அருகில் குளித்துக்கொண்டிருக்கும் போது, குளிர்மிகுதியினால் வருத்த முற்று, பிள்ளையவர்களை நோக்கி, "ஐய, **பனிக்காலம் மிகக் கொடிது!"** என்று கூறினர். உடனே பிள்ளையவர்கள் நாவலரை நோக்கி, நகைத்து, "நண்பீர், நான் **பனிக்காலம் மிகவும் நன்று** என்று கூறுவேன்," என்றனர். இச் சொல்லாடலைக் கவனித்துக் கொண்டிருந்த மாணக்கர்களும் புலவர்களும்

திகைப்புற்று, மௌனமாயிருந்தார்கள். ஒரு சிலர் இச் சொல்லாடலின் உட்பொருளை உணர அவாவுற்று, ஆசிரிய ராகிய பிள்ளையவர்களை நோக்கி, "அன்பு மிக்க ஆசிரியப் பெருந்தகையீர், சிறிது நேரத்துக்கு முன் நாவலர் கூறிய மொழிக்கு விடையாக மறுமொழி கூறினீர்களே! அது எங் களை மயங்கச் செய்கிறது. எனவே, உங்களுடைய கூற்றின் உண்மைப் பொருளை அறிய அவாவி நிற்கின்றோம். அன்பு கூர்ந்து எங்களுக்கு உம் அமுதவாக்கின் உட்பொருளை எடுத்துக் கூறல் வேண்டும்." என்று இரந்து வேண்டினர்.

9. உடனே பிள்ளையவர்கள், "நாவலர் கூறியதும் மெய்ம்மை. யான் கூறியதும் உண்மை. எவ்வாறெனில், 'பனிக்காலம் மிகக் கொடிது' என்னும் நாவலர் கூற்றுக்கு 'குளிர் மிகுந்த காலம் மிகவும் கொடுமையானது' என்பது பொருளாகும். 'பனிக்காலம் மிகவும் நல்லது' என்னும் எனது தொடருக்குக் குளிர் மிகுந்த இக்காலத்தைவிட, ஆலம் (விஷம்) மிகவும் நல்லது,' என்பது பொருளாகும். இதனுல் பனியின் கொடுமை மேலும் மிகுதியாகக் கூறப்பட வில்லையோ? ஆகவே, எம் இருவர் கூற்றுக்களும் ஒரு பொருளையேயன்றோ விதந்து கூறுகின்றன?" என்றனர். இவைகளைச் செவியேற்றதும் அனைவரும் பிள்ளையவர்கள் அறிவுத்திறனை மேலும் கொண்டாடி அவரைப் போற்றினர் கள். பின்பு சின்னுட்கள் கழிந்ததும், பிள்ளையவர்கள் தம் மாணுக்கருடன் திருவாவடுதுறைக்கு மீண்டார். என்னே புலவர்களின் நுண்மதி!

### அருஞ்சொற்பொருள்

மண்டலாதிபர்கள் - அரசர்கள், ஐயம் - சந்தேகம், சான்று - சாட்சி, தமிழ் இனிமை, பேணி-போற்றி, புலமை-அறிவு, மீன்-நட்சத்திரம், குழு-கூட்டம், அக்கமணிமாலை - உருத்திராட்சமாலை, ஏறு - காளை

பீடு-பெருமை, இரவி-சூரியன், அகம்-மனம், அணிகலன்-ஆபரணம் வைகறை - விடியற்காலம், அணித்தாக - அருகே, திருமண்-நாமம், ஐந்தெழுத்து - சிவபெருமானுக்குரிய பஞ்சாட்சர மந்திரம், எட்டு எழுத்து-திருமாலுக்குரிய எட்டு எழுத்தாலான மந்திரம், ஈடு-நிகர், எடுப்பு - மேன்மை, விதந்து - எடுத்து.

### கேள்விகள்

1. மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை எங்கு எம்முறையில் தம் வாழ்வை நடத்தி வந்தார் ?
2. மகாவித்துவான் மதிப்பு மிகப் பெற்றவராய்த் திகழ்ந்தார் என்பது எப்படித் தெரிகிறது ?
3. ‘பனிக்காலம் மிக நன்று’- இதில் எவ்வாறு பனியின் கொடுமை மிகுந்து காணப்படுகிறது ?
4. ‘நாவலர், பாவலர்’ என்னும் பட்டம் ஏன் புலவர்கட்குச் சூட்டப்பட்டன ?

### பயிற்சி

1. அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ் ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் நூலை உதாரணமாகக் காட்டு.
2. நாவலர் பதிப்பித்த நூல்களைக் குறிப்பிடு.
3. நாவலரைப்பற்றி ஒரு சிறு கட்டுரை எழுது.
4. ஐந்தெழுத்து, எட்டெழுத்து மந்திரங்களைப் குறிப்பிடு.

## இலக்கணம்

### வெளிப்படைச் சொல்லும் குறிப்புச் சொல்லும்

வெளிப்படையாகப் பொருள் தந்து நிற்பன வெளிப்படைச் சொற்களாம்.

(உ-ம்) மரம், மட்டை.

குறிப்புச் சொல்லாவது அந்தச் சந்தர்ப்பத்திற்கு ஏற்றப் பொருளை உணர்ந்துகொள்ளச் செய்யும் சொல்லாகும்.

(உ-ம்) மக்கள் போரில் கலந்து கொண்டார்கள்.

இங்கு மக்கள் என்னும் சொல், ஆண் பெண் ஆகிய இருபாலுக்கும் பொதுவான சொல்லாய் இருந்தும், போரில் கலந்து கொண்டார்கள்

என்னும் குறிப்பால், பெண்பாலை ஒழித்து ஆண் பாலைச் சுட்டி நின்றதைக் காண்க.

**பயிற்சி**

1. கற்கறிக்க, 'நன்கு அட்டாய்,' என்றனர். உயிர்மெய் இருநூற்றுப்பதினறு!, ஆத்திசூடி படித்தான், பெற்றம் பால் தந்திலது —இவற்றுள் குறிப்பு மொழியாக அமைந்தவை எவை? காரணமும் காட்டு.

2. இப்பாடத்தின் மூன்ருவது பாராவில் உள்ள வெளிப்படைச் சொற்களில் ஐந்தை மட்டும் எடுத்துக் காட்டு.

# 7. பத்திரிகைச் செய்தி

சென்னையம்பதியில் தமிழ் இசைச் சங்கமென ஓர் இசைச் சங்கம் 1943-ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 23-ஆம் நாள் நிறுவப்பட்டது. அதன்பொருட்டு மாநாடு ஒன்றுசென்னை அண்ரமலைக்காரன் வீதியில் அழகுடன் அமைந்துள்ள செயிண்டு மேரிஸ் ஹாலில் கூட்டப்பட்டது. அம்மாநாட்டின் வரவேற்புரையினை **இராவ் பகதூர் ப. சம்பந்த முதலியார், பி. ஏ., பி. எல்.** அவர்களும், திறப்பு விழாவுரையினை **ராஜா, சர். அண்ணுமலை செட்டியார்** அவர்களும், தலைமைப் பேருரையினைக் கலாரசிகர் **டி. கே. சிதம்பரநாத முதலியார் பி. ஏ., பி. எல்.** அவர்களும் சிறப்புடன் மேற்கொண்டு ஆற்றினர். அவற்றின் சுருக்கமே இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன:

**வரவேற்புரை:**

"அன்பர்களே, இம்மகாநாட்டுத் தலைவர் திருவாளர் சிதம்பரநாத முதலியார் அவர்கட்கும், டாக்டர் ராஜா, சர். அண்ணுமலை செட்டியார் அவர்கட்கும், இங்கு வந்திருக்கும் மற்றுமுள்ள தமிழிசை அபிமானிகளான சகோதர சகோதரி

கட்கும் என் மனமார்ந்த வந்தனம் உரியதாகுக. சொற்பொழி வாளர் ஒவ்வொருவருக்கும் இந்த மகாநாட்டில் பேசுதற்குப்



(இராவ் பகதூர் ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.)

பத்து நிமிஷங்களே கொடுத்திருப்பதால், நானும் என் கருத் துக்களைப் பத்து நிமிஷத்திற்குள் சுருக்கமாகச் சொல்லிவிடு கிறேன்.

"ஐம்பது வருடங்களுக்கு முன் தமிழிசையானது எந்த நிலையில் இருந்தது? இக்காலம் எந்த நிலையிலிருக்கிறது? இதைப் பற்றித் தமிழ் இசை அபிமானிகள் சிறிது நேரம் ஆராய்ந்து பார்த்த அளவிலேயே, 'இக்காலம் அதற்கு நற் காலம் வாய்த்திருக்கிறது,' என்று கூறிவிடுவார்கள். அதற்கு முக்கிய காரணம், நமது தமிழிசைத் தலைவராகிய ராஜா, சர். அண்ணாமலைச் செட்டியார், சர். **ஆர். கே. சண்முகம் செட்டி யார்** முதலியோருடைய நன் முயற்சியே என்பதற்கு யாதொரு

சந்தேகமுமில்லை. ஆகவே, எனது முதற்கடமையாக அவர்களுக்கெல்லாம் என் மனமுவந்த வந்தனத்தைச் செலுத்திவிட்டு, செட்டி நாட்டரசர் அவர்களை இம்மாநாட்டுத் திறப்பு விழாவை ஆரம்பிக்கும்படி வணக்கத்துடன் கேட்டுக்கொள்வதற்கு முன்பாகத் 'தமிழ் இசையானது மேலும் மேலும் வளர்ந்து ஓங்குவதற்கு என்ன மார்க்கங்கள் இருக்கின்றன ?' என்பதைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தைச் சிறிது வெளியிட இச்சபையின் அனுமதி கேட்டுக் கொள்கிறேன்.

"சென்னைச் சர்வகலாசாலைச் சங்கீதப் பரீட்சையின் விவரங்களைக் குறிக்கும் போது, ஒவ்வொரு மாணவனுக்கும் தெலுங்கு படிக்கத் தெரிய வேண்டுமென்று குறிப்பிட்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன், அதன் அர்த்தம் எனக்குத் தெரியவில்லை. தெலுங்குப் பாட்டுக்கள் பாடும்போது அவைகளின் அர்த்தத்தை அறியும்பொருட்டு ஒவ்வொரு மாணவனும் தெலுங்கு தெரிந்திருக்க வேண்டுவது அவசியம் என்றிருந்தால், அதன்படியே தமிழ்ப்பாடல்களைப் பாடும் பொழுது அவற்றின் அர்த்தத்தை அறிந்து பாட வேண்டுவது அவசியமல்லவா ? அதற்காக மற்றப்பாஷை பேசும் மாணவர்கள் தமிழைப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டுமென்று குறிப்பிட வேண்டாமா ? இவ்விஷயம் இம்மகாநாடு ஆராயவேண்டுவதாகும்.

"இம்மகாநாட்டில் தமிழிசையைப் பற்றிய பல அரிய பெரிய விஷயங்களைக் குறித்து அனேக பிரமுகர்கள் பேசப் போகிறார்களாகையால், கடைசியாக இங்கு ஒரு விஷயத்தை மாத்திரம் எடுத்துக் கூறி இத்துடன் என் வரவேற்புரையை முடித்துக்கொள்ள விரும்புகின்றேன். அதாவது, தமிழ்ப் பாடல்களை யார் எந்தச் சந்தர்ப்பத்தில் பாடும் போதும் அர்த்தத்தை அறிந்து அதற்கேற்றபடி பதங்களை விவரமாகப்

பகுத்துப் பாடவேண்டுவது'' தமிழிசை வளர விரும்புவோர் களுடைய கடமையாகும் என்பதாம்.

" பெரியோர்களே, தமிழ் இசை அபிமானிகளே,

" எங்கள் அழைப்பிற்கிணங்கி இம்மகாநாட்டில் வந்து கூடியுள்ள உங்கள் அனைவரையும் வரவேற்புக் கழகத்தின் சார்பில் அன்பு கலந்த சொற்களால் மகிழ்ச்சியோடு வரவேற் பதோடு, மகாநாட்டில் எங்கள் ஏற்பாடுகளில் ஏதேனும் குற்றம் குறை இருக்குமாயின், மன்னிக்குமாறும் கேட்டுக் கொண்டு, தலைவர் டாக்டர் ராஜா சர். அண்ணுமலைச் செட் டியார் அவர்களை இம்மகாநாட்டைத் திறந்து வைக்குமாறு வேண்டுகிறேன்.''

## திறப்பு விழா உரை :

" அன்பர்களே,

" தமிழிசைச் சங்கத்தின் முதல் மகாநாட்டை இன்று நடத்துகிறோம். இதைத் திறந்து வைக்கும் பெருமையை எனக்களித்த இசைச் சங்கத்தாருக்கு நன்றி செலுத்துகிறேன். இம்மகாநாட்டை மகிழ்ச்சியுடன் திறந்து வைத்து இந்த வைப வத்தில் சந்தோஷத்துடனும் கலந்துகொள்கிறேன்.

" தமிழர் இசையரங்கில் தமிழ்ப் பாடல்கள் முழங்க வேண்டும். தமிழிசையை வளர்த்து, உயர்ந்த நிலையில் வைக்க வேண்டும். இச்சங்கத்தின் நோக்கங்களில் இவை முக்கிய அமிசங்களாகும். இச்சங்கம் சென்னையைத் தலை மையாகக் கொண்டு, முறையாகத் தொண்டு செய்து, நமது கலையை வளர்க்கும். தமிழ் உணர்ச்சியுள்ள எல்லாத் தமிழ ரும் இதன் கலைத்தொண்டில் பங்கு கொள்வது கடமையும் உரிமையுமாகும். தமிழகத்தில் தமிழ் முழக்கம் செய்வதைத் தடை செய்யும் தமிழன் இருக்க முடியாது.

"தமிழிசை இயக்கம் பிரகாசித்து விளங்குகிறது. நாடெங்கும் தமிழிசைச் சங்கங்கள் ஸ்தாபிக்கப் பெற்றிருக்



(ராஜா சர், அண்ணாமலை செட்டியார்)

கின்றன. தமிழிசை மகாநாடுகள் பல இடங்களில் கூடி, 'இனித் தமிழிசையையே போற்றுவோம்,' என்று உறுதி செய்கின்றன. இம்மகாநாடுகள் தமிழர் உள்ளத்தில் தோன்றிய தமிழிசை ஆர்வத்தைச் சுடரோங்கத் தூண்டுகின்றன. தமிழிசை இயக்கம் தமிழின் மறுமலர்ச்சிக்குப் புதிய வேகத்தைத் தந்தது. இசை மலர்ச்சியே மறுமலர்ச்சி. இன்று தமிழரின் செவிகள் தமிழமுதம் பருகி மகிழ்கின்றன. மறைந்து போன பழம்பாடல்கள் இந்த இயக்கத்தால் புத்துயிர் பெற்று முழங்குகின்றன. புதிய பாடல்கள் எழுந்து இன்பம் தருகின்றன. கவிவாணரும் இசைவாணரும் ஆர்வத்துடன் முன் வந்து தமிழிசையை வளர்க்கிறார்கள். இசையரங்கிற்குக் கூட்டங்கூட்டமாகத் தமிழர்கள் வருகின்றார்கள். தமிழிசை வேறெதற்கும்

இசைத்ததன்று என்பதை இசைவாணர்கள் விளக்கிவிட் டார்கள். அரிய பெரிய ஆவேசக் கவிஞர்கள் தமிழ்ப்பாடல் களைப் பாடியிருக்கிறார்கள். கண்ணிருப்பவர் தமிழிசைக் குள்ள பொதுஜன ஆதரவைக் காணலாம். காதிருப்பவர் எத்திசையிலும் தமிழிசையைக் கேட்டு இன்புறலாம். அதி விரைவில் தமிழிசைக்கலை உச்ச நிலையிலோங்கி விளங்கப் போகிறது. அன்பர்களே, தமிழிசைச் சங்கத்தின் நோக்கம் இன்னதென்பதைத் தெளிவாகச் சொல்லி என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

"தமிழ் நாட்டில் நடக்கும் இசையரங்குகளில் தமிழ்ப் பாடல்களே முதன்மை பெற வேண்டும். கச்சேரியின் ஆரம்பமும் மங்களமும் தமிழ்ப்பாடலாக இருக்க வேண்டும். கச்சேரியின் பெரும்பகுதி தமிழ்ப் பாடல்களாக இருக்க வேண்டும். பிறமொழியில் பாடல்களையும் பாடலாம். அதற்குத் தடையில்லை. பிற மொழிப் பாடல்களை நாம் வெறுக்கவில்லை. தமிழ் நாட்டில் நடக்கும் கச்சேரியைக் கேட்கும் தமிழருள்ளம், "இன்று தமிழிசையரங்கு நடந்து, நம் உள்ளம் தமிழிசையால் பூரித்தது!" என்று உணர வேண் டும். தமிழ் நாட்டில் நடக்கும் பாட்டுக் கச்சேரிகள் தமிழ ருக்கு இன்பமளிக்க வேண்டும். இதுதான் நமது நோக்கம். இம் மகாநாட்டின் இசை நிகிழ்ச்சியில் எல்லா வகுப்பு வித்து வான்களும் காணப்படுகின்றார்கள். சாதி வேற்றுமையோ, பாஷை வேற்றுமையோ இங்கில்லை. தமிழர் எல்லாரும் சமமானவரே. இந்த உணர்ச்சியுடன் நாம் ஒன்று கூடிக் கலையை வளர்த்தால், மன வேறுபாடும் இனவேறுபாடும் ஒழியும். ஆகையால், அன்பர்களே, தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்த மக்களாகிய நாமெல்லாரும், ஒரே மனத்துடன் நம் தாய் மொழியாகிய தமிழின் இசைக்கலையை ஆதரித்துப் போற்றுவோமாக!"

**தலைமையுரை :**

" அன்பர்களே, உலகத்தில் எங்குமில்லாத காட்சி ஒன்றைத் தமிழ் நாட்டில் பார்க்கிறோம். போன போன இடங்களில் எல்லாம் கோயில்களும் கோபுரங்களும், எழுந்து நிற்கின்றன. மௌனமாகவா அவை நிற்கின்றன ? அல்ல. காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று காலங்களிலும் இதயத்தைத் தொடுவதான சங்கீதம் நாதஸ்வரத்தின் வழியாக வந்து கொண்டிருக்கின்றது ; ஆ யி ர க் கணக்கான வருஷங்களாகவே வந்துகொண்டிருக்கிறது.

" நம்முடைய சங்கீதம், அதாவது தமிழ் நாட்டை இப்போதே வளஞ்செய்து வருகிற சங்கீதம், ஆயிரக்கணக்கான



டி. கே. சிதம்பரநாத முதலியார், பி. ஏ. பி. எல்.,

வருஷங்களாக வளர்ந்தேறி வந்த அரிய வஸ்து. எத்தனையோ பண்கள்—இராகங்கள்—நம்முடைய இசையை வளம்படுத்து

கின்றன. தமிழ் நாட்டிலுள்ள பண்களின் தெளிவையும் வேறுபாடுகளையுங் கண்டு அதிசயிக்காதவர் இலர். வடஇந்தியாவிலிருந்து வந்த மக்களும் அதிசயித்தவர்களாய்த் தங்கள் நாட்டிற்கே அவைகளைக் கொண்டு போயிருக்கிறார்கள். பெயர்களை எப்படி எப்படியோ கொடுத்துக்கொண்டார்கள். மேல் நாட்டார்கள் ஏதோ இரண்டு பண்களைக் கண்டு பிடித்து முப்பது வருஷமாக அனுபவித்து வருவது பற்றி, எவ்வளவோ எக்களிப்புடன் பேசுகிறார்கள். அப்படியானால், நம்முடைய பண்களின் தொகையையும் பூர்வமாக ஏற்பட்டுள்ள நயங்களையும் கண்டார்களானால், அவர்களுடைய அதிசயத்தை எப்படிச் சொல்லவேண்டியிருக்கும்!

"தமிழ் நாட்டுக் கோயில்களும், கோபுரங்களும் உலகப் பரப்பில் எப்படி ஒப்பற்ற விதமாய்த் தலை நிமிர்ந்து நிற்கின்றனவோ, அப்படியே தமிழ் நாட்டுச் சங்கீதம் தலை நிமிர்ந்து நிற்கப்போகிறது. நாம் பார்க்கப்போகிறோம். உலகம் பாராட்டப் போகிறது!

"இத்தகைய அரிய தொண்டில் ஈடுபட்டு நிற்கும் இந்தத் தமிழிசை மகா நாட்டில் இவ்விதம் கலந்துகொள்ளும்படி என்னைப் பணித்த அன்பர்களின் அருமையை என்றுமே நான் மறக்க இயலாது. அந்தப் பெருந்தகையாளருக்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகுக!"

**அருஞ்சொற்பொருள்**

மார்க்கம்-வழி, பண்-ஏழு சுரமும் உள்ள இசை, இசைவாணர்—இசைத் தொண்டினால் வாழ்பவர், இசையரங்கு - பாட்டு மேடை.

**கேள்விகள்**

1. திரு. ப. சம்பந்த முதலியார் மகாநாட்டில் எது குறித்து ஆராயத் தொடங்கத் தூண்டுகிறார்?
2. தமிழ் இசை ஏனைய இசைகளிலும் மேம்பட்டது என்பதைத் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் எப்படி விளக்குகிறார்?

### பயிற்சி

1. திரு. ராஜா அவர்களின் திறப்புரையின் திரண்ட பொருளைச் சுருக்கி எழுது.
2. 'தமிழ் இசை' எனத் தலைப்புக் கொடுத்து ஒரு கட்டுரை வரை.

### இலக்கணம்

## இயல்பு வழக்கும், தகுதி வழக்கும்

சொற்கள் இயல்பாக வழங்கும் முறையை இயல்பு வழக்கு என்றும், ஏதோ ஒரு காரணத்தால் தக்க முறையில் வழங்கப்படும் முறையைத் தகுதி வழக்கு என்றும் இலக்கணம் கூறும்.

இயல்பு வழக்கு **இலக்கணமுடையது, இலக்கணப் போலி மரூஉ** என மூன்றாகப் பிரியும்.

(உ-ம்) பழம்—இலக்கணம் உடையது.

முன்றானை — இலக்கணப்போலி. அதாவது இச்சொல் இலக்கண முறைப்படி அமைந்த சொல் போலக் காணப்பட்டாலும், போலிச் சொல்லேயாகும். இது '**தானை முன்**' என்றே இருக்க வேண்டும். ஆகவே, இது இலக்கணப் போலி ஆயிற்று.

தஞ்சை — மரூஉ. அதாவது தஞ்சாவூர் என்பது மருவித் தஞ்சை என ஆயிற்று.

தகுதி வழக்கு **இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி** என மூன்றும் :

(உ-ம்) கால் கழுவி வந்தேன் — இடக்கரடக்கல். அதாவது பெரியார் முன் கூறத் தகாததை மறைத்துக் கூறுவது.

நன்காடு—மங்கலம் அமங்கலத்தை மங்கலமொழியால் கூறுவது. சுடுகாடு, நன்காடு எனக் கூறப்பட்டதனால், இது மங்கலம் ஆயிற்று.

சொல் விளம்பி — குழூஉக்குறி இது கள்ளைக் குறிக்கும் சொல். இதனை மறைத்துக் கட்குடியர் கூட்டத்தினர் இச்சொல்லால் பேசிக் கொள்ளுதலின் இப்பெயர் பெற்றது.

**பயிற்சி**

1. கோவை, திருச்சி, அருமந்த பிள்ளை, வாயக்கால், புறநகர்—இவற்றை எந்த இலக்கணங்கட்கு உதாரணமாக்கலாம் ?
2. பவ்வீ, வாய் பூசி வந்தேன், வைகுந்தம் சேர்ந்தார், மங்கள வாரம்—இவற்றுள் மங்கல மொழியாகவும், இடக்கரடக்கலாகவும் வந்துள்ளவை எவை ?
3. இலக்கணமுடையது என்னும் இலக்கணத்திற்குரியனவாகப் பத்து உதாரணங்களை இப்பாடத்தினின்றும் எடுத்துக் காட்டு.

# 8. மயக்க மருந்து

1. தண்டமிழக்கலையில் மருத்துவக் கலையும் ஒன்று. இக்கலை மேனாட்டு முறைப்படியும் பயன்பட்டு வருகின்றது; கீழ் நாட்டு முறைப்படியும் பயன் அளித்து வருகின்றது. இக்கலை மக்கள் நோய்வாய்ப்பட்டு அல்லலுறுகின்ற போது அவ்வல்லலினின்றும் விடுதலை பெறுதற்குப் பெருந்துணை செய்ய வல்லது. மக்கட்கு வரும் பிணிகள் மருந்து கொடுக்கப்படுவதாலும், சத்திரவித்தையாலும் ஒழிக்கப்பட்டு வருகின்றன. இவ்விரண்டு முறைகளிலும் தமிழ் மருத்துவமும், மேனாட்டு மருத்துவம் தலை சிறந்தவை.

2. அறுப்புத் தொழில் தமிழ் நாட்டிலும் உண்டோ எனச் சிலர் ஐயுறலாம். அங்ஙனம் ஐயுறுதற்கு இடமில்லை. பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஒருவரான **குலசேகரர்**, தம் திருமொழியில், 'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளன்போல்' என்று கூறுவதினின்று நம் நாட்டில் சத்திரவித்தை இருந்த உண்மையை நன்கு உணரலாம். இவ்வடிகளில் மருத்துவன் செயலும் நோயாளன் நிலையும் தெளிவாகக் கூறப்பட்டிருத்தலைக் காண்க. குல

சேகரப் பெருமாள் மட்டும் இவ்வாறு அறுப்பு முறையில் நோய் போக்கியதைக் குறிப்பிட்டார் அல்லர். குமரகுருபர சுவாமிகளும் நீதிநெறி விளக்கத்தில் 'கண்ணோட்டம் செய்யார் கருவியிட்டாற்றுவார் புண்வைத்து மூடார் பொதிந்து,' என்று அறிவித்திருத்தலினின்றும் இதன் உண்மையை நன்கு அறியலாம். இத்தகைய சான்றுகளால் அறுப்பு முறைச் சிகிச்சை நம்மவர்க்குப் புது முறையன்று; பழமுறையே என்பது தெரியவருகிறது.

3. ஆனல், மேனுட்டவர் அறுப்பு முறை சிகிச்சைக்கும் கீழ்நாட்டவர் சத்திரவித்தை முறைக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. மேனுட்டவர் அறுக்கும் போது நோய் தெரியாதிருக்க ஒரு வழியைக் கண்டு பிடித்திருக்கின்றனர். நம்மவர் அவ்வாறு இன்றி அறுக்கும் முறையைப்பற்றி மட்டுமே அறிந்திருந்தனர். அப்படி அறுப்பதானல் பிணியாளர் படும் துயரம் பகர ஒண்ணுதது. இந்தத் துன்பம் மேனுட்டு முறையிலும் பல காலம் இருந்தது. ஆனல், விஞ்ஞான அறிவு ஓங்கி வளர வளர, அறுக்கப்படும் பிணியாளர் நோயுறுதிருத்தற்குரிய வழி வகைகள் ஏற்படலாயின.

4. நோயாளிகளின் உடற்பகுதியில் ஏதேனும் கோளாறு ஏற்பட்டால், அதனை உள் மருந்தினலோ, அன்றி வெளிப்பூசு மருந்தினலோ தீர்க்க இயலாத காலங்களில், கத்திகொண்டு அறுத்தே அக்கோளாற்றைத் தீர்க்க வேண்டி இருக்கையில், அப்பிணியாளர் உறும் இன்னலைக் கண்ணுரக் கண்டார் ஓர் இளைஞர். அவர் அந்நோயாளர் படும் அவத்தையைக் கண்டு ஆற்ற ஒண்ணுத் துயரமும் கொண்டார்; அறுக்கையில் யாதொரு நோயும் உணராதிருக்க, வழி தேட வேண்டும் என்று எண்ணினர்; எண்ணியதைச் செயல் முறையில் கொணரவும் தீர்மானித்தார். அப்படிச் செய்ய

முனைந்து நின்ற பெரியார் யாவர்? அவர்தாம் **சர். ஜேம்ஸ் யங் சிம்ஸன்** என்பவர்.

5. சிம்ஸன் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். அவர் தந்தையார் ரொட்டி வணிகர். சிம்ஸன் லின்லித்கோவில் உள்ள **பாத்கேட்டு** என்னும் கிராமத்தில் 1811-ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 7-ஆம் நாள் பிறந்தார். அவர் இளமை முதற் கொண்டே நல்லறிவும், எதையும் கூர்ந்து உணரும் உணர்ச்சியும் பெற்று விளங்கினர். அவர் கிராமப் பள்ளியில் படித்து வந்த காலத்தில், அப்பள்ளியில் அவரை விஞ்சக்கூடிய அறிவுடைய மாணவர் எவரும் இலர். 'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்,' என்னும் முதுமொழிக்கிணங்க, அவரது அறிவுக் கூர்மையின் தீவிர நிலையைக்கண்ட அவரது இருமுது குரவர், தாம் வறுமையால் வாட்டமுற்றாலும், தம் புதல்வர் பிற்காலத்தில் அறிவாற்றலில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத முறையில் விளங்க வேண்டுமென்பதற்காக, அவரை எடின்பரோப் பல்கலைக் கழகத்தில் பயின்று வர ஏற்பாடு செய்தனர்.

6. சிம்ஸன், எடின்பரோக் கல்லூரியில் பயின்று தம் இருபத்தோராம் வயதில் மருத்துவப் பட்டம் பெற்றார். சிம்ஸன் தம் மருத்துவக் கலையின் பயிற்சி மிகுதியினால் ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றை எழுதினர். அதனை **டாக்டர் ஜான் தாம்ஸன்** என்பவர் பார்வையிட நேர்ந்தது. அவ்வாராய்ச்சிக் கட்டுரையைக் கண்ணுற்ற தாம்ஸன், சிம்ஸனின் அறிவாற்றலை வியந்து, தமக்கு அத்தகையவர் ஒருவர் துணைவராய் அமைவது நலம் என்பதை உணர்ந்து, அவ்வாறே அவரை அமர்த்திக்கொண்டனர். 1837-ஆம் ஆண்டு டாக்டர் ஜான் தாம்ஸன், ஓர் ஆண்டு ஓய்வு பெற நேர்ந்தது. அக்காலத்தில் தம் பொறுப்பு அனைத்தையும் ஸிம்ஸனுக்கு அளித்து, அவர் ஓய்வு பெற்றார். இவ்வோராண்டில் சிம்ஸன் புரிந்த ஆராய்ச்சி

கள் பலவாகும். அவர் தாம் கண்ட ஆராய்ச்சிகளைப் பல சொற்பொழிவுகளின் மூலம் வெளிப்படுத்தினர்.

7. சிம்ஸன் ஆராய்ச்சிகளில் மிகுதியும் மனத்தை வருத்தியது அறுப்புக் காலங்களில் நோயாளர் படும் அவத்தையேயாகும். அவர் தாம் மருத்துவப் பட்டம் பெற்று ஒரு தரம் அறுப்பு முறைச் சிகிச்சையினை ஒரு மாதராளுக்குச் செய்த போது, அம்மங்கை பட்ட மாபெருந்துயரம் அவர் உள்ளத்தை உருக்கியது. டாக்டர் ஜெ. ஸி. வாரன் என்பவர் 1846-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 16-ஆம் நாள் எவரும் அறியும் முறையில் ஈதரை மயக்கந்தரும் மருந்ததாகப் பயன் படுத்தி அறுப்புச் சிகிச்சை செய்தனர். அதே ஆண்டில் பல் வைத்தியர் ராபின்ஸன் என்பவரும் சிறந்த ரண மருத்து வரான ராபர்ட் லிஸ்டன் என்பவரும் ஈதரையே அறுப்புச் சிகிச்சை மேற்கொள்ளும், நோயாளிக்குக் கொடுத்து மயக்க முறச்செய்து சிகிச்சை செய்து வந்தார். இம்முறையினைச் சிம்ஸனும் மேற்கொள்ளத் தொடங்கினர். ஆனல், அம்மருந்து அவருக்குப் பொருத்தமுடையதாகிக் காணப்படவில்லை. அது குறித்துப் பலவாறு ஆராயத்தொடங்கினர்; தம் மருத்துவக் களரியில் அல்லும் பகலும் வேலை செய்யத் தொடங்கினர். 'தவத்திற்கு ஒருவர்; கல்விக்கு இருவர்,' என்பதற்கு இணங்கத் தமக்குத் துணையாக இரு மருத்துவர்களையும் தம் களரியில் அமர்த்திக்கொண்டார். இறுதியில் சிம்ஸன் பல நீர்ப் பொருளான மருந்துகளைக் கலந்து, 1847-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் **குளோரோர்பாம்** என்னும் மயக்க மருந்தைக் கண்டு பிடித்தனர். குளோரோபாரம் நோயாளி மக்களுக்கும் பயன் படுத்தலாம் என்பதற்கு வழி காட்டியாக இருந்தவர் எம். ஜெ. பி. பிளாரன்ஸ் என்னும் அறிஞர் ஆவார் என்றும் கூறலாம்.

8. இந்தக் குளோரோபாமினல் மக்கள் இப்பொழுது அடைந்து வரும் நலன்களுக்கு அளவே இல்லை. அறுப்புக்

காலங்களில், பிணியாளர், கூர்ங்கத்தி கொண்டு அறுப்பு நிகழ்த்துகையில் யாதொரு துன்பமும் அடைவதில்லை. பல மருத்துவச் சாலைகளில் இது பெருந்துணை புரிந்து வருகின்றது. டாக்டர் சிம்ஸன் குளோரோபாம் கண்டுபிடித்துப் பிணியாளர் நோயினைக் குறைத்த செய்தி பாரெங்கும் பரவியது. 1847-ஆம் ஆண்டு விக்டோரியா மகாராணியார் சிம்ஸனைத் தம் அரண்மனை மருத்துவராக அமர்த்திக்கொண்டனர். சிம்ஸன் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள மருத்துவக் கழகங்கள் அனைத்திலும் கௌரவ அங்கத்தினராகச் சேர்த்துக்கொள்ளப்பட்டார். 1856-ஆம் ஆண்டு பிரான்ஸ் விஞ்ஞானக் கழகம் இவருக்குப் பொற்கிழிப் பரிசு தந்து பாராட்டியது. இவரைப் பாராட்டிப் பல்வேறு இடங்களிலிருந்து திருமுகங்கள் வந்த வண்ணமாய் இருந்தன.

9. இத்தகைய அறிஞரை நாம் மறக்க முடியுமா? இவர்க்கு உலகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டு இருக்கிறது. 'செயற்கரிய செய்வார் பெரியர்,' அன்றோ?

**அருஞ்சொற்பொருள்**

அல்லல் - துன்பம், சத்திரவித்தை - கத்திகொண்டு அறுத்து நோய் தீர்க்கும் வித்தை, கண்ணோட்டம்-கருணை, சான்று-சாட்சி, பகர-சொல்ல, ஏது-காரணம், ஆற்ற ஒண்ணு-பொறுக்க இயலாத, விஞ்ச-மீற, முதுமொழி-பழமொழி, இருமுது குரவர் - பெற்றதாய் தந்தையர், பார் - பூமி

**கேள்விகள்**

1. குலசேகரர், குமரகுருபரர் என்பவர் யார்?
2. சத்திரவித்தையை நம்மவரும் அறிந்திருந்தனர் என்பது எப்படித் தெரிகிறது?
3. சிம்ஸன் யார்? அவர் எங்ஙனம் சிறந்த மருத்துவராக நேர்ந்தது?
4. அவர் எம்முறையில் மயக்க மருந்தைக் கண்டு பிடிக்க நேர்ந்தது?
5. அவர் எவ்வெவ்வாறு பாராட்டப்பட்டார்?

**பயிற்சி**

1. 'மயக்க மருந்தும் அதன் பயனும்' என்பது குறித்து ஒரு கட்டுரை எழுது.
2. இப்பாடத்தில் கூறப்பட்டுள்ள மருத்துவர் இருவர் பெயரையும் அவர்களைக் குறிப்பிட்டுள்ள இடங்களையும் குறிப்பிடு.
3. இப்பாடத்தில் வழங்கப்பட்டுள்ள இரு பழமொழிகளை எடுத்து எழுதிச் சந்தர்ப்பத்துடன் விளக்கு.

# 9. அசோகர்

1. நம் நாட்டுக்கொடியின் நடுப்பகுதியில் என்ன திகழ்கிறது? ஓர் உருளை அன்றோ தோற்றம் அளிக்கிறது? அச்சக்கரம் யாருடைய சின்னம் என்பது உங்கட்குத் தெரியுமா? அது அசோகருடைய ஆழியாகும். "அசோகர் யார்? அவர் எம்முறையில் சரித்திரவரலாற்றில் இடம் பெறத்தக்க பெருமை வாய்ந்தவராவர்?" என்பனவற்றை இனிக் காண்போம்.

2. அசோகர் வடஇந்தியாவில் அரசு புரிந்த மன்னர்களுள் மிக மிகச் சிறந்தவர். அவர் மகத தேசத்தை ஆண்டவர்; மௌரிய வமிசத்தினர்; சந்திர குப்த மௌரியரின் பேரர்; பிந்துசாரரின் திருமகனர். அவருடன் பிறந்தவர் பலர் இருப்பினும், 'ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும், மூத்தோன் வருக என்னாது, அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்,' என்பது உண்மை மொழியாதலின், அசோகர் அறிவும் வன்மையும் வாய்ந்தவராய் இருந்தமையால், அவரே பட்டம் பெறும்பேறு பெற்றனர். அவர் இளமையில் வீரம் பொருந்தியவராய் இருந்தார் என்பது தட்சசிலை என்னும் இடத்தில் நடந்த கலகத்தை அடக்கி, அந்த மாகாணத்திற்கே அர

சர் பிரதிநிதியாகத் தம் தந்தையாரால் நியமிக்கப்பட்டதிலிருந்து அறியலாம். அவர் பின்பு உஜ்ஜயினிக்கு அதிபராக நியமிக்



கப்பட்டு, அதன் பின் பாடலிபுரத்தை அடைந்து, அரசபட்டத்தைப் பெற்றார்.

3. அவர் ஆட்சித் திறன் வாய்ந்த அதிகாரிகளை நியமித்துத் தம் நாட்டைச் சிறப்புடன் அரசு செய்து வந்தார்; பிற நாட்டவர் தம் நாட்டில் குடியேறியிருந்தால், அவர்கட்கு எவராலும் யாதோர் இடையூறும் நேராவண்ணம் கண்காணித்து வந்தார்: நாட்டுப் பொருளாதாரத் துறையைப் பெருக்க வாணிபமும் கைத்தொழிலும் சிறக்கப் பல ஏற்பாடுகளைச் செய்து வந்தார். அவர் அரசு ஏற்ற காலத்தில் அவரது ஆணை வடக்கில் இமயமுதல் தெற்கே பாலாறு வரையிற் பரவியிருந்தது. ஆனால், கலிங்க நாடு மட்டும் அவரது ஆட்சிக்கு உட்பட்டிலது. அதனையும் தம் நாட்டுடன் இணைத்துக்கொள்ளத் தாம் பட்டத்துக்கு வந்த 9-ஆம் ஆண்டில் கலிங்கரோடு போரிட்டு அதனையும் கைப்பற்றினர். அப்போது நடத்திய போர் அசோகருடைய உள்ளத்தை உருக்கியது. மடிந்தவர்

தொகையையும், கையற்றுக் காலற்றுக் கிடந்தவர் கூட்டத்தையும், கணவன்மாரை இழந்து கைம்பெண்கள் ஆயின காரிகைமார்களின் நிலையினையும், மக்களை இழந்து வாடிய பெற்றோர் உள்ளங்களையும், தந்தையரை இழந்து தளர்ந்த தனயர்களையும் காணச் சகித்திலர் அசோகர். அதனால், "எக்காரணம் கொண்டும் போர் புரியேன்!" எனத் தீர்மானித்து விட்டார்.

4. அசோகர் முதலில் இந்து மதத்தில் இருந்து, பின்பு புத்த மதத்தில் பற்றுக்கொண்டு, அதையே தழுவி வந்தார். அவருக்கு **உப குப்தர்** என்னும் புத்தமத சங்கத் தலைவர், குருவாய் விளங்கினர். இதன் பயனாக அவர் பட்டத்துக்கு வந்த பதின்மூன்றும் ஆண்டு புத்த சந்நியாசியாராகவே மாறி விட்டார்; என்றாலும், அரச காரியங்களைக் கைவிட்டிலர்; அரசை ஒழுங்காக நடத்தி வந்தார்; ஆனால், பதவிப் பற்றின்றி ஒழுகி வந்தார். தம் குடி க்ஷத்திரியக் குடியாதலின், அவர் புலால் உணவு புசிக்கும் வழக்கம் கொண்டிருந்தார்; புத்த மதத்தைத் தழுவியதும் அதனை அறவே ஒழித்தார்; அரண்மனையிலும் எவரும் எங்கும் புசிக்க இடங்கொடுத்திலர்; தம் அரசில் எவரேனும் உயிர்க்கொலை புரியின், அது அரச சட்டத்திற்கு விரோதம் என்பதாக அறிவித்துப் பலியை நிறுத்தினர்; தீர்த்த யாத்திரை, தல யாத்திரைகளை மேற்கொண்டார்; தம் கொள்கைகள் தம் அளவில் நின்றுவிடாது நாடெங்கும் பரவச் செய்ய மதப் பிரசாரகர்களை ஏவினர்; கல் தம்பங்களை நட்டு அவற்றில் எழுதி வைக்கவும் ஏற்பாடுகள் செய்தார்; நோயாளிகள் நோய் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு ஆங்காங்கு மருத்துவச் சாலைகளை நியமித்தார். கால் நடை மருத்துவச் சாலையும் ஏற்படுத்தினர்; அக்கால மருத்துவ முறை, மேனாட்டு முறையைப் போன்றதன்று; மூலிகைகளைக் கொண்டு நோயைத் தீர்க்கும் முறையேயாகும். அம்மூலிகை

களை வெளியிடங்களில் இருந்து கொணராமல் அவற்றைத் தம் நாட்டிலேயே பயிரிட ஏற்பாடு செய்தார். வழிப்போக்கர்களைப்பால் வருந்தாதிருக்க நிழல் தரும் மரங்களைச் சாலைகளில் வளர்க்கச் செய்தார்; நல்ல சாலைகளை அமைத்தார். சத்திரம் சாவடிகளைக் கட்டினார். அவர் புத்த மதத்தில் தமக்கு இருந்த பற்றுக் காரணமாகப் பிற மதத்தை வெறுத்தார் என்று சொல்ல முடியாதபடி எல்லா மதங்களையும் ஆதரித்தார் ; மதப்போர் எழாதபடி பார்த்து வந்தார்.

5. அசோகர் பெற்றோரைப் பேணல், பெரியாரைப் போற்றல், ஏழை எளியவர்கட்கு இரங்கல், உயிர்களிடத்து இரக்கம் காட்டுதல், உண்மை கூறுதல், பிற மத தூடணம் செய்யாதிருத்தல், ஒற்றுமையோடிருத்தல் ஆகிய இக் கொள்கைகள் நாடெங்கும் பரவுவதற்காக ஒரு மகாசபையைக் கூட்டினார். பல பிட்சுக்களை வெளி நாடுகளில் புத்த மதப் பிரசாரம் செய்ய ஏவினார் ; தம் புதல்வரான **மகிந்தர்** என்பவரையும் புதல்வியரான **சங்கமித்திரை** என்பவரையும் இலங்கைத் தீவுக்கு அனுப்பி அங்கும் புத்தமதக் கொள்கைகளைப் பரப்புமாறு செய்தார்.

6. அசோகரால் நாட்டப்பட்ட தம்பங்கள் வேலைப்பாட்டில் ஏறக்குறைய ஒரே தன்மை வாய்ந்தவை எனலாம். அவற்றின் உயரம் 40 அல்லது 50 அடி இருக்கும். அவற்றின் அடியில் சதுரமான பீடம் அமைந்திருக்கும். மேலே கண்டாமணி போன்ற அழகிய சிகரம் இருக்கும். சிகரத்தின் மேல் ஓர் அடி பருமன் உள்ள ஒரு தட்டு இருக்கும். அத்தட்டு வட்டமாகவோ, சதுரமாகவோ இருக்கும். அத்தட்டின்மேல் தூண்களுக்கு மகுடமாகச் சிங்கமோ, இடபமோ, கருடனோ உருவமாகச் செதுக்கப்பட்டிருக்கும்.

7. வடக்கே காஷ்மீரமும் நேப்பாளமும், கிழக்கே அஸ்ஸாம் வரையிலுள்ள நாடுகளும், தெற்கே மைசூர் வரையுள்ள





நாடுகளும், இந்தியாவிற்கு அப்பாற்பட்ட பலுச்சிஸ்தான், ஆப்கானிஸ்தானம் முதலிய நாடுகளும் அவர் ஆளுகைக்குட்பட்டிருந்தன. ஆனல், தமிழ் நாட்டு மூவேந்தர் நாடுகள் அவர் ஆட்சிக்கு உட்பட்டில்லாதது குறிப்பிடத் தக்கதாகும்.

8. முடி சார்ந்த மன்னரானலும், முடிவில் ஒரு பிடி சாம்பராகப் போக வேண்டுவதுதானே? ஆகவே, அசோகரும் கி. மு. 232-ஆம் ஆண்டில் இந்நிலவுலக வாழ்வை விட்டு நீங்கினர். அவருக்குப் பிறகு அவர் பேரரான தசரதர் என்பவர் மகத தேசத்திற்கு மன்னரானர்.

### அருஞ்சொற்பொருள் :

ஆழி-சக்கரம், ஆறு-வழி, இடையூறு-தீங்கு, கண்காணித்து-பாதுகாத்து, தனயன்மார்-பிள்ளைகள், புலால்-மாமிசம், பேணல்-போற்றல், பிட்சுக்கள்-புத்த சன்னியாசிகள், மூவேந்தர்-சேர, சோழ, பண்டியர்.

### கேள்விகள் :

1. அசோகர் எப்படிப் பட்டத்திற்கு வர நேர்ந்தது ?
2. அவர் எதன் பின் போர்புரிதல் இல்லை எனச் சபதம் செய்தார் ?
3. போரில் ஈடுபட்டதனால் ஏற்பட்ட பரிதாபமான நிலைகள் எவை ?
4. புத்தமதக் கொள்கைகள் எவை ?
5. புத்தமதத்தைப் பரப்ப அசோகர் என்ன ஏற்பாடுகளைச் செய்தார் ?

### பயிற்சி :

1. அசோகர் நாட்டிய தம்பங்களின் அமைப்பைப்பற்றி ஒரு சிறு குறிப்பு எழுது.
2. சங்கமித்திரையைக் குறித்து நீ அறிந்ததை எழுது.
3. அரசராய் வருபவர் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைக் குறிப்பிடு.
4. முஸ்லீம் அரசர் ஒருவர் வரலாற்றை அறிந்து எழுது.

### இலக்கணம் :

## வேற்றுமைத் தொடரும், அல்வழித் தொடரும்

பால் குடித்தான், பால் மொழியாள், - இவ்விரண்டு உதாரணங்களை விளக்கிக் கூறினல், எப்படி விளக்கம் பெறும் ? பாலைக் குடித்தான் ; பால் போலும் மொழியாள் என்றல்லவா விளக்கம் பெறும் ? ஆகவே, முன்னுள்ள உதாரணம் எதைத் தொடர்ந்துள்ளது ? ஐ என்னும் வேற்றுமை உருபை அன்றோ ? பின்னுள்ள உதாரணம் எதைத் தொடர்ந்துள்ளது ? வேற்றுமையல்லாத சொல்லாகிய போலும் என்னும் மொழியை

அன்றோ ? ஆகவே, முன்னுள்ள உதாரணம் **வேற்றுமைத் தொடராம்**; பின்னுள்ள உதாரணம் **அல்வழித் தொடராம்.**

பயிற்சி :

தண்டமிழ், சத்திர வித்தை, புண் வைத்து மூடார், புது முறை, வழி கண்டு, செந்தாமரை, இராப்பகல், தாமரைக்கண்— இவற்றுள் அல்வழித் தொடர்கள் எவை ? **வேற்றுமைத்தொடர்கள்** எவை ?

# 10. கேப்டன் ஜேம்ஸ் குக்கு

1. உலகில் மக்கள் தோன்றின நாள் முதற்கொண்டு விஞ்ஞான ஆராய்ச்சியாளர்களாயும் இயற்கையின் அழகைத் துருவி ஆராய்ந்து ஆனந்தித்த அரும்பெரு நிபுணர்களாயும் யாதொரு பயனையுங் கருதாது அலைகடலின்மேல் மிதந்து அலைந்து, பலபுதிய நாடுகளைக்கண்டு அகமகிழும் கைதேர்ந்த கப்பலோட்டிகளாயும் விளங்கினர்கள். அவ்வாறு அலைந்து புதிய நாடுகளாகிய ஆஸ்திரேலியாவையும், நியூஜிலாந்தையும் கண்டு பிடித்து, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் விஸ்தீரணத்தை அதிகப்படுத்தியவர் கப்பல் தலைவர் **ஜேம்ஸ் குக்கு** என்பவரேயாவர்.

2. ஜேம்ஸ் குக்கு, 1728-ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், 28-ஆம் நாள் இவ்வுலகில் தோன்றினர். அவர் தந்தையார் இங்கிலாந்தில் **கிளீவ்லாந்து** என்னும் நகரில் **மார்ட்டன்** என்னும் கிராமத்தில் ஏழை விவசாயியாய் இருந்தார். இளம்பருவத்தில் குக்கு கிராமப் பள்ளிக்கூடத்தில் ஆரம்பக் கல்வி பயின்றார். எனினும், அவர் கல்வியில் ஊக்கமில்லாமல் விளையாட்டுக்களிலேயே தம் காலத்தைக் கழித்தார்.

அவர் தகப்பனுர் தம் மைந்தர் கல்வி பயிலாததைக் கண்டு அவரைக் கிராமத்தில் நாடா விற்கும் ஒரு வணிகரிடம் வேலைக்கு அமர்த்தினுர். அப்பொழுது குக்குக்கு வயது பன்னிரண்டு. ஆனுல், அவ்வேலையிலும் அவர் தம் கவனத்தைச் செலுத்தினுரில்லை. இளமை முதற்கொண்டே கடற்கொள்



ளைக்காரர்களைப் பற்றியும், கடலுக்கப்பாலுள்ள நகரங்களின் அதிசய சரித்திரங்களையும், அவ்வந்நகரங்களில் வசிக்கும் மக்களின் நடையுடை பாவனைகளைப் பற்றிய கதைகளையும், வயது சென்ற மாலுமிகளின் வாயிலாகக் கேட்பதிலேயே விருப்பங் கொண்டு, தாமும் அவர்களைப் போலவே கப்பலில் ஆனந்தமாகக் கொந்தளிக்கும் பார்வையிடைப் பயணம் செய்து பல நகரங்களையும் அங்குள்ள மக்களையும் கண்டு பேருவகை அடைய விரும்பும் அந்நன்னுளை எதிர் நோக்கிக்கொண்டிருந்தனர்.

3. அறிஞர்கள் ஒன்றைச் செய்து முடிக்க நினைப்பார்கள். அதை நடைமுறையில் முடித்து உலக மக்களுக்கு எடுத்துக் காட்ட முயலுதல் அவர்கள் இயல்பு. அது போலவே ஜேம்ஸ் குக்கும் தாம் நினைத்தவாறு நடக்க மன வுறுதி கொண்டார். உடனே ஓர் இரவு, தமக்குரிய சிறு பொருள்களை ஒரு கைக்குட்டையில் மூட்டையாகக் கட்டி எடுத்துக்கொண்டு 'ஒயிட்பி' என்னும் துறைமுகத்திற்கு யாரும் அறியா வண்ணம் ஓடினர். அப்பொழுது அவரிடம் ஒரு ஷில்லிங்கு பணத்தைத் தவிர வேறென்றும் இல்லை. அச் சமயம் நிலக்கரி ஏற்றிச் செல்லும் கப்பல் ஒன்று புறப்பட ஆயத்தமாய் இருந்தது. உடனே ஜேம்ஸ் குக்கு அக்கப்பல் தலைவனிடம் சென்று, தம் விருப்பத்தைத் தெரிவித்து, அவனிடம் தஞ்சம் அடைந்தார். கப்பல் தலைவனும் இளைஞரது பேரவாவை நிறைவேற்ற எண்ணம் கொண்டு, அவரைத் தனக்குக் கையாளாக அமர்த்திக் கொண்டான்.

4. குக்கு தம்முடைய இருபத்தேழாம் வயதில் கூட்டாளியாகிய பெரும்பதவியை அடைந்தார். அச்சமயம் இங்கிலாந்து பிரான்ஸுடன் போர் புரிந்துகொண்டிருந்தது. உடனே ஜேம்ஸ் குக்கு, பிரிட்டிஷ் கடற்படையில் வேலை செய்ய ஒப்புக்கொண்டார். கனடாவில் உள்ள செயிண்டு லாரென்ஸ் நதியின் போக்கைக் கவனிக்கும் சிரமமான வேலையில் ஜேம்ஸ் குக்கு நியமிக்கப்பட்டார்; கியூபெக்கிலிருந்து நதி கடலில் சங்கமமாகும் வரையில் மிக்க சிரமத்துடன் படம் வரைந்து, அதைக்கொண்டு பிரிட்டிஷ் கப்பற்படையை எதிரிகளினின்றும் எளிதில் காப்பாற்றினர். அவரது இடைவிடா உழைப்பினல் 1762-ஆம் ஆண்டு, இழந்த நியூபவுண்டு லாந்து நகரத்தைப் பிரிட்டிஷார் மீண்டும் கைப்பற்றினர். அவரது திறமையைக் கண்ணுற்ற பிரிட்டிஷ் அரசாங்கம் அவரைப் புகழ்ந்து பாராட்டியது.

5. ஆனால், ஜேம்ஸ் குக்கோ, எவ்வித அரசாங்கப் புகழையும் பாராட்டாமல், புதிய நாடுகள் பலவற்றைக் கண்டுபிடித்து அவ்வந்நாடுகளிலுள்ள பொன், வெள்ளி முதலிவைகளை எடுத்துக்கொண்டு வருவதைப்பற்றியே அல்லும் பகலும் அனவரதமும் நினைத்துக்கொண்டிருந்தார். 1768-ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 25-ஆம் தேதி ஜேம்ஸ் குக்கு எண்பத்து மூன்று மாலுமிகளுடன், '**எண்டெவர்**' என்னும் கப்பலில் சென்றார். அவர்களுள் புகழ் பெற்ற **சர் ஜோசப்பு பாங்க்ஸ்** என்னும் இயற்கைத் தத்துவ விஞ்ஞானியார் ஒருவரும் இருந்தனர். அக்கப்பல் முந்நூற்று எழுபது டன் நிறையுள்ளது. குக்கு, சுமார் மூன்று ஆண்டுகளுக்குத் தேவையான பொருள்களை ஆயத்தம் செய்துகொண்டு சென்றார்.

6. அவர்கள் 1769-ஆம் ஆண்டு டஹிடி (Tahiti) என்னும் பிரதேசத்தை அடைந்தார்கள். அங்கு ஜூன் மாதம் 3-ஆம் தேதியன்று சுக்கிரன் என்னும் கிரகம் கண்டு பிடிக்கப் பட்டது. அச்சமயத்தில் கப்பலிலிருந்த வேலையாட்களுட் சிலர், கப்பலில் சாமான் அறையிலிருந்த பெரிய ஆணிகள் பலவற்றைத் திருடி, அப்பிரதேச மக்களுக்கு விற்று, பெரிய ஊதியம் பெற்றார்கள். நல்லொழுக்கத்திற்சிறந்த ஜேம்ஸ் குக்கு தம் ஊழியர்களின் திருட்டுச்செயலை அறிந்து, ஒவ்வோர் ஆளுக்கும் பன்னிரண்டு கசையடிகள் வீதம் கொடுத்து, அவர்களை எச்சரித்தார். இதைக் கண்ணுற்ற மற்றைய மாலுமிகள் அவரது கண்டிப்பு முறைகளுக்கு அஞ்சி நடந்து வந்தார்கள்.

7. ஆறு வாரங்கள் கடலில் சென்ற அக்குழுவினர் இறுதியில் நியூஜீலாந்தை அடைந்தனர். கரையில் நிறுத்தி வைக்கப்பட்ட கப்பலையும் வெள்ளையரையும் கண்ட காட்டு

மிராண்டிகளான அப்பிரதேச வாசிகள், அவர்களைச் சூழ்ந்து கொண்டு, பல இன்னல்களுக்குள்ளாக்க உறுதி கொண்டார்கள். உடனே ஜேம்ஸ் குக்கு அவர்களுக்குச் சமாதான சமிக்கைகள் செய்து, அவர்களுடைய தீயஎண்ணத்தை நீக்கினர். எனினும், அக்காட்டு மிராண்டிகள் செய்த துன்பங்களால் அவர் தம் குழாத்துடன் நாட்டிற்குள் செல்ல இயலவில்லை. மீண்டும் பன்முறை ஐரோப்பாக் கண்டத்தின் வடக்குத் தெற்குத் தீவுகளின் கடற்கரையோரங்களைச் சோதனை செய்து, இரண்டு தீவுகளின் இடையிலுள்ள ஜலசந்திக்குத் தம் பெயராகிய 'குக்கு' என்னும் பெயரை அமைத்தார். அது முதல் அந்த ஜலசந்தி **'குக்கு ஜல்சந்தி'** என வழங்கப்பட்டது. பிறகு அவர் **'குவீன் கார்லட்டு'** **ஜலசந்தி**யை அடைந்து, அங்கு ஆங்கிலேயக் கொடியாகிய 'யூனியன் ஜாக்'கை நிலை நாட்டிப் பறக்க விட்டார்.

8. பின்பு கப்பல் நடுக்கடலில் அன்னம் மிதப்பது போன்று அழகாகப் பத்தொன்பது நாட்கள் சென்றது. கடைசியில் அக்காலத்தில் **நியூ ஹாலந்து** என வழங்கப்பட்ட ஆஸ்திரேலியாக் கண்டத்தின் கிழக்குக் கரையைக் குக்கு கண்டனர். உடனே கப்பல் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தப்பட்டது. கப்பலிலிருந்த மாலுமிகள் அனைவரும் களிப்பு மிகுதியினல் தரையில் குதித்து, ஆரவாரித்தார்கள். அவர்களுள் விஞ்ஞானியாராகிய **ஜோஸப்பு பாங்க்ஸ்** என்பவரின் வேண்டுகோளினல், ஜேம்ஸ் குக்கு தாம் இறங்கிய துறைமுகத்திற்குத் **'தாவர வளைகுடா'** என்னும் பெயரை அமைத்தார்; பின்பு ஆஸ்திரேலியாவின் கீழ்க்கரைப் பிரதேசங்களுக்கு **'நியூ சவுத்வேல்ஸ்'** என்னும் பெயரிட்டு, அங்கேயும் யூனியன் ஜாக்குக் கொடியைப் பறக்க விட்டார். வெற்றியின் அறிகுறியாகக் கப்பலிலுள்ள பீரங்கிகள் மூன்று முறை முழக்கப்பட்

டன. ஒரு துளி இரத்தம் சிந்தாமல் வெற்றியடைந்த வீர புருஷர் ஜேம்ஸ் குக்கு தம் பரிவாரங்களுடன் **நன்னம்பிக்கை முனை** வழியாகத் தம் தாய் நாடு திரும்பினர்.

9. ஆங்கில அரசாங்கம், அவரது அஞ்சா நெஞ்சையும் குன்ரு ஊக்கத்தையுங் கண்டு, அவரைக் கப்பல் தலைவராக நியமித்தது. 1772-ஆம் ஆண்டு, ஜூலை மாதம், 13-ஆம் நாள் குக்கு இரண்டு கப்பல்களுக்குத்தலைவராக ஏற்படுத்தப்பட்டார். இரண்டு கப்பல்களிலும் 193 மாலுமிகள் இருந்தார்கள். ஆகவே, இரண்டு கப்பல்களும் **பிளை மௌத்**திலிருந்து புறப்பட்டு, நன்னம்பிக்கை முனை வழியாக **அண்டார்க்டிக்கு** மகா சமுத்திரத்தின் தென்கிழக்காகச் சென்று கொண்டிருந்தன. ஜேம்ஸ் குக்கு தென் பஸிபிக்கு மகாசமுத்திரத்திலுள்ள தீவுகளைக் காண ஆவல் கொண்டார். பனிக்கட்டிகள் நிறைந்திருந்ததனுல், இரு கப்பல்களுள் ஒன்று, குக்கின் பார்வையினின்றும் அறவே நீங்கி, வேறு திசையில் சென்றது. இறுதியில் குக்கு அக்கப்பலைக் **'குவீன் கார்லட்டு'** ஜலசந்தியின் அருகில் கண்டு அகமகிழ்ந்தார். பின்பு அவர் **'நியூ ஹெப்பிரைட்ஸ்'** என்னும் தீவுக் கூட்டத்தைக் கண்டு பிடித்தார்; **'நியூகாலிடோனியா' 'பைன்ஸ்' தீவு** முதலியவைகளையும் கண்டுபிடித்தார். பின்பு மீண்டும் நியூஜீலாந்திற்குச் சென்று ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையோரமாகத் தென் அட்லாண்டிக்கு மகாசமுத்திரத்திலிருந்து நன்னம்பிக்கை முனைவரை உள்ள தீவுகளைக் கண்டுபிடித்தவாறே ஆப்பிரிக்காவின் கரையோரமாகவே கடற்பிரயாணம் செய்தார்; இறுதியில் 1175-ஆம் ஆண்டு, ஜூலை மாதம், 25-ஆம் நாள், புறப்பட்ட இடமாகிய பிளைமௌத்தை யடைந்தார். 60,000 மைல்கள் அடங்கிய அவரது இரண்டாம் பயணம் மூன்று ஆண்டுகளில் முற்றுப் பெற்றது. அவர்

திறமையை மெச்சி, **'ராயல் ஸொஸைட்டி'** என்னும் கழகம் அவரை அங்கத்தினராகச் சேர்த்துக் கொண்டு பெருமைப் படுத்தியது.

10. ஜேம்ஸ் குக்கு மீண்டும் அட்லாண்டிக்கு மகா சமுத்திரத்திலிருந்து பஸிபிக்கு மகாசமுத்திரம் வரையில் வட கிழக்குப் பாதையில் உள்ள தீவுகளைக் கண்டு பிடிக்க அவாக் கொண்டார். உடனே 1776-ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 25-ஆம் நாள், இரு கப்பல்களுக்குத் தலைவராய் இருந்து மூன் றுவதும் இறுதியானதுமான கடற்பிரயாணம் செய்யத் தொடங் கினர். **'நோர்'** என்னும் இடத்திலிருந்து புறப்பட்டு, நன்னம் பிக்கை முனை வழியாக **டாஸ்மானியா, நியூஜீலாந்து, டோங் காத் தீவுகள்** முதலியவைகளை அடைந்தார்; பின்பு 1777-ஆம் ஆண்டு சிறு தீவுக்கூட்டத்தைக் கண்டு பிடித்து, அதற் குக் **'குக்குத் தீவுக் கூட்டம்'** என்னும் பெயரை அமைத்தார்; பின்பு பஸிபிக்கு மகாசமுத்திரத்தில் மிகப்பெரிய தீவுக் கூட் டத்தைக் கண்டு பிடித்து, அதற்குத் தம் நண்பரான **'சாண்டு விச்சு'** என்பவரின்பெயரால், **'சாண்டுவிச்சுத்தீவுக் கூட்டம்'** எனப் பெயரிட்டார். பின்பு அமெரிக்காவின் மேற்குக் கரை யோரமாகவே சென்று, வடகிழக்குச் சைபீரியாவின் கரை யோரமாகவே **'காம்சட்கா'** என்னும் இடத்தையடைந்து, கடைசியில் ஹாவாய்த்தீவிற்குத் திரும்பினர். 1779-ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், அவர் இரண்டு கப்பல்களைக் **'கீல கேக்குவா'** ஜலசந்தியில் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தித் தம் முடன் வந்த மாலுமிகள் அனைவரையும் மகிழச் செய்தார்.

11. பதினன்கு நாட்கள் இவ்வாறு களிப்பெய்திய ஜேம்ஸ் குக்கும் அவர் மாலுமிகளும், இரு கப்பல்களிலும் ஏறிக்கொண்டு, நடுக்கடலில் மீண்டும் தங்கள் பிரயாணத் தைத் தொடங்கினர்கள். வழியில் காட்டு மிராண்டிகளால்

அவர்கள் தாக்கப்பெற்றதனுல், இரு திறத்தாருக்கும் சண்டை உண்டாயிற்று. இதில் ஜேம்ஸ் குக்கு தாக்கப்பட்டுப் பூத உடல் விடுத்து, புகழுடல் பெற்ருர்.

### அருஞ்சொற்பொருள் :

அகம் - மனம், பரவை - கடல், அவண்-அங்கு, தஞ்சம்-அடைக்கலம், அவா-ஆசை, ஊதியம் - வருவாய், அனவரதமும் - எப்பொழுதும், அல்-இரவு, குழுவினர்-கூட்டத்தினர், இன்னல்-துன்பம், புகழுடல் பெற்ருர்-இறந்தார்.

### கேள்விகள் :

1. ஜேம்ஸ் குக்கு யார்? அவர் எங்கு யாருக்குக் குமாரராய்ப் பிறந்தார்?
2. அவருக்குக் கப்பலில் தொழில் புரியும் வாய்ப்பு எப்படி ஏற்பட்டது?
3. குக்கு மிகவும் கண்டிப்பானவர் என்பது எதனுல் தெரிகிறது?
4. சுக்கிரன் கிரகம் எப்பொழுது கண்டு பிடிக்கப்பட்டது?

### பயிற்சி :

1. குக்கு கண்ட இடங்களை முறையாக எழுது.
2. நன்னம்பிக்கை முனையைப்பற்றிச் சிறு குறிப்பு எழுது.
3. குக்கின் முடிவு குறித்துச் சில வாக்கியங்கள் எழுது.

### இலக்கணம் :

### புணர்ச்சி

நிலைமொழியீறும் வருமொழி முதலும் ஒன்றுபடப் புணர்வது புணர்ச்சியாம்.

(உ - ம்) இசை + கலை = இசைக் கலை.

### ல, ள் ஈற்றுப் புணர்ச்சி

நிலைமொழியீற்றில் ல், ள் என்னும் மெய்களுள் ஒன்று நின்று, வருமொழி முதலில் வல்லினம் வந்தால், ல், ற் ஆகவும் ள், ட் ஆகவும் திரியும். சில சமயம் திரியாமலும் வரும். மெல்லினம் வந்தால், லகரம் னகரமாகும்; ளகரம் ணகரமாகும்; இடையினம் வந்தால், இயல்பாகும்.

(உ - ம்)

| | |
|---|---|
| வேல் + படை = வேற்படை<br>வேள் + கோமான் = வேட்கோமான் | வல்லினம்<br>வரத்திரிந்தன. |
| பால் + குடி = பால் குடி,<br>வாள் + போழ்ந்தான் = வாள்போழ்ந்தான் | வல்லினம்<br>வர இயல்பாயின. |
| கல் + மலை = கன்மலை<br>புள் + மாட்சி = புண்மாட்சி | மெல்லினம்<br>வரத் திரிந்தன. |
| கல் + வன்மை = கல் வன்மை<br>முள் + வன்மை = முள்வன்மை | இடையினம்வர இயல்<br>பாயின. |

# 11. பொருள் சேமிப்பு நிலையங்கள்

# (Banks)

1. பண்டைக்காலத்தில் நம் நாட்டில் இருந்த செல்வர் பலர் தம்மிடமிருந்த பொருள்களைப் புதைத்து வைத்து, அல்லும் பகலும் காத்து வந்தனர். இதனாலேதான் ஔவைப் பிராட்டியாரும் "பாடு பட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைக்கும் கேடுகெட்ட மானிடரே, கேளுங்கள்," என்று கூறினார். அவர்கள் தங்கள் சுற்றத்தினர்க்கும் அறிவிக்காமல் இறத்தலும் உண்டு. அவ்வாறு இறந்து போனவர்களின் செல்வங்களே இக்காலத்தில் சிற்சில இடங்களில் புதை பொருள்கள் எனத் தோண்டி எடுக்கப்படுகின்றன. மேலும் அக்காலத்தில் சோரர் பயம் அதிகமாயிருந்தது. திருடர்களுக்குப் பயந்தே செல்வந்தர்கள் பணத்தை வீணே புதைத்து தாங்களும் நன்மையுறாமல், பிறரையும் துய்க்கவொட்டாமல் வாழ்ந்தார்கள். இதனால், நாட்டின் பொருளாதார நிலையும் நாளுக்கு நாள் மறையலாயிற்று.

2. நாகரிகம் மிகுந்த மக்களுக்கு வாழ்க்கைக்கு இன்றியமையாத பல பொருள்கள் தேவையாயிருந்தன. ஒரு நாட்டில்

உள்ள பொருள் மற்ருெரு நாட்டில் கிடைப்பது அருமை. ஆகையினுல் மனிதர் ஒவ்வொருவரும் தத்தமக்கு வேண்டும் பொருள்களை மற்றவர்களிடமிருந்து வாங்கிக்கொண்டு அவற்றிற்குப் பதிலாகத் தாம் தயாரித்த பண்டங்களை அவர்களுக்குக் கொடுத்து உதவி வந்தனர். இவ்வாறு மாற்றி வந்ததைப் **பண்டமாற்று** என்று அக்கால மக்கள் கூறி வந்தார்கள். நாளடைவில், அதாவது, பதினேழாம் நூற்ருண்டிலிருந்து இன்று வரையில் பெரும்பணக்காரர் பலர் தம் செலவுக்கு வேண்டிய பொருளைத் தம்மிடம் வைத்துக்




கொண்டு, எஞ்சிய பொருளைப் பாதுகாப்பான ஓர் இடத்தில் வைக்கின்றனர்; திங்கட்கு ஒரு முறை தாங்கள் சேமித்து வைத்த பணத்திற்குக் குறைந்த வட்டிகளை வாங்கிக்கொள்ளுகின்றனர். இத்தகைய பெருந்தனவந்தர்களின் சேமிப்புப் பணம், ஏழை விவசாயிகளுக்கும், பணம் வேண்டுபவர்களுக்கும் அவரவர்களின் நிலைக்கேற்ப குறைந்த வட்டிக்குக்

கொடுக்கப்படும். இங்ஙனம் குறைந்த வட்டிக்குச் செல்வத்தைக் கொடுக்கவும், வாங்கவும், சேமித்து வைக்கும் இடங்களே **'பொருள் சேமிப்பு நிலையங்கள்'** அல்லது **'பாங்குகள்'** என்று வழங்கலாயின. இத்தகைய பாங்குகளே ஒவ்வொரு நாட்டின் செல்வ நிலையையொட்டித் தோற்றுவிக்கப்படுகின்றன. இப்பாங்குகள் நாட்டின் உயிர் நாடியாயிருந்து, வாணிபம், கைத்தொழில் முதலியவற்றைப் பெருக்கி, மக்கள் மகிழ்ச்சியுடன் வாழத் துணை செய்கின்றன.

3. இத்தகைய சேமிப்பு நிலையங்கள் பல நம் இந்தியாவில் இருக்கின்றன. அவைகளில் **ரிசர்வ் பாங்கு, இந்தியன் பாங்கு, இம்பீரியல் பாங்கு** என்பவை பெயர் பெற்றவை. உலகிலுள்ள பல்வேறு பட்டணங்களில் மேற்கூறிய மூன்று பாங்குகளுக்கும் கிளை நிலையங்கள் இருக்கின்றன. நம் நாட்டில் இவ்விதச் சேமிப்பு நிலையங்கள் தவிர, ஆங்காங்கே வர்த்தக நிதி சேமிப்பு நிலையங்கள் (Commercial Banks) தோன்றியிருக்கின்றன. மேற்சொன்ன நிலையங்களும் வர்த்தகக் கூட்டுச் சங்கத்தினரால் (Joint stock Companies) வரையறுத்த சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அதற்குப் புறம்பான சேமிப்பு நிலையங்களைத் துரைத்தனத்தார் அங்கீகாரம் செய்யாமல் தடை செய்துவிடுவார்கள்.

4. பாங்கு அல்லது சேமிப்பு நிலையம் நடத்தும் நிருவாகிகள் முதன் முதல் அதை ஆரம்பம் செய்வதற்கு முன், பாங்கின் மூலதனம் இவ்வளவு என்று வரையறுத்து, அம்மூலதனத்தைப் பல பங்குகளாகப் பிரித்து, பொது மக்களுக்கு ஓர் அறிக்கை வெளியிடுவார்கள். சிற்சில சமயங்களில் பங்கிற்குரிய தொகைப் பணத்தில் பாதியை முதலிலும் மீற்றப் பாதியை இறுதியிலும் பங்குதாரர்களிடமிருந்து வசூலித்துக்கொள்வர். சில சேமிப்பு நிலையங்கள் இத்தகைய

பங்குத் தொகைப்பணம் போதாமல் இருக்கும் போது, பல உறுப்பினர்களிடமிருந்து குறைந்த வட்டிக்குப் பணம் வாங்கிக்கொள்ளும். இப்படிச் சேர்ந்த பெரு மூலதனத்திலிருந்து வீடு, நிலம், வர்த்தகப் பொருள்கள், பொன், வெள்ளி, இரத்தின ஆபரணங்கள் முதலிய சொத்துக்களை அடைமானமாக வைத்துக்கொண்டு, இலாப வட்டிக்குக் கடன் கொடுக்கின்றன. இதனால், உள் நாட்டு அயல் நாட்டு வாணிபங்களுக்குப் பெரும் பணநெருக்கடி ஏற்படாமல் இருக்கின்றது.

5. பாங்குகள் பெரும்பணக்காரர்களாகிய உறுப்பினர்களிடம் குறைந்த வட்டிக்குக் கடனாக வாங்கும் பணத்தைச் சேமிப்பு நிதி (Deposit) ஆக வைத்துக்கொள்ளுகின்றன. இதற்கெனக் கொடுக்கப்பட்ட பணத்திற்குக் காலவரையறை உண்டு. இக்காலவரையறைக்குள் இப்பணத்தை வாங்க இயலாது. ஆனால், இதற்குரிய வட்டி, குறித்த தவணையில், உரியவர்களிடம் தவறாமல் சேர்க்கப்படும். இம்முறைக்கு உறுதித் தவணைச் சேமிப்பு நிதி (Fixed Deposit) என்பது பெயர்.

6. சில வியாபாரிகள், தங்கள் வியாபாரங்களில் கிடைக்கும் பணத்தை அவ்வப்போது சேமிப்பு நிலையங்களில் பாதுகாப்பாகக் கொடுத்து வைப்பர். குறிப்பிட்ட பணத் தொகை வரையிலும் வட்டி கொடுக்கப்படும். இப்பணத்தை மொத்தமாகவோ, சிறிதுசிறிதாகவோ பெற்றுக்கொள்ள வசதி உண்டு. இத்தகைய பணத்தைப் பிரதிதினம் வழங்கும் கணக்கில் (Current Account) பதிவு செய்துகொள்வார்கள். வியாபாரிகள் விரும்பும் சமயத்தில், பிரதி தினம் வழங்கும் கணக்கில் உள்ள பணத்தை உண்டியல் (Cheque) மூலமாக அவர்களுக்குச் சேமிப்பு நிலையங்கள் கொடுக்கின்றன. இவ்வுண்டியலில் இரண்டு வகையுண்டு: ஒன்று, கொணர்

பவர் உண்டியல் (Bearer cheque) என்பது ; மற்ருென்று உத்தரவு உண்டியல் (Order cheque) என்பது. முதலில் கூறியுள்ள உண்டியலில் பெயர் குறித்த நபருக்காவது, அல்லது உண்டியலைக் கொண்டு வருபவருக்காவது பணம் கொடுக்க வேண்டும் என்பது குறிக்கப்பட்டிருக்கும். இவ்வுண்டியலைக் கொண்டு வருபவரின் கையெழுத்தை வாங்கிக் கொண்டு பணம் கொடுக்கப்படும். சில சந்தர்ப்பங்களில் பணத்திற்குரியவர் தம் உண்டியலைத் தொலைத்துவிடவும் நேரிடும். அப்பொழுது அவர் இச்செய்தியைப் பணம் சேர்த்து வைத்திருக்கும் சேமிப்பு நிலையத்திற்குத் தெரிவிக்க வேண்டும். அவ்வாறு தெரிவித்தற்குத் தாமதமாயின், அவரது உண்டியலைக் கண்டெடுத்தவர் சேமிப்பு நிலையத்திற்குச் சென்று பொய்க் கையெழுத்திட்டு அதில் குறித்துள்ள பணத்தை வாங்கிக்கொண்டு போய்விடுவார். இதனுல் வியாபாரிக்குப் பண நஷ்டம் உண்டாகின்றது. எனவே, பெரும்பான்மையான வியாபாரிகள் கொணர்பவர் உண்டியலாகவே (Bearer cheque) தங்கள் சேமிப்பு நிலையங்களுக்குக் கொடுக்கமாட்டார்கள். மற்ருேர் உண்டியலாகிய உத்தரவு உண்டியலில் (Order cheque) அதில் குறிப்பிட்ட பெயருடைய நபருக்காவது அல்லது அவரது கட்டளை பெற்றவருக்காவது குறித்த பணத்தைக் கொடுக்கவேண்டும் என்று எழுதிக் கொடுப்பார். மேலும், அவ்வுண்டியலின் இடப்பக்க மேல் மூலையில் இரண்டு சாய்வுக் கோடுகளை வரைந்து, அவற்றின் இடையே மற்றவர்க்கு மாற்றக்கூடிய தன்று (Not negotiable) என்று எழுதியிருப்பர். இக்காலத்தில் இத்தகைய உத்தரவு உண்டியல்களையே (Order cheques) பெருந்தனவந்தர்களும் பணத்தையே ஆதரவாக வைத்து நடத்தும் வியாபாரிகளும் தங்கள் தங்கள் பொருள் சேமிப்பு நிலையங்களுக்குக் கொடுத்து விரும்பும் பணத்தைப் பெறுகின்ருர்கள்.

7. உண்டியல் புத்தகத்தின் ஒவ்வோர் ஏட்டிலும் பொருள் சேமிப்பு நிலையத்தின் பெயரும் தேதியும் மாதமும் பணம் வேண்டுபவரின் பெயரும் எழுதுவதற்கான இடம் முதலியவையும் அச்சிடப்பட்டிருக்கும். அவ்வேடு அயற்பகுதியோடு (Counterfoil) கூடியதாய் இருக்கும். வியாபாரியோ செல்வந்தரோ தமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் உண்டியல் புத்தகத்திலுள்ள முதல் ஏட்டில் தம் பெயரையும் மாதம், தேதி, வேண்டும் தொகை முதலியவைகளையும் எழுத வேண்டும். இப்படியே அவ்வேட்டின் அயற்பகுதியிலும் எழுதி அப்பகுதியைத் தம் கணக்கில் பதிவு செய்துகொள்ளத் தம்மிடம் வைத்துக்கொண்டு மற்றப் பகுதியைப் புத்தகத்தினின்றும் கிழித்துத் தாம் பணம் சேமித்து வைத்த நிலையத்திற்குச் சென்று, அங்குக் குறிப்பிட்ட குமாஸ்தாவிடம் தரல் வேண்டும். உடனே அவர் உண்டியலில் குறிக்கப்பட்டவரின் பெயரைப் பேரேட்டிற்பார்த்து, அவர் கோரிய பணம் இருக்கிறதா என்பதை அறிந்ததும், கொடுக்கப் போகும் பணத்தைப் பேரேட்டில் குறித்துக்கொண்டு, குறிப்பிட்ட எண்ணுள்ள செப்பு வட்டத்தைக் கொடுத்து, அவ்வெண்ணை அவ்வுண்டியலிலும் குறித்துவிடுவார். பின்பு அவ்வுண்டியல் பல குமாஸ்தாக்களால் பார்வையிடப்பட்டுப் பல பேரேடுகளில் சரிபார்க்கப்பட்டு இறுதியில் பாங்கு காரியஸ்தர் கையொப்பமிட்டவுடன், பணம் வழங்கும் குமாஸ்தாவிடம் அனுப்பப்படும். உடனே அக்குமாஸ்தா உண்டியலில் எழுதப்பட்டுள்ள பெயரையும் தொகையையும் தம்மிடமுள்ள பணம் பட்டுவாடா செய்யும் கணக்குப் புத்தகத்தில் பதிவு செய்துகொள்வார்; பிறகு அதில் குறிப்பிட்ட எண்ணைக் கூப்பிடுவார். உடனே அவ்வெண்ணுள்ள செப்பு வட்டத்தை வைத்திருப்பவர் அவரிடம் சென்று அவ்வட்டத்தைக் கொடுப்பார். அவ்வட்டத்திலுள்ள எண் சரியாய் இருக்கிறதா என்று பார்வை

விட்டவுடன், அக் குமாஸ்தா பணத்தை எண்ணி, அதற்குரிய வரிடம் தருவார்.

8. பொருள் சேமிப்பு நிலையம், ஒவ்வொன்றும் 'பிரதி தினம் வழங்கும் கணக்கில்' பதிவு செய்துள்ளவர்களுக்கு உண்டியல் புத்தகம் ஒன்றும், பொருள் சேமிப்பு நிலையத்தின் கணக்குப் புத்தகம் (Bank Pass Book) ஒன்றும் கொடுக்கும். இவைகளைப் பெற்றுக்கொள்பவர்கள் புத்தகத்தில் குறிக்கப்பட்டுள்ள கணக்குகளைத் தம்முடைய கணக்குகளுடன் பரிசீலனை செய்துகொள்வார்கள். மேலும், அவர்கள் கட்டிய பணத்தைவிட அதிகப் பணம் வாங்காமலிருக்கவும் இப்புத்தகம் துணை புரிகின்றது.

9. இவ்வாறு தம் கணக்கில் உள்ள பணத்தைவிட, அதிகப் பணம் வாங்குவதை 'அதிக பணம் வாங்குதல்' (Over Draft) என்று குறிப்பிடுவர். இங்ஙனம் அதிக பணம் கொடுப்பது சில குறிப்பிட்ட நாணயமுள்ள பெரும் பணக்காரர்களுக்கும், வணிகர்களுக்குமேயொழிய, ஏனையோருக்கு அன்று.

10. ஒவ்வோர் ஆண்டின் இறுதியிலோ, அல்லது ஆறு மாதத்திற்கு ஒரு முறையோ, ஒவ்வொரு பொருள் சேமிப்பு நிலையத்தின் கணக்குகள் அனைத்தும் பட்டம் பெற்ற சர்க்கார் கணக்குப் பரிசோதகர்களால் (Auditors) பரிசோதிக்கப்பட்டு, அதற்கடையாளமாக நற்சாட்சிப் பத்திரம் தரப்படும். அதுவரையில் வந்த இலாபத்தில் ஒரு பகுதி விசேஷ சேமிப்பு நிதியாக (Reserve Fund) ஒதுக்கப்பட்டு, வேண்டும் சந்தர்ப்பங்களில் உபயோகிக்கப்படும். மற்றப் பகுதிகளில் அந்தந்த மாதங்களில் நடைபெற்ற செலவுகளுக்கு எடுத்துக்கொண்டது போக, மீதி இலாபம் பங்குதாரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கப்படும்.

11. ஒருவர் மற்ளுெரு நாட்டினருக்கு எழுதி, தபால் மூலமாக அவருக்குச் சேரவேண்டிய பணத்தைக் கொடுத்து விடலாம். ஒரு வியாபாரி, பொருள் சேமிப்பு நிலையத்தில் கணக்கு இல்லாதவரிடம் உண்டியல் தந்தால், அவர் உடனே அவ்வுண்டியலில் கையெழுத்திட்டு, உண்டியலில் குறித்திருக்கும் பொருள் சேமிப்பு நிலையத்தில் கணக்கு வைத்திருப்பவரிடம் கொடுத்துப் பணத்தைப் பெற்றுக்கொள்ளலாம்.

12. எனவே, ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு அடிப்படையாய் விளங்குபவைகளான வாணிபம், கைத்தொழில் ஸ்தாபனங்கள், விவசாயம் முதலியவைகள் ஓங்கி வளருவதற்கும், அவ்வத்துறைகளில் ஈடுபடும் செல்வந்தர்களுக்கு வேண்டும்போது பணவுதவி செய்வதற்கும் ஏதுவாய் இருப்பவை, பொருள் சேமிப்பு நிலையங்களேயாகும் என்பது தெற்றென விளங்கும்.

**அருஞ்சொற்பொருள் :**

அல் - இரவு, சோரர் - திருடர், துய்க்க - அனுபவிக்க, எஞ்சிய - மிகுந்த, சேமித்து - சேர்த்து, திங்கள் - மாதம், புறம்பான - வேறான, நாணயம் - ஒழுங்கு.

**கேள்விகள் :**

1. பண்டமாற்று முறையாவது யாது ?
2. பாங்குகள் எவ்வாறு முதல் முதல் தொடங்கப்படுகின்றன ?
3. பாங்கிலிருந்து பணம் பெறும் முறை யாது ?
4. உண்டியலில் எத்தனை வகையுண்டு ?
5. உண்டியலை இவ்வாறு வகைப்படுத்தி இருப்பதற்குரிய காரணங்கள் எவை ?

**பயிற்சி :**

உறுதித் தவணைச் சேமிப்பு நிதி, வர்த்தகக் கூட்டுச்சங்கம், பிரதி தினம் வழங்கும் கணக்கு, கணக்குப் பரிசோதகர், விசேஷ சேமிப்பு நிதி-இவைகளைப்பற்றிச் சிற்சில குறிப்பு எழுதி, இவற்றிற்கு நேரான ஆங்கில மொழிகளையும் தொடர்களையும் எழுது.

## இலக்கணம் :

### ணகர னகர ஈற்றுப் புணர்ச்சி

நிலைமொழி ஈற்றில் ணகர மெய்யேனும், னகர மெய்யேனும் நின்று, வருமொழி முதலில் வல்லினம் வந்தால், ணகரம் டகரமாகும்; னகரம் றகரமாகும். மெல்லினமும் இடையினமும் வந்தால், இயல்பாகும்.

மண் + குடம் = மட்குடம்
பொன் + குடம் = பொற்குடம் } வல்லினம் வரத் திரிந்தன.

| | | | |
|---|---|---|---|
| மண் + மாட்சி | = | மண்மாட்சி | மெல்லினமும் |
| விண் + மாட்சி | = | விண்மாட்சி | இடையினமும் |
| பொன் + வலிது | = | பொன்வலிது | வர இயல்பாயின. |
| மண் + வலிது | = | மண்வலிது | |

### மகர ஈற்றுப் புணர்ச்சி

நிலைமொழியீற்றில் மகரமெய் வருமொழியாக முதலில் நிற்க, வல்லினம் வந்தால், மகரமெய் வந்த எழுத்துக்கு இனமாகத் திரியும் : மெல்லினம் வந்தால் கெடும் ; உயிரும் இடையினமும் வந்தால், கெடுதலும் இயல்புமாகும்.

(உ - ம்) மரம் + குறிது = மரங்குறிது
தவம் + செய் = தவஞ்செய் } வல்லினம் வர, மகரம் வந்த எழுத்துக்கு இனமாகத் திரிந்தது.

மரம் + நீட்சி = மரநீட்சி
மர + நார் = மரநார் } மெல்லினம் வர மகரம் கெட்டது.

மரம் + அடி = மரவடி
மரம் + வேர் = மரவேர் } உயிரும் இடையினமும் வர மகரம் கெட்டது.

மரம் + அழகு = மரமழகு
மரம் + வலிது = மரம் வலிது } உயிரும் இடையினமும்வர மகரம் இயல்பானது.

# செய்யுட்பகுதி

## I. வாழ்த்துப் பாக்கள்

### திருவாசகம்

கடையவ னேனேக் கருணையி ஞல்கலந் தாண்டுகொண்ட
விடையவ னே!விட் டிடுதிகண் டாய்;விறல் வேங்கையின்றோல்
உடையவ னே!மன்னு முத்தர கோசமங் கைக்கரசே !
சடையவ னே!தளர்ந் தேனெம் பிரானென்னைத் தாங்கிக்
[கொள்ளே. 1

—மாணிக்கவாசகர்

### திவ்வியப் பிரபந்தம்

கொண்டல் வண்ணனைக் கோவல ஞய்வெண்ணெய்
உண்ட வாயனென் னுள்ளங் கவர்ந்தானை
அண்டர் கோனணி அரங்கனென் அமுதினைக்
கண்ட கண்கள்மற் றென்றினைக் காணுவே. 2

—திருப்பாணாழ்வார்

### திருவிளையாடற்புராணம்

பழுதகன்ற நால்வகைச்சொல் மலரெடுத்துப்
பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி
பெறமுக்கண் மூர்த்தி தாளில்
தொழுதகன்ற அன்பெனுநார் தொடுத்தலங்கல்
சூட்டவரிச் சுரும்புந் தேனும்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தாள்
அடிமுடிமேல் கொண்டு வாழ்வாம். 3

—பரஞ்சோதி முனிவர்

## திருப்புகழ்

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனுலே,
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே ;
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே !
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா !
நாலந்த வேதத்தின் பொருளோனே !
நானென்று மார்தட்டும் பெருமாளே ! 4

—அருணகிரி நாதர்

## இரட்சணிய யாத்திரிகம்

தனுகர ணங்க ளோய்ந்து தளர்ந்துமூச் சொடுங்குங் காலை
மனைமகார் துணையா வாரோ மருங்கிருந் தழுவ தல்லால் ?
அனவர தமுமு னக்கோர் ஆந்துணை விரும்பில் இன்றே
மனுவுரு வாய ஏசு மலரடி வணங்காய் நெஞ்சே ! 5

—H. A. கிருஷ்ணப்பிள்ளை

## மனேன்மணீயம்

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி இருப்பதுபோல்,
கன்னடமும், களிதெலுங்கும், கவின்மலையா ளமும்,துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே ! 6

—சுந்தரம் பிள்ளை

**ஆசிரியர் வரலாறு :**

1. மாணிக்கவாசகர் சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவர்; பாண்டி நாட்டைச்சேர்ந்த திருவாதவூரில் ஆமாத்தியர் குலத்தில் பிறந்தவர். இவர் அரிமர்த்தன பாண்டியனுக்கு மந்திரியாராய் இருந்து தென்னவன் பிரமராயர் என்னும் பட்டமும் பெற்றவர். இவர் காலத்தைச் சிலர் கி. பி. 4-ஆம் நூற்றுண்டு என்பர். சிலர் கி. பி. 9-ஆம் நூற்றுண்டு என்பர். இவர் பாடிய நூல்கள் திருவாசகம், திருக்கோவையார் என்பன.

**அருஞ்சொற்பொருள் :**

விடையவனே - இடபத்தின்மீது வருபவனே, விறல் - வெற்றி, உத்தரகோச மங்கை - இராமநாதபுர மாவட்டத்தைச் சார்ந்த ஒரு சிவ தலம்.

**ஆசிரியர் வரலாறு :**

2. திருப்பாணுழ்வார் பாணர் குடியில் திரிசிராப்பள்ளிக்கடுத்த உறையூரில் பிறந்தவர். இவரை **லோக சாரங்கர்** என்னும் திருவரங்கக் கோவில் அர்ச்சகர், தம் தோளில் தூக்கிக்கொண்டு, பெருமாள் முன் சென்றதால், இவர் **முனி வாகனர்** என்னும் பெயரையும் பெற்றவர். இவர் பாடல் நாலாயிரப் பிரபந்தத்தில் உள்ளது.

**அருஞ்சொற்பொருள் :**

கொண்டல் - மேகம், கோவலன் - இடையன், அண்டர் கோன் - தேவர் தலைவன், அணி-அழகிய.

**ஆசிரியர் வரலாறு :**

3. பரஞ்சோதியார் வேதாரணியம் என்னும் திருமறைக்காட்டில் அபிடேகத்தர் மரபில் ஆதிசைவ சமயத்தில் பிறந்தார். இவர் பாடிய வேறு நூல்கள், போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி என்பன.

**அருஞ்சொற்பொருள் :**

நால்வகைச்சொல் - பெயர், வினை, இடை, உரிச்சொற்கள், அலங்கல் - மாலை, சுரும்பு - வண்டு, தோடு - இதழ், முண்டகம் - தாமரை.

**ஆசிரியர் வரலாறு :**

4. அருணகிரி நாதர் திருவண்ணாமலையில் ஏறக்குறைய 500 ஆண்டுகட்கு முன் பிறந்தவர் ; முருகன் திருவருளைப் பெற்றவர். இவர் காலத்து அரசன் பிரபுடதேவ மகாராஜன். இவர் காலத்துப் புலவர் வில்லிபுத்தூரார். இவர் பாடியவை திருப்புகழ், கந்தர் அநுபூதி, கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம் முதலியன.

### அருஞ்சொற்பொருள் ,

மால்-மயக்கம், தார் - மாலே, வேலே - சமுத்திரம், காலா - இயமனே.

### ஆசிரியர் வரலாறு :

5. H. A. கிருஷ்ணப்பிள்ளே திருநெல்வேலிப் பாளையங்கோட்டையில் **1827**-ஆம் ஆண்டு பிறந்தவர்; கிறிஸ்தவ மதத்தினர். இவர் இரட்சணிய யாத்திரிகம், இரட்சணிய மனோகரம் என்னும் நூல்களே இயற்றியவர்.

### அருஞ்சொற்பொருள் :

தனு-உடல், கரணம்-இந்திரியங்கள், மனே-மனேவி, மகார்-பிள்ளேகள், மருங்கு - பக்கம், அனவரதம் - எப்பொழுதும், மனு - மனிதன், இன்னே-இப்பொழுதே.

### ஆசிரியர் வரலாறு :

6. சுந்தரம் பிள்ளே திருவிதாங்கூரைச் சார்ந்த ஆலப்புழை என்னும் ஊரில் சைவ மரபில் **1855**-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் எழுதிய நூல்கள், நூல் தொகை விளக்கம், மனோன்மணீயம் என்பன.

### அருஞ்சொற்பொருள் :

அளித்து-காப்பாற்றி, துடைக்கினும்-அழித்தாலும், கவின்-அழகிய, துளு - ஒரு மொழி, ஆரியம் - சம்ஸ்கிருதபாஷை, உலகவழக்கு - பேச்சு வழக்கு.

### கேள்விகள் :

1. மாணிக்கவாசகர் சிவபெருமானே வேண்டுவது யாது ?
2. திருப்பாணுழ்வார் திருமாலே எவ்வெவ்வாறு சுட்டிக் காட்டுகிறார் ?
3. எவை எவை மலர், நார் என உருவகஞ் செய்யப்பட்டுள்ளன ?
4. அருணகிரி நாதர் வேண்டும் வரம் யாது ?
5. ஏன் இயேசுவை உடனே வணங்க வேண்டும் ?
6. தமிழ்த்தாயின் வயிற்றினின்று தோன்றிய மொழிகள் எவை ?

### பயிற்சி :

1. திருவாசகம் இன்ன திருமுறையைச் சார்ந்தது என்பதைக் கூறு.
2. 'வேல் கொண்டு வேலேப்பண்டெறிவோனே '- இதில் அடங்கிய கதையினே எழுது.
3. தமிழ் மொழியும் பரம்பொருளும் ஒத்து விளங்கும் பொருத்தத்தை விளக்கி எழுது.

# II. நீதிப் பாக்கள்

## 1. திருக்குறள்

தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது. 1

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். 2

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். 3

மனத்துக்கண் மாசில னாதல்; அனைத்தறன் ;
ஆகுல நீர பிற. 4

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை ; அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று. 5

மங்கல மென்ப மனைமாட்சி ; மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு. 6

தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். 7

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம். 8

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. 9

பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணி; அல்ல மற்றுப் பிற. 10

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்,
ஞாலத்தின் மாணப் பெரிது. 11

கேடும் பெருக்கமு மில்லல்ல ; நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. 12

எல்லார்க்கும் நன்றாம் பணிதல் ; அவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 13

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினு மோம்பப் படும். 14

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 15

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும். 16

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 17

கண்ணின்று கண்ணறச் சொல்லினும், சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். 18

பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல் ;
மக்கட் பதடி யெனல். 19

மறந்தும் பிறன்கேடு சூழற்க ; சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. 20

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு. 21

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. 22

தோன்றிற் புகழொடு தோன்றுக ; அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. 23

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல். 24

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று. 25

சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. 26

தவம்மறைந் தல்லவை செய்தல், புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று. 27

களவினு ஞகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும். 28

உள்ளத்தாற் பொய்யா தொழுகின், உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன். 29

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் ; அல்லிடத்துக்
காக்கினென், காவாக்கா லென் ? 30

இன்னுசெய் தாரை யொறுத்தல், அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 31

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. 32

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 33

பற்றுக பற்றற்ருன் பற்றினை ; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 34

இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 35

வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை ;
யாண்டு மஃதொப்ப தில். 36

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது. 37

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு. 38

தொட்டனைத் தூறு மணற்கேணி ; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. 39

நல்லார்கண் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கண் பட்ட திரு. 40

கற்றில னாயினுங் கேட்க ; அஃதொருவற்(கு)
ஒற்கத்தி னூற்றாந் துணை. 41

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை ; அஞ்சுவ(து)
அஞ்ச லறிவார் தொழில். 42

வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை ; நயவற்க
நன்றி பயவா வினை. 43

பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். 44

மனநலம் மன்னுயிர்க் காக்கம் ; இனநலம்
எல்லாப் புகழுந் தரும். 45

செய்தக்க வல்ல செயக்கெடும் ; செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். 46

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். 47

பருவத்தொ டொட்ட வொழுகல், திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. 48

நெடும்புனலுள் வெல்லும் முதலை ; அடும்புனலின்
நீங்கி னதனைப் பிற. 49

குணம்நாடிக் குற்றமும் நாடி, அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். 50

வினைக்குரிமை நாடிய பின்றை, அவனை
அதற்குரிய னாகச் செயல். 51

சுற்றத்தார் சுற்றப் படவொழுகல், அறிவினைப்
பெற்றத்தாற் பெற்ற பயன். 52

பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. 53

இறைகாக்கும் வையக மெல்லாம்; அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். 54

நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும். 55

பண்ணென்னும் பாடற் கியைபின்றேல்? கண்ணென்னும்
கண்ணோட்ட மில்லாத கண் 56

எல்லார்க்கு மெல்லாம் நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில். 57

உள்ள முடைமை யுடைமை; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். 58

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாய தெல்லா மொருங்கு. 59

மடியுளாள் மாமுகடி என்ப; மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள். 60

**ஆசிரியர் வரலாறு :**

திருவள்ளுவர் தமிழ் நாட்டுப் புலவர்களுள் தலை சிறந்தவர். இவரையும் இவர் எழுதியுள்ள திருக்குறளையும் புகழாத புலவர் எவரும் இலர் என்னலாம். இவர் கடைச்சங்க காலமாகிய கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் பிற்காலத்தில் சென்னை மயிலாப்பூரில் வாழ்ந்தவர். இவர் பெயரால் ஒரு கோயிலும் அங்கு இருக்கிறது.

## அருஞ்சொற்பொருள் :

1. தனக்குவமையில்லாதான் - ஒப்பற்ற கடவுள், மாற்றலரிது - ஒழிப்பது கடினம, 2. வியன் - பரந்த, வானம் - மழை, 3. செந் தண்மை - அருள், 4. மனத்துக்கண் - மனத்தில், மாசு - குற்றம், அனைத்து - அவ்வளவே, ஆகுலநீர - ஆரவாரத் தன்மையுடையன, 5. அஃதும் - துறவறமும், 6. மனை - மனைவி, மாட்சி - பெருமை, நன்கலன் - ஆபரணம், 7. அவையத்து - சபையில், 8. என்பில தனை - புழுவை, அறம் - தருமக் கடவுள், 9. புறத்ததா - வெளியில் இருக்க, 10. அணி-ஆபரணம், 11. ஞாலத்தின்-உலகைவிட, மாண - மிக, 12. கோடாமை - நடுவுநிலைமையிலிருந்து தவறாமை, 14. விழுப் பம் - சிறப்பு, ஓம்பப்படும் - பாதுகாக்கப்படும், 16. அழுக்கறுப் பான் - பொறாமை கொள்பவன், 17. வெஃகி - விரும்பி, 13. கண்ணற- தாட்சண்யமில்லாமல், கண்ணின்று - எதிரே நின்று, 19. பதடி - நெற்பதர், 21. ஊருணி-பொதுக்கிணறு, திரு-செல்வம், உலகு அவாம்- உலகமக்களின் நலத்தை விரும்பும். 22. பாத்து - பகுத்து, ஊண் மரீஇயவனை - உண்ணும் இயல்புடையவனை, 24. இன்னா உலகம்-துன் பந்தரும் நரக உலகம், 25. அவி-யாகத்தில் சொரியும் நெய், பொரி முதலியன, வேட்டலின் - யாகம் செய்வதைவிட, 26. நோற்கிற்பவர் - தவம் செய்பவர், 27. அல்லவை - தீய செயலை, புள்-பறவைகளை, சிமிழ்த்தற்று-பிடிப்பதற்குச் சமம், 28. ஆக்கம்-செல்வம், 31. ஒறுத் தல்-தண்டித்தல், 33. நெருநல்-நேற்று, 34. பற்றற்றான் - ஆசையற்ற கடவுள், 35. காட்சியவர்-அறிவுடையவர், 36. விழுச் செல்வம்-சிறந்த செல்வம், 37. துய்த்தல்-அனுபவித்தல், 38. அரண்-கோட்டை, ஏறு- சிங்கம் போன்றவன், 41. ஒற்கம்-தளர்ச்சி, 47. பீலி-மயில் இறகு, சாகாடு-வண்டி, 48. ஆர்க்குப்-கட்டும், 49. புனல்-நீர், 53. பொச்சாப்பு- மறதி, நிரப்பு - வறுமை, 54. முறை - செங்கோல், 58. உள்ளம் - ஊக்கம், 59. மடி-சோம்பல், அடியளந்தான் - திருமால், 60. மாமுகடி- மூதேவி.

## கேள்விகள் :

1. அந்தணர் யார் ?
2. 'அஃதும் பிறன் பழிப்பது இல்லாயின் நன்று' -எஃது ?
3. உலகைவிடப் பெரியது எது ?
4. தவவேடத்தைக்கொண்டு தீயவை செய்வார்க்குக் கொடுக்கப் பட்ட உவமை யாது ?
5. அரசர்க்குள் எவன் ஏறு போல்வான் ?

### பயிற்சி

1. 'விருந்து புறத்ததா' என்று தொடங்கும் குறட்கேற்ப வழங்கும் ஒரு தொடரைக் குறிப்பிடு.
2. மகனெனல், பதடியெனல்-பொருள் கூறு.
3. 'பற்றுக பற்றற்றான்' என்று தொடங்கும் குறட்பாவிற்குப் பதவுரை எழுது.
4. 'தொட்டனைத்தூறும்' எனத் தொடங்கும் பாட்டில் வந்துள்ள உவமான உவமேயங்களை எடுத்துக் காட்டு.
5. 'அடியளந்தான் தாயது'-இதில் அடங்கிய கதையினை எழுது.

## 2. நீதி நெறி விளக்கம்

### விடாது முயல்க

உறுதி பயப்ப கடைபோகா வேனும்,
இறுவரை காறும் முயல்ப;—இறுமுயிர்க்கும்
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால்; அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில. 1

### நல்லோர் தீயன புரியார்

நல்லா றொழுக்கின் தலைநின்றார், நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்;—பல்பொறிய
செங்கண் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கண் புனத்தபைங் கூழ். 2

### வருத்தாது வரி கொள்க

குடிகொன் றிறைகொள்ளும் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலும் மாண்பே;—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல. 3

## கெடுவதைக் காட்டுங் குறிகள்

நட்புப் பிரித்தல், பகைநட்டல், ஒற்றிகழ்தல்,
பக்கத்தார் யாரையும் ஐயுறுதல்,—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி. 4

—குமரகுருபரர்.

**ஆசிரியர் வரலாறு :**

குமரகுருபரர் திருநெல்வேலியைச் சார்ந்த ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊரில் சைவ வேளாளர் குலத்தில் இன்றைக்கு 150 வருடங்கட்குமுன் பிறந்தவர். இவர் தம் காலத்து மதுரை மன்னர் திருமலை நாயக்கர் வேண்டுகோட்கு இணங்கியே நீதி நெறி விளக்கம் பாடினர். இவர் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், மதுரைக் கலம்பகம் முதலிய நூல்களையும் எழுதியுள்ளார்.

**அருஞ்சொற்பொருள் :**

1. கடைபோகாவேனும்-இறுதியில் முற்றுப் பெறாது போயினும், இறுவரைகாறும்-கடைசி வரையில், இறும்-அழியும். 2. நல்கூர்ந்தும்-ஏழையாகியும், அல்லன-தீய செயல்களை, பொறிய-புள்ளிகளையுடைய, பைங்கண்-பசிய இடம், கூழ்-பயிர்கள். 3. நட்டல்-நட்புக் கொள்ளுதல், ஒற்று-வேவுகாரர்கள், பக்கத்தார்-மந்திரிமார், ஐயுறுதல்-சந்தேகித்தல், தக்கார்-பெரியோர், நெடுமொழி-உறுதிச் சொற்கள், கோறல்-சிதைத்தல், 4. இறை-வரி, கற்று-கன்றையுடைய பசு, மாநிதியம்-பெருஞ்செல்வம்.

**கேள்விகள் :**

1. ஏன் இறுதி வரையில் ஒரு காரியத்தை முயன்று முடித்தல் வேண்டும் ?
2. புலி யாருக்கு எவ்வாறு உவமையாயிற்று ?
3. கெடுவது காட்டுங் குறிகள் யாவை ?
4. அரசர்க்கு எப்போது செல்வம் பெருகும் ?

**பயிற்சி :**

1. 'நல்லாறெழுக்கின் தலை நின்றார்' என்னும் பாட்டில் அமைந்துள்ள பழமொழியை எடுத்து எழுது.
2. கற்று, நட்டல், கோறல், பைங்கண், செங்கண்:—இவற்றைப் பிரித்துக் காட்டு.

## 3. அறநெறிச் சாரம்

### ஆன்ற குணங்கள்

மெய்ம்மை பொறையுடைமை மேன்மை தவமடக்கம்
செம்மையொன் றின்மை துறவுடைமை—நன்மை
திறம்பா விரதம் தரித்தலொ டின்ன
அறம்பத்தும் ஆன்ற குணம். 1

### அறப்பயிர் செய்க

இன்சொல் விளைநிலமா, ஈதலே வித்தாக,
வன்சொல் களைகட்டு, வாய்மை எருவட்டி,
அன்புநீர் பாய்ச்சி, அறக்கதிர் ஈனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். 2

### கல்விச் செருக்கு வேண்டா

'பலகற்றேம் யாம்,' என்று தற்புகழ வேண்டா;
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்;
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்
கச்சாணி அன்னதோர் சொல். 3

### எல்லாவற்றிற்கும் தானே காரணம்

தானே தனக்குப் பகைவனும் நட்டானும்;
தானே தனக்கு மறுமையும் இம்மையும்;
தானேதான் செய்த வினைப்பயன் துய்த்தலால்,
தானே தனக்குக் கரி. 4

—முனைப்பாடியார்.

**ஆசிரியர் வரலாறு :**

முனைப்பாடியார் இற்றைக்கு ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன், திருமுனைப்பாடி என்னும் ஊரில் சைவ சமயத்தில் பிறந்தவர்.



**அருஞ்சொற்பொருள் :**

1. பொறையுடைமை - பொறுமையுடையவராய் இருத்தல், திறம்பா - மாறாத, ஆற்ற - நிறைந்த, 2. களைகட்டு - களைகளைநீக்கி, அட்டி - இட்டு, 3. ஞாயிறு - சூரியன், துய்த்தல் - அனுபவித்தல், கரி - சாட்சி.

**கேள்விகள் :**

1. ஆன்ற குணம் பத்து எவை?
2. அறக் கதிரைப் பெற எவ்வெச்சாதனங்கள் தேவை ?
3. ஏன் கல்விச் செருக்குக் கூடாது ? இதனை உவமை கொண்டு விளக்கு.

**பயிற்சி :**

1. 'இன்சொல் விளைநிலமா' எனத் தொடங்கும் பாடலில் அமைந்த அணியைக் குறிப்பிட்டு, அவ்வணியை விளக்கிக் காட்டு.
2, 'தானே தனக்கு' என்னும் பாடற் கருத்துக்கேற்ற வெற்றி வேற்கை அடியினை எடுத்துக் காட்டு

## 4. நாலடியார்

### நன்னட்பும் தீ நட்பும்

யானை யனையவர் நண்பொரீஇ, நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் ;—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் ; எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய். 1

### தகாதவை

தான்கெடினும் தக்கார்கே டெண்ணற்க ; தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத் துண்ணற்க—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினும், உரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல். 2

### அறஞ்செய்க

'புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை,' என்றெண்ணி,
இன்னினியே செய்க அறவினை;—'இன்னினியே
நின்றான், இருந்தான், கிடந்தான்தன் கேளலறச்
சென்றான்,' எனப்படுத லால். 3

### பண்புடையார் இயல்பு

கல்லாது போகிய நாளும், பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும்,—ஒல்வது
கொடாஅ தொழிந்த பகலும், உரைப்பின்
படாஅவாம் பண்புடையார் கண். 4

### சான்றோர் இயல்பு

அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் ;—திங்கள்
மறுவாற்றும், சான்றோர் அஃ தாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின். 5

—சமணமுனிவர்கள்

**ஆசிரியர் வரலாறு :**

எண்ணாயிரம் சமணமுனிவர்கள் தனித்தனிப் பாடல்களைப் பாட, அவற்றுள் கிடைத்தவை நானூறே ஆகும். ஒவ்வொரு பாடலும் நான்கு அடிகளைக் கொண்டிருத்தலால் நாலடியார் என்னும் பெயரைப் பெற்றது. இது கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் பாடப்பட்டது ; திருக்குறளோடு ஒத்த பெருமையுடையது. அதனாலேதான் 'நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி,' என்னும் பழமொழியும் வழங்கப்பட்டு வருகிறது.

**அருஞ்சொற்பொருள் :**

1. ஒரீஇ-நீக்கி, கேண்மை-நட்பு, கெழீஇ-பொருந்தி, குழைக்கும்-விளக்கும், 2. ஊன்-தசை, கெடினும்-வாடினாலும், 3. வையகம்-உலகம், 4. கேள்-நண்பர், 5. அங்கண்-அழகிய விசாலமான, விசும்பின்-ஆகாயத்தில், பாரிக்கும்-பரப்பும், நிலா-ஒளி, திங்கள்-சந்திரன், மறு களங்கம், மாசு-குற்றம், தெருமந்து-அச்சம் கொண்டு.

**கேள்விகள் :**

1. எதைப்போன்றவர் நட்பைக் கொளல் வேண்டும் ? ஏன் ?
2. ஏன் அறவினையைச் சமயம் வந்த போதெல்லாம் செய்ய வேண்டும் ?
3. திங்களுக்கும் சான்றோருக்கும் உள்ள வேறுபாடு யாது ?
4. எந்தச் சொற்கள் ஒரீஇ, கெழீஇ என்று தம் உரு மாறி உள்ளன ?

**பயிற்சி :**

1. பிரித்துக் காட்டு :—புன்னுனி, அங்கண், மாசுறின், அகனிலா.
2. இந்நூலைக் குறித்து வழங்கும் பழமொழிகளைக் கேட்டு எழுது.

# 5. திரிகடுகம்

## நட்பினராகக் கொள்ளத் தக்கவர்கள்

தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன் :
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான் ;
கோளாளன் என்பான் மறவாதான் ; இம்மூவர்
கேளாக வாழ்தல் இனிது. 1

## செல்வத்தை அழிப்பவை

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்,— முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும், இம்முன்றும்
செல்வம் உடைக்கும் படை. 2

## நரகம் புகுபவர்

ஆற்றுனை ஆற்றென் றலைப்பானும், அன்பின்றி
ஏற்றார்க் கியைவ கரப்பானும்—கூற்றம்
வர்வுண்மை சிந்தியா தானும்இம் மூவர்
நிரயத்துச் சென்றுவீழ் வார். 3

## மெய்ப்பொருள் கண்டு வாழ்பவர்

வைததனை இன்சொல்லாக் கொள்வானும், நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும், ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும், இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார். 4

—நல்லாதனார்

### ஆசிரியர் வரலாறு :

1. திரிகடுகம் ஆவன சுக்கு, மிளகு, திப்பிலி என்பன; இம் மூன்றின் சேர்க்கையாலான மருந்து, உடல் நலத்திற்கு ஏற்ற நன்மருந்து. இம்மருந்தைப் போல இந்நூலில் காணும் ஒவ்வொரு வெண்பாவிலும் மக்கட்கு வேண்டிய மூன்று உறுதிப்பொருள்கள் கூறப்பட்டிருத்தலின், இந்நூல் இப்பெயர் பெற்றது. இந்நூல் ஆசிரியர் கடைச்சங்க காலப் புலவர்.

### அருஞ்சொற்பொருள் :

1. வேளாளன் - முயற்சியுடையவன், கோளாளன் - நல்ல குறிக் கோளுடையவன், கேளாக - நண்பர்களாக. 2. கொன்னே - வீணே, வெகுளி - கோபம், வெஃகும் - விரும்பும், சிறுமை - அற்பக்குணம், படை - ஆயுதம், 3. இயைவ - கூடியவற்றை, காப்பான் - ஒளிப் பான், கூற்றம்-இயமன், நிரயம்-நரகம். 4. கட்டி-கற்கண்டு.

### கேள்விகள் :

1. யார் யாரை நண்பராகக் கொண்டு வாழ வேண்டும் ?
2. எவை எவை செல்வத்தை அழிக்கும் ?
3. யார் யார் நரகம் சேர்வர் ?
4. யார் யார் மெய்ப்பொருள் கண்டு வாழ்வர் ?

### பயிற்சி :

1. 'திரிகடுகம்'-பெயர்க் காரணத்தை விளக்கு.
2. இது எத்தொகுப்பைச் சார்ந்த நூல் ?

## 6. தண்டலையார் சதகம்

**பன்றி பல் குட்டி ஈன்றும் பலன் யாது ?**

நன்றிதரும் பிள்ளையொன்று பெற்ருலும்
குலமுழுதும் நன்மை யுண்டாம் ;
அன்றியறி வில்லாத பிள்ளையொரு
நூறுபெற்றும் ஆவ துண்டோ ?
மன்றில்நடம் புரிவாரே! தண்டலையா
ரே! சொன்னேன்; வருடந் தோறும்
பன்றிபல ஈன்றுமென்ன ? குஞ்சரமொன்
றீன்றதனுல் பலனுண் டாமே. 1

**தானென்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்**

மானென்று வடிவெடுத்து மாரீசன்
போய்மடிந்தான் : மானே யென்று
தேனென்று மொழிபேசிச் சீதைதனைச்
சிறையிருக்கத் திருடிச் சென்றேன்,
வானென்று மரசிழந்தான்; தண்டலையார்
திருவுளத்தின் மகிமை காணீர் !
தானென்று நினைக்கையிலே தெய்வமொன்று
நினைக்குமிது சகசந் தானே ? 2

**அற்பர் இயல்பு**

விற்பனர்க்கு வாழ்வுவந்தால் மிகவணங்கிக்
கண்ணேட்டம் மிகவும் செய்வார் :
சொற்பருக்கு வாழ்வுவந்தால் கண்தெரியா
திறுமாந்து துன்பஞ் செய்வார்;
பற்பலர்க்கும் வாழ்வுதரும் தண்டலையா
ரே!சொன்னேன்: பண்பில்லாத

அற்பருக்கு வாழ்வுவந்தால் அர்த்தராத்
திரிகுடைமேல் ஆகுந் தானே. 3

—படிக்காசுப்புலவர்

### ஆசிரியர் வரலாறு :

படிக்காசுப் புலவர், தென்களந்தை என்னும் ஊரில் செங்குந்தர் மர பில் 17-ஆம் நூற்றுண்டில் திகழ்ந்த புலவர். இவர் சைவ சமயத்தவர். இவர் காலத்துச் **சீதக்காதி** என்னும் முஸ்லீம் வள்ளல் இறந்த போது பாடிய பாடல்கள் கல்லான நெஞ்சையும் கரையச் செய்ய வல்லவை. இவர் வேளிர் கலம்பகம், தொண்டை மண்டல சதகம், தண்டலையார் சதகம் முதலிய நூல்களைப் பாடியுள்ளார்.

### அருஞ்சொற்பொருள் :

1. மன்றில் - சிதம்பரம் பொற்சபையில், குஞ்சரம் - யானை, 2. வான் ஒன்றும் அரசு-தெய்வலோகம் அளவுக்குச் சென்று பரவிய அரசு, 3. கண்ணோட்டம் - தாட்சணியம், விற்பனர் - அறிஞர், சொற்பர், அற்பர், அர்த்தம்-பாதி, தண்டலை நீள் நெறி-ஓர் ஊரின் பெயர்.

### கேள்விகள் :

1. யாரால் குலமுழுமைக்கும் நன்மை ஏற்படும் ?
2. சீதையைத் திருடிச் சென்றோன் யாவன் ?
3. விற்பனர், சொற்பர் இயல்பு யாது ?

### பயிற்சி :

1. இச்சதகத்தில் காணப்படும் பழமொழிகளை எடுத்து எழுது.
2. இரண்டாவது பாட்டில் அமைந்த கதையினை விரிவாக எழுதிக் காட்டு.
3. ‘ குஞ்சரம் ஒன்று ஈன்றதனல் பயனுண்டாமே ’ என்பதை நன்கு விளக்கி எழுது.

# III. கதைப்பாக்கள்

## 1. திருவிளையாடற்புராணம்

### *குண்டோதரனுக்கு அன்னம் அளித்தது*

**மீனாட்சியம்மையார் குண்டோதரனுக்கு அன்னமிடப் பணியாளர்க்குப் பணித்தல்**

'குடையெ டுக்குமிக் குறியதாட் குறட்கொரு பிடிசோ
றிடுமின்: அப்புறஞ் சோருமால்,' எனத்தொழு தெல்லாம்
உடைய நாயகி போயினள், குறியனும் உடனே
நடைத ளர்ந்துகண் புதைந்துவாய் புலர்ந்திட நடந்தான். 1

**குண்டோதரன் உண்ணத் தொடங்கல்**

படைக்கண் ஏவலர் இறைமகள் பணியினல் பசிநோய்
தொடுத்த வன்தனைக் கொண்டுபோய்ச் சொன்றிமுன்
[விடுத்தார்;
அடுத்தி ருந்ததே கண்டனர்; அன்னமா மலையை
எடுத்த யின்றதும், அடிசிலங் கிருந்ததுங் காணார். 2

முரவை போகிய முரிவில்வான் மூரல்பால் வறையல்
கருனை தீம்பய றடுதுவை பல்வகைக் கறிகள்
விரவி தேம்படு பால்தயிர் இழுதுதேன் வெள்ளம்
வரைவி லாதன மிடலொடு வாரிவாய் மடுத்தான். 3

பல்ப ழக்குவை, வேற்றுருப் பண்ணியம், கன்னல்,
மெல்சு வைத்தண்டு, தெங்கிவை யன்றியும், வேவா
வல்சி, காய்களின் வருக்கமும் நுகர்ந்துமா றுமல்
எல்லை தீர்நவ பண்டமும் எடுத்துவாய் மடுத்தான். 4

**உண்டும் பசியாறாமை**

பாரித் துள்ளவிப் பண்டமும் பருஉங்குறுங் கையால்
வாரித் தன்பெரு வயிற்றிடை வைப்பவும் துடுவை

பூரித் தாகுதி பண்ணிய தழலெனப் பொங்கிக்
கோரித் தொன்பது வாயிலும் பசித்தழல் கொளுத்த 5

### குண்டோதரன் முறையீடு

'நட்ட மாடிய சுந்தர ! நங்கையெம் பிராட்டி
அட்ட போனகப் பனிவரை அனையவாய்க் கிடந்த
தொட்டு வாய்மடுத் திடவுமென் கடும்பசி தணியா(து)
இட்டு ணுதவர் வயிறுபோல் காந்துவது !' என்றான். 6

### அன்னக்குழியை அழைத்தல்

கவன மால்விடை யாளிபின் கடிகமழ் தென்றல்
பவன மாமலை யாட்டியைப் பார்த்துளே நகைத்துத்
தவன மாப்பசி யுடையவன் தன்பொருட் டன்ன
புவன மாதினை நினைந்தனர் ; நினைக்குமுன் போந்தாள். 7

### குண்டோதரன் பசி ஆறுதல்

அத்த யிர்ப்பதக் கிடங்கரில் அலைகடல் கலக்கும்
மத்தெ னக்கரம் புதைத்தெடுத் தெடுத்துவாய் மடுத்துத்
துய்த்தி டப்பசி விடுத்தது சுருதிநா யகன்தாள்
பத்தி வைத்துவீ டுணர்ந்தவர் பழவினைத் தொடர்போல். 8

### தண்ணீரைத் தேடுதல்

வாங்கி வாங்கிவாய் மடுத்தலும், உடம்பெலாம் வயிறாய்
வீங்கி னான்; தரை கிழிந்திடப் பொருப்பென வீழ்ந்தான்;
நீங்கு நீடுயிர்ப் பிலனுடல் புரண்டனன்; நீர்வேட்
டாங்கு நீர்நிலை தேடுவா னயினான் எழுந்தான். 9

### நீரைப்பருகிக் குண்டோதரன் மகிழ்தல்

தீர்த்தன் சடைநின் றிழிதீர்த்த மருந்தி, வாக்குக்
கூர்த்தின் புகொண்டு, குழகன்திரு முன்னர் எய்திப்

பார்த்தன் பணிந்த பதமுன்பணிந் தாடிப் பாடி,
ஆர்த்தன் புருவாய்த் துதித்தானள வாத கீதம். 10

—பரஞ்சோதி முனிவர்

பரஞ்சோதியார் வரலாற்றுக் குறிப்பு முன்பே கூறப்பட்டது.

### அருஞ்சொற்பொருள்

1. குறள்-(குண்டோதரன்), நாயகி-மீனாட்சியம்மையார். 2. படை-வேற்படை, இறை மகள் - அரசி (மீனாட்சியம்மை), பணி - கட்டளை, சொன்றி-சோறு, அடிசில்-உணவு. 3. முரவை - அரிசியில் உள்ள வரி, வான்மூரல் - வெண்மையான சோறு, கருனை - பொரிக்கறி, துவை - துவையல், விரவு-கலந்த, தேம்படு-இனிமை நிறைந்த, இழுது - நெய், வரைவு-அளவு, வறையல்-துவட்டல். 4. குவை-குவியல், பண்ணியம்-பட்சணம், கன்னல்-கரும்பு, வல்சி-அரிசி,நவம்-புதுமை. 5. பரு-பருத்த, துடுவை-நெய் அகப்பை, ஆகுதி-ஓமத்தீயில் நெய்விடுதல். 6. நட்டம்-நடனம், அட்ட - சமைத்த, போனகம்-உணவு, பனி வரை - இமயமலை. 7. கவனமால் விடையாளி-வேகமாகச் செல்லும் பெரிய இடபத்தில் வரும் சிவபெருமான், தவனம்-தாகம். 8. துய்த்திட-புசிக்க, சுருதி நாயகன்-வேதமுதல்வன் (சிவபெருமான்). 9. பொருப்பு-மலை, உயிர்ப்பு, மூச்சு, வேட்டு-விரும்பி. 10. கூர்த்து-மிகுந்து, குழகன்-அழகனான சிவபெருமான், பார்த்தன்-அர்ச்சுனன், அளவாத-அளவில்லாத.

### கேள்விகள் :

1. குண்டோதரன் உண்டும் பசியடங்காததற்குக் காட்டிய உவமை யாது ?
2. குண்டோதரன் பசியும், நீர் வேட்கையும் எவ்வாறு அடங்கின ?
3. அவன் தயிர்ப்பதக் கிடங்கரில் புகுந்து உண்டதும் பசி நீங்கியதை எவ்வுவமையால் ஆசிரியர் குறிப்பிடுகிறார் ?

### பயிற்சி :

1. குண்டோதரன் திருமண வீட்டில் இருந்த பொருள்களை உண்ட விதத்தைச் சுருக்கி எழுது.
2. பனிவரை, அலைகடல் கலக்கும் மத்து, பொருப்பு-இவைகள் உவமைகளாய் வந்துள்ள இடங்களைக் குறிப்பிடு.
3. இக்கதையினைச் சுருக்கி எழுது.
4. ‘பார்த்தன் பணிந்த பதம்’—இதில் அடங்கிய கதையினை எழுது.

## 2. குசேலோபாக்கியானம்

### குசேலர் கண்ணனைக் காணல்

#### காவலர் கண்ணனிடம் குசேலர் வருகை கூறல்

'ஆதிநாள் ஐய! நின்னோ டருங்கலை கற்று ளானும்;
போதவும் சிறந்த நட்புப் பூண்டுகொண் டவனும்; கந்தை
மேதகக் கொண்ட நீரான்: மெய்ம்மறை யவர்கு லத்தான்;
கோதறு குணத்தின் மிக்கான்; குசேலனென் றியம்பி
[னன்பேர். 1

#### கண்ணன் அழைக்குமாறு பணித்தல்

என்றலும் உவகை விம்ம, எழில்முக மலர்ச்சி காட்டப்
பொன்றலில் கருணை பொங்கிப் பொழிதர, 'விரைவி னிற்சென்
றின்றுநம் வாயில்வந்த இருந்தவத் தலைவன் தன்னை
மன்றவிங் கழைப்பீர்,' என்று வாய்மலர்ந் தருளி னனே. 2

#### வாயிற்காப்போர் குசேலரிடம் கூறல்

'நின்னுடை வரவு ரைத்தேம் நிருபனுக் கப்போழ் துற்ற
பன்னருங் களிப்பை யாமோ பகர்ந்திட வல்லம் ஐய!
முன்னமங் கிருந்த இன்பம் முழுவதும் மறந்து நின்றான்;
நன்னர்நெஞ் சுடைய நீரார் நட்பினிற் சிறந்த துண்டோ? 3

'தாயது வருகை கேட்ட தனியிளங் குழவி போன்று
நேயமிக் குடைய னாகி, நெஞ்சினில் உவகை பூப்பப்,
போயழைத் திடுமின் இன்னே! போயழைத் திடுமின்
[இன்னே!
போயழைத் திடுமின் இன்னே!' எனவிரை பொருளிற்
[சொற்றான். 4

'ஆதலின் எம்பி ரானுக் ககத்துமிக் குவகை உய்ப்ப
ஏதமில் முனிவர் ஏறே! எழுந்தரு ளுக'என் றங்கைப்

போதகங் கூப்பி னூர்கள் ; பொருக்கென எழுந்து செம்மை
வேதமுற் றுணர்ந்த ஐயன் விரைதர நடக்க லுற்றுன். 5

## கண்ணன் குசேலர் வருகை நோக்கி இருத்தல்

ஈங்கிவன் இவ்வா றெய்த இன்னம்வந் திலனென் றையன்
பூங்கதிர் வரவு பார்க்கும் பொற்புண்ட ரீகம் போலும்,
தீங்கதிர் வரவு பார்க்கும் செவ்வரக் காம்பல் போலும்,
ஓங்குமை வரவு பார்க்கும் ஒண்தனழ மஞ்ஞை போலும் 6

வளர்மறை உணர்ச்சி மிக்கான் வரவுபார்த் திருப்ப, அந்த
அளவிடற் கரிய மேலோன், ஆடமைத் தோளின் நல்லார்
கிளர்தர நின்று காக்கும் கேடில்வா யிலும்க டந்து,
தளர்வில்பல் மாதர் சூழும் தனியிடத் தணுகுங் காலே. 7

## குசேலர் கண்ணனைக் காணல்

வருந்துமோர் மிடியன் சேம வைப்பெதிர் கண்டாற் போலும்,
அருந்துண விழந்தோன் விண்ணோ ரமுதெதிர் கண்டாற்
[போலும்,
பரிந்துவெப் புழலு வோன்கற் பகமெதிர் கண்டாற் போலும்,
சரிந்தபற் றினன்மெய் ஆசான் தனையெதிர் கண்டாற்போலும்.8

எண்ணனைக் கிலங்கு மார்பம் ஈந்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம் வலம்இடம் உறக்கொண் டானை
மண்ணனைத் தும்பு ரக்கும் வாசுதே வனைம ணக்கும்
கண்ணனை துளவத் தாமக் கண்ணனைக் கண்ணில்
[கண்டான். 9

## கண்ணன் குசேலரை வணங்குதல்

காண்டலும் உவகை பூத்துக் கால்விசை கொடுந டந்தார்
ஆண்டகை அவனும் கண்ணுற் றணையுடைத் தெழுநீத்
[தம்போல்

நீண்டபூம் பள்ளி நீத்து நிலவுபேர் அன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்று பொன்னடி வணங்கி னுனல்.10

—வல்லூர் தேவராசப்பிள்ளை

**ஆசிரியர் வரலாறு :**

வல்லூர் தேவராசப் பிள்ளை யாதவர் குலத்தில் தோன்றிய **19-ஆம்** நூற்றுண்டுப் புலவர். இவர் தொண்டை நாட்டு வல்லூர் என்னும் இடத்தில் பிறந்தவர். இவர் தணிகாசல மாலை, பஞ்சரத்தினம் முதலிய நூல்களையும் எழுதியுள்ளார்; மகாவித்துவான் திரிசிரபுரம் மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் மாணவர்.

**அருஞ்சொற்பொருள் :**

உபாக்கியானம்-கிளைக்கதை. 1. மறையவர்குலம்-பிராமணகுலம், கோது-குற்றம். 2. உவகை-மகிழ்ச்சி, எழில்-அழகு. 3. நிருபன்-அரசன், பன்னரு - சொல்லுதற்கரிய, பகர்ந்திட - சொல்ல, நீரார் - தன்மையுடையோர். 4. குழவி-குழந்தை. 5. அகத்து-மனத்தில், உய்ப்ப-கொள்ள, ஏதம் - குற்றம், ஏறே - தலைவரே. 6. பொற்ற - மகரந்தப் பொடிகளையுடைய, புண்டரீகம்-தாமரை மலர், மை-மேகம், மஞ்ஞை-மயில். 7. அமை - மூங்கில். 8. மிடியன்-தரித்திரன், சேமவைப்பு-சேர்த்துவைக்கப்பட்ட செல்வம். 9. எண்ணனைக்கு - மதிப்புக்குரிய இலக்குமி தேவிக்கு, திகிரி-சக்கரம், புரக்கும்-காக்கும், கண்ணனை-(கள்+நனை) தேனுல் நனைந்த, தாமம்-மாலை. 10. பள்ளி-படுக்கை, பொன்-அழகிய.

**கேள்விகள்:**

1. குசேலர் வருகையைக் காவலர் எங்ஙனம் கண்ணனிடம் உரைத்தனர் ?
2. கண்ணன் குசேலர் வருகையைக் கேட்டு அடைந்த மகிழ்ச்சியை வாயில் காப்பவர் குசேலருக்கு எம்முறையில் அறிவித்தனர் ?
3. குசேலர் கண்ணனைக் கண்ட காட்சிக்கு ஆசிரியர் காட்டிய உவமைகள் யாவை ?
4. குசேலர் வருகையை நோக்கிக் கண்ணன் இருந்ததற்குக் கொடுக்கப்பட்ட உவமைகள் எவை ?

**பயிற்சி :**

1. இப்பாடற்பகுதியில் அடங்கிய கதையினைச் சுருக்கி எழுது.
2. 'நட்பினிற் சிறந்ததுண்டோ ?'—இடம்குறி.
3. பிரித்துக் காட்டு :—எண்ணனைக்கு, மண்ணனைத்தும், கண்ணனை, துளவத்தாமம், ஆண்டகை.

## 3. புத்தர் பொருளுரை

### தாய் புத்தர் திருவடியில் விழுந்து அழல்

சீராரும் புத்தர் திருவடியின் மேல்விழுந்து
பேராரும் கௌதமியும் பேதைமையால்—ஓராமல்
ஆவி யிழந்த அருமகவை மார்பணைத்துக்
கோவென் றழுதாள் குழைந்து. 1

### தாய் தன் மகனை எழுப்ப வேண்டல்

பாவை தனித்துயரம் பார்த்த அருளாளன்
'நீவந்த செய்தி நிகழ்த்தெ'தன்ன—'சாவதனை
நீக்க மருந்துண்டு நின்பால் எனக்கேட்டேன் ;
காக்க மகவைக் கனிந்து.' 2
[எனக் கூறினள்]

### கடுகு கொணரக் கட்டளை இடுதல்

என்றவுரை கேட்ட எங்கோன் உளமுருகி
'நன்றே மருந்துண்டு; நல்லாய்! கேள்:—சென்று
கடுகு பிடியளவு கைக்கொணர்வாய்,' என்ன
மடவரலும் சென்றாள் மகிழ்ந்து. 3

### 'இறவாத இல்லத்திலிருந்து கடுகு தேவை,' எனல்

போவாளை 'வா'என்று புத்தர் அருகழைத்துப்
'பாவாய்! இதுவரையில் பாரின்கண்—சாவாத
இல்லத் திருக்கும் கடுகன்றி ஈங்கிதற்குச்
செல்லாது மற்றொன்று தேர்.' 4
[என்று கூறினர்]

## ஒரு வீட்டில் சென்று கடுகு கேட்டல்

'அறந்தாழ் மனமுடைய ஆரணங்கிவ் வீட்டில்
இறந்தாரும் உண்டோ? இயம்பாய்—அறிந்தென்ன,
'ஆஆ ! இதுவென்ன ஆச்சரியம்!' என்றவளும்
போவாள் மனையுள் புகுந்து. 5

## இறவாதார் எவருமிலர் என்றறிதல்

நாவாய் வறண்டு நகரெங்கும் போய்க்கேட்கச்
'சாவாதார் உண்டோ தரணிதனில்?—போபோ!' என்
றெல்லாரும் சொல்ல, இயல்பறிந்து, கௌதமியும்
சொல்லாது போனளே சூழ்ந்து. 6

'என்னே கடுகும் இசைந்ததோ ?' என்றுரைப்பப்
பொன்னும் புகுந்த படிபுகல,—'அன்னய்!
பிறந்த உயிரெல்லாம் பின்னிறக்கும்; திண்ணம்;
சிறந்த மனத்தில் தெளி.' 7

[என்று புத்தர் அறிவு புகட்டினர்]

—மணி. திருநாவுக்கரசு முதலியார்

### ஆசிரியர் வரலாறு :

திருநாவுக்கரசு முதலியார் ஒரு நல்ல தமிழ் அறிஞர் ; செய்யுள் செய்தலிலும், உரைநடை எழுதுதலிலும் வல்லவர் ; பேச்சாற்றலும் நன்கு பெற்றவர், சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் புலவராய் இருந்தவர்.

### அருஞ்சொற்பொருள் :

1. சீராரும் - சிறப்புப் பொருந்திய, பேதைமை - அறியாமை, மகவை-பிள்ளையை, ஓராமல்-யோசிக்காமல். 2. பாவை-பதுமை போலும் அழகுடைய மாது, அருளாளன்-புத்தர், நிகழ்த்து-சொல், கனிந்து-இரக்கம் கொண்டு. 3. மடவரல் - பெண், 4. பாரின்கண் - பூமியில், இல்லத்து-வீட்டில், தேர்-உணர்ந்துகொள். 5. அறந்தாழ்-தருமகுணம் தழைத்த, ஆரணங்கு-அருமையான தெய்வமாது போன்றவளே, இயம்பாய்-சொல், மனை-வீடு. 6. தரணிதனில் - பூமியில், இயல்பு-உலகத்

தின் இயற்கை. 7. இசைந்ததோ - கிடைத்ததோ, பொன்-இலக்குமி போன்ற அழகுடைய கௌதமி, புகல-சொல்ல, திண்ணம்-உறுதி, தெளி-உணர்ந்துகொள்.

**கேள்விகள்:**

1. புத்தரைக் கௌதமி யாது வேண்டினுள் ?
2. புத்தர் இறந்தவனை எழுப்ப எது வேண்டும் என்றுர் ?
3. கௌதமி எந்த உண்மையை அறிந்தாள் ?

**பயிற்சி :**

1. இந்தக் கதையைச் சுருக்கி எழுது.
2. இக்கதையின் நீதி யாது ?

# IV. வருணனைப் பாக்கள்

## நாட்டு வளம்

காடெல்லாம் கழைக்கரும்பு; காவெல்லாம் குழைக்கரும்பு;
மாடெல்லாம் கருங்குவளை; வயலெல்லாம் நெருங்குவளை:
கோடெல்லாம் மடவன்னம்; குளமெல்லாம் கடலன்னம்;
நாடெல்லாம் நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம். 1

கயல்பாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி உலைப்பெய்தங்
கயலாமை அடுப்பேற்றி அரக்காம்பல் நெருப்பூதும்
வயல்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரப்பெல்லாம். 2

—சேக்கிழார்

தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைகண் விழித்து [நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்,
வண்டுகள் இனிது பாட மருதம்வீற் றிருக்கும் மாதோ ! 3

நீரிடை உறங்கும் சங்கம்; நிழலிடை உறங்கும் மேதி;
தாரிடை உறங்கும் வண்டு; தாமரை உறங்கும் செய்யாள் ;

தூரிடை உறங்கும் ஆமை; துறையிடை உறங்கும் இப்பி;
போரிடை உறங்கும் அன்னம்; பொழிலிடை உறங்கும்
[தோகை. 4
—கம்பர்

### ஆசிரியர் வரலாறு :

சேக்கிழார் சென்னைக்கடுத்த குன்றத்தூரில் சைவவேளாளர் மரபில் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பிறந்தவர் ; இரண்டாம் குலோத்துங்க சோழனுக்கு அமைச்சராய் இருந்தவர் ; அவன் வேண்டு கோளுக்கு இணங்கிப் பெரிய புராணம் பாடியவர்.

கம்பர் உவச்சர் குடியில் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி யில் திருவழுந்தூரில் பிறந்தவர் ; மூன்றாம் குலோத்துங்கன் வேண்ட இராமாயணம் பாடினவர். இவர் எழுதிய நூல்கள் சடகோபர் அந்தாதி, ஏர் எழுபது முதலியன.

### அருஞ்சொற்பொருள் :

1. கழை-மூங்கில் போன்ற, கா-சோலை, குழை-தளிர், மாடு-பக்கம், வளை-சங்குகள், கோடு-குளக்கரை, அன்ன-போன்றன, 2. தடம்-குளம், நந்து-நத்தை, ஊன்-தசை, குழிசி-பானை, வியல்-பெருமை, தாளம் - முத்து, வேரி - தேன், வரம்பு - வரப்பு. 3. தண்டலை - சோலை, கொண்டல்கள்-மேகங்கள், முழவின்-மத்தளம் போல, திரை-அலை, எழினி திரைச்சீலை. 4. மேதி-எருமை, தார் மாலை, செய்யாள் - இலட்சுமி, தூர் - வேர், இப்பி - சங்குகள், பொழில்-சோலை, தோகை-மயில்.

### கேள்விகள் :

1. சோழநாட்டு வளத்தைச் சேக்கிழார் எங்ஙனம் வருணித்தார் ?
2. சிறுமியர் வயல் ஓரத்தில் எம்முறையில் விளையாடிக்கொண் டிருந்தனர் ?
3. மருதமாகிய அரசி எம்முறையில் சிறக்க வீற்றிருந்தாள் ?
4. கோசலநாட்டில் அமைதி நிலவி இருந்தது என்பதைக் கவிஞ எப்படிக் குறிப்பிடுகிறார் ?

### பயிற்சி:

1. பிரித்துப் பொருள் கூறு :—
கழைக்கரும்பு, குழைக்கரும்பு, கருங்குவளை, நெருங்குவளை.

2. சேக்கிழார் பாட்டினின்றும், கம்பர் பாட்டினின்றும் உருவ அணிக்கு உதாரணங் காட்டு.

## V. பல்சுவைப் பாக்கள்

### மழையை வேண்டல்

காரே! உன் நீரையெல்லாம் கள்ளன் கவர்ந்தானோ?
நீரே உதவாய் நெறியாமோ?—நேரேதான்
வாரியுண்டு, வாரிமொண்டு, வாரியுண்டு, வானிருண்டு
பேரிகொண்டு நீதிரண்டு பெய். 1

—மாயூரம் வேதநாயகம் பிள்ளை

### அடிமைப்படோம்

அமுதமுறும் அன்புகொண்டு அரசுசெய்த நாட்டிலே
அடிமையென்று பிறர்நகைக்க முடிவணங்கி நிற்பதோ?
இமயந்தொட்டுக் குமரிமட்டும் இசைபரந்த மக்கள்நாம்;
இனியுமந்தப் பெருமைகொள்ள ஏற்றயாவும் செய்குவோம்.

—நாமக்கல் கவிஞர்

### வாழ்வு தழைக்க வழி

தமிழ்நாட்டுக் கல்விமுறை தமிழர் கையில்
தாய்நாட்டுத் தொழில்களெல்லாம் தனயர் கையில்
தமிழர்வா ணிகமெல்லாம் தமிழர் கையில்
தமிழ்த்துறையில் இயங்குவது தமிழர் கப்பல்
தமிழ்ச் சமுதா யப்பணியும் தமிழர் கூட்டால்,
தமிழ்நாடு தமிழர்க்கே தமிழர் சேமம்
தமிழர்களின் ஒற்றுமையே தமிழர் உள்ளம்
தமிழுள்ளம் எனில்பொலிவு தழைப்ப தாமே. 3

—சுத்தானந்த பாரதியார்

### தொழிலாளர் சிறப்பு

தொழிலாளர் மேன்மையினைச் சொல்லவெளி தாமோ?
தூயவொரு வனப்புவகைத் தோற்றுவித்தோர் அன்னார்;

எழில்மாட மாளிகைகள் கோபுரமுண் டாக்கி,
இருளுலகை ஒளிபெறவே இயற்றியவ ரன்னர் ;
அழகியநற் சோலைகுளம் ஏரியது கண்டே,
அரியபொருள் விளைநிலங்கள் அமைத்தவர்கள் அன்னர்;
குழவிநிலை தனிலிருந்த நாகரிக வாழ்வைக்
கோடுயர்மா மலைபோலே உயர்த்தியவர் அன்னர். 4

—**புதுவைச் சிவப்பிரகாசர்**

## ஆசிரியர் வரலாறு :

**வேதநாயகம் பிள்ளை** : இவர் நல்ல தமிழ் அறிஞர் ; மாயவரம் டிஸ்டிரிக்டு முனிசீப்பாய் இருந்தவர்; கத்தோலிக்கக் கிறிஸ்தவர்; 19 ஆம் நூற்றண்டுப் புலவர். இவர் எழுதிய நூல்களுள் குறிப்பிடத்தக்கவை **பிரதாப முதலியார் சரித்திரம், நீதி நூல்** என்பன.

**நாமக்கல் கவிஞர்** : இவர் சேலத்தையடுத்த நாமக்கல் என்னும் ஊரில் தோன்றி, இப்பொழுதும் சீரிய வாழ்வு நடத்துபவர்.

**சுத்தானந்த பாரதியார்** : இவர் புதுவையில் அரவிந்தர் ஆஸ்ர மத்தில் வாழ்ந்த பன்மொழிப் புலவர். இவர் எழுதிய பாடலும், உரை நடையும் பலவாகும். இப்பொழுதும் தமிழ்த் தாய்க்குப் பெருந் தொண்டு செய்யும் புண்ணியர்.

**சிவப்பிரகாசர்** : புதுவையில் வாழும் புலவர் ; தொழிலாளர் உல குக்குப் பெருந்தொண்டு புரிபவர் ; இப்பொழுது புதுவையில் தமிழாசிரி யராய் இருந்துவருபவர்.

## அருஞ்சொற்பொருள் :

1. வாரி-கடல் நீர். 2. இசை-புகழ். 3. தனையர்-பிள்ளைகள், இயங் குவது-நடப்பது, 4. வனப்பு-அழகு, எழில் -அழகு, கோடு-சிகரம்.

## கேள்விகள் :

1. எப்பொழுது வாழ்வு தழைக்குமெனப் பாரதியார் மொழிகிறர் ?
2. தமிழர் புகழ் எது முதல் எதுவரையிற் பரந்துள்ளது ?
3. வேதநாயகம் பிள்ளை மேகத்தினிடம் கூறுவது யாது ?

## பயிற்சி :

தொழிலாளர்களால் உலகம் அடைந்துள்ள சிறப்பினைச் சுருக்கி எழுது.

